ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# திருவாய்மொழியில் உபநிடதக் கருத்துக்கள்

# (Upanishadic Thoughts In Tiruvoymozhi)


ஆசிரியர்:

டாக்டர் மாடபூசி வரதராஜன்,

எம்.ஏ., எம்.ஏ., பிஎச்.டி,

தமிழ்த் துறை, துணைப்பேராசிரியர்,

திருவேங்கடவன் பல்கலைக்கழகம்,

திருப்பதி


[ ப்ரபந்நஜன கூடஸ்தரான நம்மாழ்வாரின் 85வது மணி விழாவும் 51வது நூற்றாண்டு விழாவும் கொண்டாடப்படும் பிரமாதி வருடம் வைகாசி விசாக நன்னாளில் (29. 5. 1999) வெளியிட்ட நூல் ]


ஸ்ரீ அனந்த் பதிப்பகம்

14/86, பத்மாவதிபுரம்

திருச்சானூர் ரோடு

திருப்பதி - 517503.

1999

# UPANISHADIC THOUGHTS IN TIRUVOYMOZHI

*By*

**Dr. M.VARADARAJAN, M.A.(Pol),M.A.(Tamil),Ph.D.**

முதல் பதிப்பு: மே 1999

பிரதிகள்: 1000

This book is published with the
Financial Assistance of
**TIRUMALA TIRUPATI DEVASTHANAMS**

Under their Scheme
"Aid to Publish Religious Books"

Rs : 85/-

Copies available at:
**Smt. KUMUDA VARADARAJAN**
**SRI ANANTH PUBLICATIONS**
14/86, Padmavathipuram,
Tiruchanur road,
Tirupati- 517503 Ph: 24826



**Printed at: MAS Screens,**
143-B, Medavakkam Main Road, Adambakkam,
Chennai - 88.

**Desktop Publishing : Sri Nathans Softcorp,**
131, Habibullah Road,
T. Nagar, Chennai-17

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமான் ந்யாய வேதாந்த வித்வான்
உ. வே. திருமலை அனந்தாண்பிள்ளை
190, கோவிந்தராஜன் சந்நிதி வீதி,
திருப்பதி. 517501.

# அணிந்துரை

பரமபதம் சென்று ஜீவாத்மா அநுபவிக்கத்தக்க பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபம், அதை அனுபவிக்கும் ஜீவாத்மாவின் ஸ்வரூபம், அப்படி அவன் அதையனுபவிப்பதற்குக் கருவியான உபாயத்தின் ஸ்வரூபம், அத்தகைய அனுபவத்திற்குப் பயனாகிய கைங்கர்யஸுகத்தின் ஸ்வரூபம், அவ்வனுபவத்திற்குத் தடையாகிய விரோதியின் ஸ்வரூபம் ஆகிய இவ்வைந்து விஷயங்களையே (அர்த்த பஞ்சகத்தையே) வேதங்களும் இதிஹாஸ புராணங்களும் வேத வேதார்த்தங்களை அறிந்த ஆழ்வார்களின் திவ்ய ப்ரபந்தங்களும் முக்கிய இலக்காகக் கொண்டு அறிவிக்கின்றன என்பது 'ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோரூபம்' என்று தொடங்கும் வ்ருத்தஹாரீதஸ்ம்ருதி வசனத்தின் மூலம் அறியலாகிறது. ஆழ்வார்களில் ப்ரதாநரான நம்மாழ்வார் வேதத்தைத் தமிழாகச் செய்தார் என்பது, 'அருளினான் அவ்வருமறையின் பொருள்' (கண்ணி - 8) என்று ஸமகாலத்தவரான ஸ்ரீமதுரகவிகளும், பிற்காலத்தில், 'வேதந் தமிழ் செய்த மாறன் சடகோபன்' (கண்ணி - தனியன்) என்று ஸ்ரீமந் நாதமுனிகளும், 'எய்தற்கரிய மறைகளை ஆயிரமின் தமிழால் செய்தற்கு உலகில் வரும் சடகோபன்' (இரா. நூற். 18) என்று அமுதனாரும், 'சீராரும் வேதந் தமிழ் செய்த மெய்யன் எழில் குருகை நாதன்' (உபதேச - 14) என்று மணவாள மாமுனிகளும், 'வேதத்தைச் செந்தமிழால் விரித்துரைத்தான் வாழியே' என்று வாழித்திருநாமத்தில் அப்பிள்ளையும் கொண்டாடிக் குறிப்பிட்டு

அருளியிருப்பதனால் திடப்படுகின்றது. வேதத்தைத தமிழாகச் செய்வதாவது - வேதத்திற்கு முக்கியமான குறிக்கோளாகிய முற்கூறிய அர்த்த பஞ்சகத்தைத் தமிழ்ப் பாட்டுக்களாலே விளக்கிக் காட்டியருளுகையே ஆகும். நம்மாழ்வாருடைய திவ்யப்ரபந்தங்கள் நான்கில் திருவாய்மொழி என்ற திவ்யப்ரபந்தம் இவ்வர்த்தபஞ்சகத்தை பற்றியதென்னும் விஷயத்தை ஸ்ரீபராசரபட்டரென்ற மஹாசார்யர் 'மிக்க இறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும் தக்கநெறியும் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன் யாழினிசை வேதத்தியல்' (திருவாய்மொழித் தனியன்) என்று கொண்டாடி அருளியுள்ளார். இங்கெல்லாம் வேதமென்பது வேதத்தின் முடிவான உபநிஷத்துக்களையே குறிக்கும்.

இத்திருவாய்மொழிக்கு வ்யாக்யானங்களை அருளிச்செய்த நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, அழகிய மணவாளச்சீயர் ஆகியோர் தாமருளிய ஈடுமுப்பத்தாறாயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, பன்னீராயிரப்படி என்று ப்ரஸித்தமான வ்யாக்யானங்களில், பற்பல உபநிஷத் வாக்யங்களை மறவாமல் உதாஹரித்துக் காட்டி,அப் பொருள்களையே திருவாய்மொழிப் பாசுரங்கள் விளக்கிக் கூறுவதாகக் கல்வெட்டும், செப்பேடுமாக ஆக்கியருளியுள்ளனர். இப்படி அவர்கள் அருளியுள்ளது ஸ்ரீவைஷ்ணவர்களின் பரமபாக்யத்தின் பயனாகும். 'பரமவைதிகர்களிறே ஆழ்வார்களாகிறார்' என்று பெரியவாச்சான் பிள்ளை திருநெடுந்தாண்டக வ்யாக்யானத்தில் (இந்திரற்கும் 3) ஆழ்வார்களைப் பரம்வைதிகர்களென்று கொண்டாடியிருப்பதும், வேதப்பொருளான இவ்வைந்தர்த்தங்களைத் தத்தம் ப்ரபந்தங்களில் விளங்கச் செய்வதாகிய பரமவைதிகத்வத்தைத் திருவுள்ளம் பற்றியதால் ஆகும். நிற்க.

இப்போது ஸ்ரீமான் சிரஞ்சீவி டாக்டர் மா. வரதராஜன் (எம். ஏ - அரசியல், எம். ஏ. - தமிழ்., தமிழ் விரிவுரையாளர் S. V. யூனிவர்சிட்டி

காலேஜ், திருப்பதி) என்பவர், முற்கூறிய ஆசார்யர்கள், தம்முடைய வ்யாக்யானங்களில் எடுத்தாண்டருளிய உபநிஷத் வாக்கியங்களை எல்லாம் எடுத்து, அவற்றின் ஸம்ஸ்க்ருத வ்யாக்யானங்களின்படியே பொருளை விவரித்து, திருவாய்மொழிப் பாட்டுக்களில் அப்பொருள் தொடை கொண்டு விளங்குவதை, 'திருவாய்மொழியில் உபநிடதக் கருத்துக்கள்' என்ற ஆராய்ச்சி நூலொன்றினை இயற்றி அதில் அர்த்த பஞ்சகத்தை விவரிப்பதன் மூலமாகக் காட்டியிருக்கிறார். இந்நூல் ஆய்வு செய்வோருக்கும் மற்றையோர்க்கும் மிகமிக உதவி செய்யும் வகையில் அமைந்துள்ளது. எப்போதும் உத்ஸாஹத்துடனே நம்முடைய வேதாந்த க்ரந்தங்களையே ஸேவிக்கும் பாக்கியத்தைப் பெரும்பேறாகப் பெற்ற இவர் மேன்மேலும் பற்பல உபயவேதாந்த க்ரந்தங்களைக் கசடறக் கற்று, அதன் பயனாகப் பலவாகிய புதுப்புது நூல்களை இயற்றி உலகுக்கு உதவி புரியும்படிக்கு ஈடாக, இவர்க்கு ஆயுராரோக்யைச்வர்யங்களையும், மிக முக்கியமான உத்ஸாஹசக்தியையும் அருள் செய்யுமாறு அலர்மேல் மங்கையுறைமார்பனாகிய திருவேங்கடத்துறை செல்வனுடைய பூவார்கழல்களில் ப்ரார்த்திக்கிறேன்.

திருப்பதி

17. 5. 99

தி. அ. கிருஷ்ணமாச்சாரியன்.

*Prof. M.NARASIMHACHARY,*
*Professor and Head,*
*Deparment Of Vaishnavism,*
*University of Madras,*
*Chennai -600 005.*

## FOREWORD

I have immense delight in writing this Foreword to the work "Upanishadic Thoughts in Thiruvoymozhi (Dravida Veda)" prepared with commendable erudition and perfection by my valued friend, Dr. M.Varadarajan. This he has prepared as the final report in Tamil under the UGC Major Research Project. This report has three chapters devoted to explain and expound the glory of the Upanishads, that of the Thiruvoymozhi and the Upanishadic ideas found in the Thiruvoymozhi. He has explained the Arthapanchaka in the framework of the work of Nammalvar. Dr. M.Varadarajan has probed the work of Nammalvar with great devotion and dedication and the outcome is an authentic account of the project. I congratulate him on this work which, I am sure, is going to be of great help when brought out in the form of a printed book.

Needless to say, the Ubhaya vedanta tradition gives equal importance to both the Vedas - the Sanskrit Veda and the Tamil Veda. The credit of collecting the floating songs of the God-intoxicated Alvars, setting them to music and introducing them as an integral part of temple-worship goes to Sriman Nathamuni, the first Sri Vaishnava Acharya of South India. Ramanuja who systematized the Sri Vaishnava Philosophy and Religion which became popular later as Vishistadvaita,values the Tamil Veda and was a great student and exponent of it as understood from biographical works like the Guruparamparas and Prapannamritam. It is of course true that he has not made any explicit statement to the

Tamil compositions of the Alvars in his works like the Sri Bhashya and the Gita Bhashya. But the ideas of the Alvars are implied in his works. For example, the opening verse of the Sri Bhashya which voices the prayer of Ramanuja to Lord Srinivasa that his knowledge may assume the form of loving devotion (bhavatu mama parasmin semushi bhaktirupa), seems to reflect the idea already expressed by Nammalvar in the opening pasuram of his Thiruvoymozhi,thus : "mayarvara matinalam arulinan evan avan". Here the expression "matinalam" is explained by the commentators as "bhaktirupa-apannam jnanam".

The Thiruvoymozhi, which is a finished product from the view-points of structure, style and sentiment of abiding one-pointed love for God, has been commented upon by several Acharyas such as Pillan, Nanjiyar, Vadakkutiruvidhi Pillai and Periyavachan Pillai. It is referred to in tradition as "Bhagavadvishayam" and it enjoys a unique reputation and popularity among the Srivaishnavas. Nathamuni, in his taniyan (Dedicatory stanza), glorifies the "Sathagopa-vangmayam" - the composition of Nammalvar as the veritable nectar to devotees,as the one dear to all the people ,as the one that grants all the things desired, and as the one equivalent to the Upanishad(Chandogya) which belongs to the Samaveda of 1000 branches. Of the commentators on the Thiruvoymozhi, Pillan is the first one to have written the Manipravala commentary calllled the 6000 (Arayirappadi). he was the direct disciple of Ramanuja, considered as the "jnanaputra" of the great master. That Ramanuja directed him to comment upon the Thiruvoymozhi,, highlights the greatness of this work. In one of his taniyans to Thiruvoymozhi, Parasara Bhatta, a younger contemporary of the great Acharya, refers to Ramanuja as the

one who nurtured and nursed the Tiruvoymozhi like a second mother, for which,the first mother was Nammalvar. (Cf. mutal tay satakopan moymbal, valarta itattay Iramanusan).

Anantalvan, another disciple of Ramanuja, in another Taniyan, refers to Ramanuja, thus:

"eynda perumkirti iramanusamunidan
vaynda malarpadam vananguginren
cirar sadakopan cendmizvedam tarikkum
perada ullam pera"

( I bow down to the lotus feet of Ramanuja who is the possessor of great fame, so that I may have a mind strong enough to carry the Veda uttered in chaste Tamil by the illustrious Sadakopa).

I have been trying to point out that in tradition, the position occupied by Thiruvoymozhi is unique. It is Veda itself for the orthodox, which is replete with great truths to be found in the Upanishads. It must also be admitted, ,with due regard to the Alvar and his work,the others who are not inside the tradition may not attach much importance to this claim.Call it if you may, as the most brilliance of Literature in Tamil replete with all figures of speech, and of course ,steeped in deep devotion to the Supreme Lord. But on what grounds can it be called the Veda?. Naturally, one has to answer this question with all the seriousness and sincerity it deserves, and it should not be dubbed as a sacrilegious and outrageous question. We have to answer it ,and prove that the Thiruvoymozhi is replete with metaphysical ideas like the Upanishads, that it has been inspiring people generations after generations like the Sanskrit Veda, that it is still remembered by rote and chanted in a melodious svara like the Veda. Traditions are there; but they have to be safeguarded by us.

Times have changed and are going to change. People at the advent of the 21st century, want a reasonable logical answer for everything we fondly believe in. Ours should not be a blind faith. Let us demonstrate to the world at large as to why we call the Thiruvoymozhi, the Tamil Veda. Well, the present work of Dr. Varadarajan, tries to provide the answer to this question. He, after an in-depth study of the various commentaries on the Thiruvoymozhi has come with an astounding observation that about 300 passages from 12 Upanishads are quoted by the commentators. This proves that the Thiruvoymozhi is indeed another Veda brimming with statements of a metaphysical nature which one can understand without a knowledge of Sanskrit Language. Dr.Varadarajan deserves our hearty congratulations and best wishes for the splendid work he has done under the UGC Major research scheme. This work, needless to say, is going to be a mine of information and that it will be a major source-book for many young scholars who are going to specialize in the Sri Vaishnava Religion and Philosophy involving a comparitive study of Tamil and Sanskrit works.

I am sure this will enthuse many scholars to work on similar lines and bring out the Upanishadic ideas embedded in the works of all the Alvars.

**M.Narasimhachary**

# An Introduction to UPANISHADIC THOUGHTS IN TIRUVOYMOZHI

*by*

*Dr. M.Varadarajan*

*1.0 India is a land of many religions. The religious culture of India is based on Vedas. The Vedas, which are broadly divided into Purva and Uttara Kandas, are mainly concerned with four purusaratas i,e. dharma, artha, kāma and moksa. The Purva Kanda deals with the first three purusartas, while the Uttara kanda speaks about mokṣa. The Uttara Kanda or Brahma Kanda is the concluding parts of Vedas, otherwise called Upaniṣad or Vedanta.*

*Generally Upaniṣad means 'a secret'. The Amarakosa states 'dharme rahasyaupaniṣad '(3. 3. 93). The Upaniṣads contain the essence of Vedas. Hence they must be taught by knowing the worthiness of learner. The term 'Upaniṣad' may be splitted into two words i.e. 'upa' and 'niṣad'. 'upa' means 'nearer' and 'nisad' means sitting - the compound Upaniṣad means a disciple sitting nearer to Ācārya receives the knowledge. Sudarṣana Suri says that Upaniṣad means 'nearer to Brahman'. In other words, the experience of Brahman. That means: the experience of nature of Brahman, His greatness, His attributes, His glories, His lordship etc. i.e. advāraka bhagavat pratipādakatvam upanishanatvam.[1] In Sri Ranagarājastava Uttara Sataka, Bhattar says that Lord's tenderness, prowess, love towards devotees, benevolence, beauty etc. are preserved secretly as a treasure in Upaniṣads.[2]*

*There are ten important most athentic upaniṣads which have commentaries written by Sri Vaishnava Ācāryas. They are:*

*Īśa Kena Katha Praśna Muṇḍa Māṇḍukya Tittirīḥ*
*Aitareyam ca Chāndogyam Bṛhadāraṇyakam daśa.*

*Apart from these Śvetāśvatara, Kausītaki, Subāla, Nārāyana, Athervaśikā. and Mahopaniṣads also have commentaries written by our Ācāryas.*

*Harita Smriti also states that Ṙsis who were well versed in Vedas opine that all our Vedas, Vedantas, Itihāsa and Puranas speak about the five fold knowledge or artha pañchaka only.[3] The artha pañchaka brings out the essentials of Viśiṣṭadvaita in its five fold knowledge i.e. the nature of God, the nature of soul, the nature of means, the nature of obstacles and the nature of goal. The true meanings of these five fold knowledge are hidden in Nammalvar's Tiruvoymozhi.*

### *1.1 Tiruvoymozhi and Upaniṣads*

*The Alwars, twelve in number, were the early torch-bearers of Vaishnavism. They enriched it by their soul-stiring hymns. Nammalvar is the Head among the Alwars. He composed four PrabHandams. They are Tiruvirrutam, Tiruvasiriyam, Periya Tiruvandadi and Tiruvoymozhi.*

*In Puranas like Markaṇdeya Purana, it is said that in every Kaliyuga, the eternal Vedas and the Dravida Vedas will be revealed by the spiritual saints. Like Vyasa, who at the end of the Dwaparayuga separated the Vedas into four parts i.e. Rug, Yajur, Atarva and Sāma, the eternal Tamil hymns of Alwars will be revealed by Satakopa Muni in Kaliyuga.*

*In Brahmanada Purana, it is said that the Maha Vishnu asserted to a Muni about the birth of Nammalvar and Dravida Veda. That means: the Adiseśa, a Nityasūri in Vaikunta, will disguise himself as spices of Tamarind tree, whose leaves do not fold up at night, on the banks of Tamaraparani in Alwar Tirunagari and for the sake of easy understanding of Vedas, the Lord by His solemn vow, will reveal the essence of*

*Vedas into Tamil hymns with the voice of Nammalvar, a devotee to be born in the* fourth caste, on the banks of Tamraparani, where Brahma did penance.[5]

*Vedanta Desika, in his Dramidōpaniṣad Tatparya Ratnavali, states that the first 21 hymns in Tiruvoymozhi explains the meanings of Brahma Sūtra. This can be compared with that of Ṛug veda which has 21 branches; the thousand hymns of Tiruvoymozhi is like 1000 branches of Sama veda; the thousand hymns of Tiruvoymozhi is classified into 100 decads, each comprising 11 hymns, is equal to 101 branches of Yajur Veda; Tiruvoymozhi eulogises Santi Rasa which is supplemented with other eight rasas. Hence it is equal to Atharva Veda which has eight branches.[6] So, Tiruvoymozhi has the status of equality with that of Vedas and essence of the Upanisads.*

*Alagiya Manavala Perumal Nayanar also established the equal status of Tiruvoymozhi with the Vedas as it carries the essence of Vedantas in his treatise called Ācārya Hṟidayam.[7]*

*With a view to elicit the hidden meanings of Vedantas that are rendered in Tamil By Nammalvar in Tiruvoymozhi, Sri Rāmanuja first ordered his disciple Tirukkurukaipiran Pillan to write a commentary for Tiruvoymozhi. Accordingly he wrote a commentary in manipravala language with 6000 syllabi words (grantras) which is known as Ārāyirappadi. Following this, there are four more commentaries written in different period by Ācāryas like Nanjeeyar (9000), Periyavachan Pillai (24000), Nampillai Idu (36000) and Vadhikesari Alagiya Manavala Jeer (12000).[8] Among these,Nampillai's Idu is an exhaustive commentary which speaks about Nammalvar's inner thought. There are three introductions for Idu commentary. In the first introduction, Nampillai quotes Periya vangu purattu Nambi's Opinion of stating that Tiruvoymozhi reveals the Artha Pañchaka as stated in Harita Smriti.[9]*

*Apart from this, there are more than 600 quotations from Upaniṣads in Idu. Having classified these quotations, we can identify 13 Upaniṣads i.e. Kena, Katha, Mundaka, Taittirīya, Itareya, Chāndokya, Brahadāranyaka, Śvethāśvatara, Kousheetaki, Subāla, Atarvaśikā, Maha and Nārāyaṇa Upaniṣads referred to in this commentary. Since Upaniṣads also explain the five fold knowledge, I lay my thoughts to identify the Upaniṣadic Thoughts In Tiruvoymozhi under five fold knowledge scheme.*

***1. 2 The nature of God:***

*Aspects of the nature of God may be classified thus: Brahman as three fold cause for the Universe; sentient and non-sentient beings subservient to Brahman; antaryami; beauties of God; Instructor of Vedas to Brahma; Immeasurable attributes like unlimitedness, tasteful, the light of all knowledge that illumines, Supremacy over all Gods. Simplicity and repository super excellent traits like joyfulness (anandamaya) vouch-safed wisom-love of Brahman, śarira-śariri bhāva and so on. All these can be established from Upaniṣads with that of Tiruvoymozhi hymns.*

*For example I am explaining here one aspect in the nature of God.*

***1.2.1 Brahman as three-fold cause for the Universe:***

*Brahman is the three-fold cause. That is upādana karaṇa (material cause); nimitta karaṇa (instrumental cause); and sahakari karaṇa (cooperative cause). He is the material cause for the sentient and non-sentient beings as they are inseparable from Him and He is the inner controller. He is the cooperative cause as He is taking His special attributes of knowledge, power etc. He is the one who wills creation freely, it is therefore clear that He is the instrumental or efficient cause. Like in Vaikunta also , He is combined with Nityasūris and Muktas besides divine non-sentient beings (acit) as He is the material cause. He is the cooperative cause for Nityasūris and Muktas as they have the benefit of utilising His knowledge and power; He is the*

*instrumental cause for them as He is combined with His wishes.* [10]

*In Taittirīyopaniṣad Anandavalli, it is said that 'He desired let me be many., May I create other things'.* [11] *Commenting on this, Rangarāmānuja says that the Brahman, which is Anandamaya, desired to become Devas, the human, the animals and the non-ambulants, first by creating the five constituent elements viz. ether, air, fire, water, and earth. It means individual (vyaṣti) and aggregate (samaṣti) creations done by His sankalpa.* [12]

*Following the theme, Nammalvar says*

*'mannum neerum eriyum nal vayuvum*
*vinnumay viriyuṃ em piranaiye'* [13]

*Here, the commentator Nampillai says that the Brahman, whos is the cause for the five elements, is an antaryami in creating many things i.e. the Devas, the human, the animals and non-ambulants as stated in the above upaniṣad.*[14] *Another commentator Periyavaccan Pillai says that the desire of Brahman as stated in the above upaniṣad to become many is to be thought of.*[15] *Vadhikesari Jeer says that Brahman is my Swami, as the five elements are the mode(prakāra) to create the Universe by Him as stated in Upaniṣad.* [16]

*Before the creation of this Universe, sat (real being) only was in the beginning and there is no second thing. That sat thought 'May I be many;may i grow forth'. This is clearly stated in Chāndokya Upaniṣad as follows: 'My dear son, this real being was alone in the beginning and without a second'.* [17]. *That means : in pralaya kala, it was only as sat in one name and one body. Now it has many name and many bodies. For example, in the production of a pot, clay is the upādana karana (material cause), potter, the nimmita karaṇa (instrumental cause) and the*

*potter's wheel and other accessories the sahakari karaṇa (cooperative cause). On the other hand, for the origination of the Universe, Brahman Himself solely constitutes all the above three causes. Nammalvar in a nut shell says 'Tani Mudalvanai' [18]. Here 'tani 'means Brahman who creates the Universe by His sankalpa. So He is nimitta karaṇa (instrumental cause); 'mudal 'means Brahman is upadana karaṇa (material cause) ; Sahakari Karaṇa (cooperative cause) is implied. [19] Vadhikesari Jeer says that the nature of Brahman is samastha jagadeka karaṇatvam. [20]*

*In another hymn, Alwar says 'mudal tani vittu'.[21] Here 'mudal 'is nimitta karaṇa i.e. none second to Him; 'tani 'is sahakari karaṇa i.e. matchless to Him and 'vittu' is upadana karaṇa i.e. material cause. [22]*

*Likewise, there are number of hymns in Tiruvoymozhi which explain the upaniṣadic thought with particular reference to three-fold cause of Brahman for the creation of the Universe.*

***1.3 The nature of soul (jiva):***

*The nature of soul is classifed under four aspects:i.e the state of honorific soul; the state of muktas; the nagation of independency to muktas; and the nature of status and desire to know Brahman by the soul. For example, I am explaining the state of honorific soul.*

***1.3.1 The state of honorofic soul:***

*It is said in Tatvatraya of Pillal Lokacharya that the soul is eternal; it is atomic in size; it is manifest; it possesses attributes of jnaṇa and bliss; it is the substratum of jnana; it is different from body, senses, mind, breath and intellect; it is the native of non matter; it is guided and sustained by and is ordained by Brahman. [23] Such souls have a right to live in communion with the God like eternally free souls i.e Nitya Suris and Muktas, who enjoy the constant service in Vaikunta. But these souls which*

*has sarira, have lost that right and ideal as if non-existent (asat). Such state is called indeed non-existent (asat) and when the soul has perception of Brahman, it is called sentient being (cit). It is said in Taittirīyopaniṣad that if one says that Brahman does not exist, he himself becomes non-existent.. if anyone knows that Brahman does exist, they think that he is existing on account of that.* [24] *Rangaramanujamuni says that in this mantra 'Brahma' means the blissful Brahman, that soul will attain liberation, the ignorant soul will have births in the cycle of samsara.* [25]

*Nammalvar, the only soul- mahatma, who experienced the nature of soul states as follows:*

*'mari marip pala pirappum pirantu, atiyai ataintu, ullam teri*
*iru il inpattu iru vellam yan mulkinan'* [26]

*That means Nammlavar went on taking birth after birth in Devas, the human, the animals and the non-ambulants and one day by the God's spontaneous grace, he realised Him, who alighted on Him, took him to His nearness so that he realised that He is his Swami and he is His subservient servitor become a sentient being, immersed in the inexhaustible ocean of blissful enjoyment.*

*In another hymn, Alwar states that when he realises Brahman, he is sat and when he is not able to realise Him he is asat as stated in the Upaniṣad.* [27] *In this hymn, Alwar feels that Brahman by His spontaneous grace showed His nature, Divya Mangla Vigraha, Attributes, Glory etc. by dispelling ignorance about Him. Nampillai rightly declares that Alwar's soul was changed in appearance as stated in the upaniṣad 'asanneva sa bhavati',which means the soul is in the asat state. When Brahma alighted on Alwar and revealed all His nature etc. Alwar 's state is 'santhamenam thatô vidhuhu', which means the sat state.*

*In this way, there are number of Tiruvoymozhi hymns which explains the nature of soul.*

***1.4 The nature of means:***

*The means to attain mokṣa is dealt with in two aspects:*

*i to find a path to reach the lotus feet of Brahman and Brahman himself is a means (Upaya) and*

*ii. by worshipping Brahman, one can reach Him. For example, I am explaining that the Brahman is a means for Liberation.*

***1.4.1 Brahman is a means for liberation:***

*With a view to liberate the sentient beings from the sufferings of births, God has made several efforts. But the sentient beings , due to its accumulated result of sinful actions, not aware of its eternal relations with Brahman. For such souls, God has shown the path of Karma, Jnana and Bhakti and Prapatti marga. He also showed that he himself is the means to attain Him. For those who realised this path, Brahman by His benevolence helps them to realise Him through meditation. This is well stated in the Upaniṣads. In Mundakopaniṣad it is said that this soul cannot be grasped by explicitation, nor by mere knowledge, nor by great erudition; he alone whom God Himself elects can attain Him; He singles His soul out to serve as His body, and to Him God reveals His form and attributes.*[29] *Here, the first line of the above Upanisad says that the God is not attainable either through thinking or by meditation or by much learning.*[30] *Following this statement, Nammalvar says, 'Teridal, ninaithal, ennalagaththirumal '.*[31] *Nampillai quotes the Upaniṣad line and establishes that the Brahman is not attainable by mere learning or contemplation or meditation. That implies that He can only be grasped by meditation that takes the form of Bhakti; not merely by knowing Him through texts. Hence a person, who with immeasurable*

*devotion meditates on Him, to whom only Brahman will show immeasurable love. Such loveable devotee is elected by God. That loveable person will attain Him. This is stated in the upaniṣad on the following line : 'yamevaisa vrunuthe thene labyaha' . Based on this quotation, Nammalvar, with the voice of a mother showed her devotion to God in a hymn.*

*'val mutal im matavaral, ummaik*
*kanum acaiyul naikinral; viral*
*vanan ayiram tol tunittir ummaik*
*kana nir irakkam ilire '*[33]

*Here, mother states that her daughter Parankusa Nayaki of bright forehead wastes away with grief for the sake of God and stands consumed by the burning desire. Nampillai explains Alwar's inner thought as follows: 'the grief of Parankusa Nayaki is not the means; Lord's compassion is the means for her liberation'. Further Alwar was the benefactor of Lord's grace as stated in Taittriyopaniṣad 'santhamenam thato vidhuhu '.Hence he is to be chosen by Lord.*[34] *Further Nammalvar clearly supplements the above quotation wherein Lord's selection of a devotee to whom He will shower His Divya Mangla Vigraha and attributes in another hymn.*[35] *Again with the voice of a mother, Alwar clears that the Lord only to show His Divya Mangla Vigraha by the grace to the soul whom he chooses in the following line: 'katkili unnaik kanumaru arulay kakutta kannene ennum'.*[36] *Mentioning the quotation of the above Upaniṣad Nampillai says that the Lord will exhibit his exquisite form and splendour to the subjects of His choice. It is this that embodies the Nayaki to call upon Him to appear before her.*[37]

*In congruence with the above Upaniṣad line 'thasyayisha aāthma vivruṇute thanum swam'. Nammalvar narrates the Lord's Divya Mangla Vigraha as shown to Him as follows:*

*'Vellaic curi cankotu ali enti tamaraik kannan en nencinute*

*pullaik katakinra arraik kanir'* [38]

*That means: 'How can I express the glorious vision that sways my mind, the way the lotus eyed Lord mounts the bird (Garuda) holding the spiral conch white and the discus in hand which is what you people cannot comprehend?'. Alwar expresses the glorious vision that moves in all directions in mind the Lotus eyed Lord as a Leader emitting the Garuda and adorning white coloured spiral conch and the discus in hand which one cannot comprehend.*

*Nampillai establishes that as stated in the Upaniṣad, Lord whom he choses, he will reach Him, to that person only Lord shows His attributes etc. That form is to be meditated upon.* [39]

*Sri Rāmanuja also explains in Sri Bhashya that as stated in the Upaniṣad that more hearing, reflection and meditation do not suffice to gain the Self, and then declares 'Whom the God choosen, by him it will be gained'. Now a 'chosen' one means a most beloved person; the relation being that he by whom that Self is held most dear is also most dear to the Self.* [40] *That the Lord Himself endeavours that this most beloved person should gain the Self, He himself declares in the following words:*

***'When people are always well disposed and worship Me, I am pleased and I bestow on them a disposition by which they may attain Me, to show them My mercy I dispel - immanent in their souls - the darkness of their ignorance with the radient torch of knowledge'*** [41]

*In the same way, there are number of hymns in Tiruvoymozhi which explains the nature of hymns.*

*1.5 There are number of upanisadic quotations that can explain the other two aspects of nature of obstacles and the nature of goal from the hymns of Tiruvoymozhi.*

*1.6 In this way, all the important Vedic and Upaniṣadic concepts can be traced in Tiruvoymozhi which bestows the equal status on Tiruvoymozhi and Upaniṣads.*

ஸ்ரீ:

# நன்றியுரை

சமய நூல்களின் அடிப்படை மொழிகள். ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் இரு தூண்களாகத் திகழ்வது தமிழ்மொழியும் வடமொழியும் ஆகும். இவ்விரு மொழிகளின் சங்கமமே இந்நூலுக்கு ஆதாரம். திராவிட வேதமான திருவாய்மொழியில் வடமொழி வேதாந்தமான உபநிடதங்களின் கருத்துக்கள் பொதிந்துள்ளதைப் புலப்படுத்தும் வண்ணம் இந்நூல் 'திருவாய்மொழியில் உபநிடதக் கருத்துக்கள்' என்ற தலைப்பைக் கொண்டு வெளிவர உள்ளது.

இத்தகு மேன்மை பொருந்திய தெய்வப் பணிக்கு முதற்காரணமானவர் அடியேனுடைய ஆசார்யஸ்வாமியான ஸ்ரீமான் ந்யாய வேதாந்த வித்வான் உ. வே. திருமலை அனந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாச்சார்ய ஸ்வாமியாவார். பள்ளிக்கல்வியை முடித்து, தொழிற் கல்வி பயின்று, திருவேங்கடவன் பல்கலை கழகத்தில் பணிபுரியும் காலந்தொட்டு இந்த ஸ்வாமியிடம் அருளிச் செயல், ரஹஸ்ய ஸ்தோத்ர வ்யாக்யானங்கள், மற்றும் திருவாய்மொழி பன்னீராயிரப்படி, ஈடு வ்யாக்யானங்கள் ஆகியவற்றை கசடறக் காலக்ஷேபமாகப் பலகாலம் அடிபணிந்து கேட்கும் பாக்யம் பெற்றவனானேன். திருவாய்மொழிப் பாசுரங்களை உபநிடதத் தொடரோடு ஒப்பிட்டுப் பல இடங்களில் தெளிவாகச் சுவைபட ஸ்வாமி எடுத்துரைக்குங்கால் அடியேன் அவற்றைத் தவறாமல் குறிப்பெடுத்துத் தொகுத்ததன் காரணமாக மனத்தில் எழுந்த உவகையே இந்நூல் வெளிவரக் காரணம் என்று சொன்னால் அது மிகையாகாது;

இவ்வாறு உள்ளத்தே எழுந்த அவாவினை நிறைவேற்றும் பொருட்டு, முன்னாள் தமிழ்ப் பேராசிரியர் பொன் சௌரிராஜன் அவர்கள், 'செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே' என்ற ஸ்ரீஸூக்திக்கு ஏற்ப 'திருவாய்மொழியில் உபநிடதக் கருத்துக்கள்' என்ற தலைப்பில் அடியேனை ஆய்வு செய்யுமாறு பணித்தார். இதற்கு உறுதுணையாக, முன்னாள் UGC தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீமான் உ. வே. C. ஜகந்நாதாசார்ய ஸ்வாமி, அடியேன் எழுதிய சில பகுதிகளை மட்டுமே கண்ணாரக் கண்டு களித்து 'ஆராய்ச்சிக்கு நல்ல விஷயம், கடினமானது, ஆதலின் அதனில் ஆழங்காற்படுதல் பெரிதும் போற்றத்தக்கது'. திருவேங்கடவன் அருள் என்றைக்கும் உண்டு. 'Proceed With diligence and dignity' என்று அடியேனுக்கு ஊக்கம் அளித்தார்.

இவ்வாறாகத் தொடங்கிய இவ்வாய்வுக்கு உபநிடத பாஷ்ய புத்தகங்களைத் தந்துதவி, அடியேன் எழுதித் தயாரித்த கையெழுத்து ப்ரதியை வரியடையவே படித்துத் திருத்திப் பணிகொண்ட ஆத்மகுண பரிபூர்ணராய், என் சிந்தனைக்கு இனியராய் எழுந்தருளிருக்கும் ஸ்ரீமான் உ. வே. திருமலை அநந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் திருவடித் தாமரைகளை போற்றி வணங்குகின்றேன்.

ஏற்றிய விளக்கு மேலும் படர்ந்து கொழுந்துவிட்டு எரிவது போல, ஸ்ரீ உ வே. C. ஜகந்நாதாசார்ய ஸ்வாமி தம்முடைய உடல் தளர்ந்தாலும் உள்ளம் தளராமல் இவ்வாய்வை வரியடையவே பார்த்து நேர்த்தியான முறையில் திருத்தங்கள் செய்து தமிழ் கூறும் நல்லுலகுக்கு அறிமுகம் செய்ய வழி வகுத்தார். அன்னார் திருவடிவாரத்தில் அடியேனது க்ருதஜ்ஞதையைத் தெரிவிக்கிறேன். அவ்வப்போது அடியேனை ஊக்குவித்து அறிவுரைகளை வழங்கிய முன்னாள் தமிழ்ப் பேராசிரியர் பொன் சௌரிராஜன்

அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறேன். மேலும் அடியேன் எழுதிய ப்ரதியைக் கண்டு களித்து பல ஆலோசனைகளையும் த்ந்த ஸ்ரீ உ. வே. டாக்டர் T.S.R. நாராயணன் ஸ்வாமி ) திறத்து என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவிவிக்கிறேன்.

இந்நூலுக்கு அணிசேர்க்கும் வகையில் வேதம் தமிழ் செய்த மாறனான நம்மாழ்வாரின் (ஆழ்வார் திருநகரி உற்சவர்) எழில் மிகு ஓவியத்தை அளித்தவரும், அர்ச்சாவதார எம்பெருமான்களிடம் அதிக ஈடுபாடு கொண்டு அர்ச்சாவதாரப் பிச்சராய்த் திகழுமவரான ஸ்ரீமான் வேளச்சேரி உ. வே. M.N.சீனிவாசன் ஸ்வாமி எஞ்ஞான்றும் என் நன்றிக்கு உரியவராவர்.

இரண்டு கண்களான இருமொழி கலந்து ஒளிவீசும் முகமாகிய இந்நூலுக்கு, திலகமாய் அமைந்த அடியேனுடைய ஆசார்ய ஸ்வாமி ஸாதித்தருளிய அணிந்துரையும், நெற்றிச் சுட்டியாய் அமைந்த சென்னைப் பல்கலைக்கழக வைணவத்துறைப் பேராசிரியர் உ. வே. முடும்பை நரசிம்மாச்சார்ய ஸ்வாமியின் ஆங்கில அணிந்துரையும் அழகூட்டுவது யான் பெற்ற பேறேயாகும். இவ்விருவர்திறத்து தலையல்லால் கைம்மாறிலேன்.

ஸ்ரீவைஷ்ணவ சுதர்சன பத்திரிகை ஆசிரியராய்த் திகழும் திருச்சி உ. வே. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி பதிப்பித்த பலநூல்கள் இவ்வாய்வுக்குப் பெரிதும் உதவின. அவர் திறத்து க்ருதஜ்ஞதா பூர்வமான அஞ்ஜலியை ஸமர்ப்பிக்கிறேன். மேலும் மேலக்கோட்டை திருநாராயணபுரம் வடமொழி ஆராய்ச்சி மையத்தின் தலைவரா ஸ்ரீ உ. வே.M.A.லக்ஷ்மிதாதாசார்ய ஸ்வாமி சில உபநிடதவுரைகளைத் தந்து உதவினார். அவருக்கு என் நன்றியறிதலைத் தெரிவிக்கிறேன்.

அடியேனுடைய சிறிய மாமனார் ஸ்ரீமான் உ. வே. A.M.சம்பத் அய்யங்கார் ஸ்வாமியும், அவரது மாப்பிள்ளை ஸ்ரீமான்.S.ரங்கநாதன் ஸ்வாமி, மற்றும் அவரது குமாரத்திகளும் மிக்க ஆர்வத்துடன் இந்நூலை கணிப்பொறியில் அச்சேற்றி உரிய நேரத்தில் வழங்கியதற்கு என் நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

'வேதப்பொருளே', 'என் வேங்கடவா', 'சிந்தாமணியே' என்று பலபடியாக ஆழ்வார்கள் பாடியபடியே வேத ப்ரதிபாத்யனாய், சேதனன் சிந்திப்பதையெல்லாம் வழங்கும் சிந்தாமணியாய் விளங்கும் திருவேங்கடவன் ஸமஸ்தானம் மூலம் நிதி வழங்கிய TTD அதிகாரிகளுக்கு என் நன்றியறிதலைப் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலில், அடியேனுடைய சிற்றறிவுக்கு எட்டிய அளவில் திருவாய்மொழி வ்யாக்யானங்களில் ஊற்றின்கண் நுண்மணல் போல் அமைந்த உபநிடதக் கருத்துக்களை அர்த்த பஞ்சக அடிப்படையில் பலபல பாசுரங்களைக் கொண்டு முதல் முயற்சியாக ஒப்புமை செய்யப் பட்டுள்ளது. இதனையே பின்புள்ளாரும் மேலும் முழுமையாக ஆராய வழி வகுக்கும் என்று நம்புகிறேன்.

இந்நூலில் காணநேரும் சொற்குற்றங்களையும் பொருட்குற்றங்களையும் பெரியோர்கள் பொறுத்தருளுமாறு வேண்டுகிறேன்.

மதுரகவிதாஸன்,

**மா. வரதராஜன்.**

# பொருளடக்கம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முன்னுரை

ஸ்ரீமந் நாதமுனிகள் என்னும் ஆசாரியர் கி.பி. 9ஆம் நூற்றாண்டில் தோன்றி ஆழ்வார்கள் அருளிய நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை வெளியிட்டருளினார். இவற்றுள் நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியை உபநிடதங்களின் சாரம் என்றும் திராவிட வேதம் என்றும் போற்றுவர். பின்னர் 13ஆம் நூற்றாண்டில் தோன்றிய வேதாந்த தேசிகர் என்னும் ஆசாரியர் "செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய ஓதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே", என்று அருளியபடியே திருவாய்மொழியானது உபநிடதங்களின் உட்கருத்தை விளக்குவதாகும் என்பர். 14ஆம் நூற்றாண்டில் தோன்றிய மணவாள மாமுனிகள் என்னும் ஆசாரியர் தாம் அருளிய திருவாய்மொழி நூற்றந்தாதியில் "உயர்வே பரன்படியை உள்ளதெல்லாம் தான் கண்டு உயர்வேத நேர் கொண்டு உரைத்து ...," என்று திருவாய்மொழியின் வேதமாம் தன்மையை எடுத்துக் காட்டியுள்ளார். எனவே 'திருவாய்மொழியில் உபநிடதக்கருத்துக்கள்' என்ற இந்தத் தலைப்பில் திருவாய்மொழியின் பெருமை, உபநிடதங்களின் பெருமை, திருவாய்மொழியில் உபநிடதக்கருத்துக்கள் ஆகியவை இடம் பெறுகின்றன.

# திருவாய்மொழியின் பெருமை

## நம்மாழ்வாரும் திருவாய்மொழியும்

எம்பெருமானுடைய இயற்கை இன்னருளாலே அறிவின்மை நீங்கப் பெற்று மதியாகிய ஞானத்தையும் நலமாகிய பக்தியையும் பெற்றவர் நம்மாழ்வார். குருகூர் என்று குலாவப்படும் ஆழ்வார்திருநகரியில் எம்பெருமான் பாரெல்லாம் உய்யும் பொருட்டு சேனைமுதலியாரை நம்மாழ்வாராக அவதரிக்கச் செய்தான். இவ்வாழ்வார் உடையநங்கையாருக்கும் காரியாருக்கும் கலி தொடங்கி 43வது நாளில் வைகாசி விசாகத்தில் அவதரித்தவர். எம்பெருமான் அருளிய ஞானபக்தியைக் கொண்டு ஆழ்வார்திருநகரியில் திருப்புளியாழ்வார் கீழே எம்பெருமானது இயல்பு, வடிவு, குணம், திருவிளையாடல்கள் ஆகியவற்றை அநுபவித்துக் கொண்டு அவ்வநுபவத்தில் மூழ்கியிருந்தார்.

அப்போது திருக்கோளூரில் முன்னே அவதரித்திருந்த ஸ்ரீமதுாகவிகள் வடநாட்டிற்கு யாத்திரையாக எழுந்தருளி, கங்கைக்கரையில் ஒருநாள் இரவு தென்திசையில் சூரியன் உதயமானாப் போன்ற ஒளியைக் கண்டு ஆச்சரியப்பட்டார். மறுநாளும் அப்படியே தோன்றியது அவ்வொளி. அப்பேரொளியை நோக்கிப் பயணம் கொண்டு, இறுதியாக ஆழ்வார்திருநகரி வந்து, அவ்வொளி தோன்றக் காணாமையாலே அயலாரிடம் வினவினார். நம்மாழ்வார் அவதரித்து அங்குள்ள திருப்புளியாழ்வார் கீழே எழுந்தருளியிருக்கிறார் என்ற செய்தி கேட்டு அங்குச் சென்று பார்த்த போது ஆழ்வார் இறையனுபவத்தில் இருக்கக் கண்டார்.'இவருக்கு காதால் கேட்டல், கண்ணால் பார்த்தல், ஆகியன உண்டோ' என்று பரீட்சை செய்ய நினைத்து ஒரு கல்லை அவர் முன்பு எறிந்தார். அதன் ஓசை கேட்டுக் கண் விழித்துப் பார்த்தார்.

'இவர் எல்லாம் அறிந்தவராயிருப்பார் ; இவருடைய வார்த்தைகளைக் கேட்க வேணும்', என்று எண்ணி, **'செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்'**, என்று கேட்டார் மதுர கவிகள். ஆழ்வாரும் **'கானலோடிய காட்டிலே சிறியது பிறந்தால் அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'**, என்று பதிலளித்தார். அதாவது கானல் நீர் போலிருக்கும் விஷயங்களால் நிறைந்த பிறவிக் கடலில் உண்டான ஜீவன் அதிலே அத்தையே தின்று (அவ்விஷயங்களையே அனுபவித்து) அதிலே கிடக்கும் என்றபடி. இதனைக் கேட்ட மதுரகவிகள் மகிழ்ச்சியுற்றவராய் ஆழ்வார் திருவடிகளிலே விழுந்து தன்னை ஏற்றுக் கொள்ள வேணுமென்று வேண்ட, ஆழ்வாரும் அருள் புரிந்து திருவிலச்சினை செய்து **'தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்'** என்கிறபடியே இறை அனுபவத்துக்குப் போக்குவீடாகத் தாம் அருளிய பிரபந்தங்களைச் சொல்லி மதுரகவிகளைக் கொண்டு பட்டோலை செய்வித்தார். அவருக்கு முன்பு துவாபரயுக முடிவில் சில ஆழ்வார்களும் பின்பு சில ஆழ்வார்களும் அவதரித்துத் தீந்தமிழ்ப் பாக்களைப் பாடினர். அவ்வாழ்வார்களுடைய அருளிச்செயல்களான நாலாயிரத்திவ்வியப் பிரபந்தங்கள் காலக்கொடுமையால் மறைந்துப் போயின; நல்லடிக்காலமான 9ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஸ்ரீமந் நாதமுனிகள் என்னும் ஆசார்யரின் பெருமுயற்சியாலும் நம்மாழ்வாரின் அருளாலும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் வெளி வந்தது.

இவற்றுள் நம்மாழ்வார் அருளிய பிரபந்தங்கள் நான்கு. அவையாவன: திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி.

நூறு பாசுரங்கள் கொண்டு அந்தாதி முறையில் அமைந்த முதல் பிரபந்தமான திருவிருத்தத்தில், தனக்குப் பிறப்பிறப்புத் தொடர்ச்சி விலகவேண்டும் என்று வேண்டுகிறார் ஆழ்வார்.

ஏழுபாடல்கள் கொண்ட திருவாசிரியத்தில் ஸம்சார ஸம்பந்தம் விலகப்பெற்றவர்கள் அநுபவிக்கத்தக்க எம்பெருமானது பேரழகு முதலானவற்றை அநுபவிக்கிறார் ஆழ்வார்.

அந்தாதி வகையில் 87 பாடல்கள் கொண்ட பெரிய திருவந்தாதியானது ஆழ்வாருடைய இறையநுபவத்தால் உண்டான ஆர்வமிகுதியைச் சொல்லுகிறது.

அந்தாதியில் அமைந்து 1102 பாசுரங்கள் கொண்ட திருவாய்மொழியில் திருவின் மணாளனாகிய திருமால் அறிவுடைய இந்த ஆத்மாவுக்குத் தஞ்சமாகப் பற்றப்பட்டவனாய்க் கொண்டு வெறுப்புக்கு இலக்கான பாவங்களின் நீங்குதலையும் விருப்புக்கு இலக்கான தன்னைப் பெறுதலையும் (தன்னைப் பெற்று அநுபவித்தலையும்) தானே (வேறொன்றையும் எதிர்பாராமலேயே) பண்ணிக் கொடுப்பான் என்பதைத் தெரிவிக்கிறார் ஆழ்வார்.

திருவாய்மொழி என்பது அழகிய வாய்மொழியாகும். வாய்மொழியானது மனத்தால் நினைந்து பேசாது வாயினால் மட்டும் பேசிய மொழியாதலின் வாய்மொழி எனப்படுகிறது என்றும் வாய்வெருவின மொழி வாய்மொழி என்றும் சொல்லுவர்.

இத்தகைய பெருமை பெற்ற திருவாய்மொழிக்கு வேதத்தோடுள்ள ஒப்புமை கீழ் விளக்கப்படுகிறது.

## வேதமும் திருவாய்மொழியும்

வேதமாவது எப்பொழுதும் ஒரே மாதிரியாய் ஒன்றோடொன்று பிணைக்கப்பட்டு உச்சரிக்கப்படும் சப்தங்களின் கூட்டம். இவ்வேதமானது படைப்பின் ஆரம்பத்தில் எம்பெருமானால் நான்முகக் கடவுளுக்கு உபதேசிக்கப்பட்டு, அவனால் தமது சீடர்களுக்கு உபதேசிக்கப்பட்டு, சீடர்களுக்குச் சீடர்களான பரம்பரையாய் நமக்குக் கிடைத்திருக்கின்றது என்பர். (காதி ப்ர. ப. அனந்தாசார்யஸ்வாமி நூற்றாண்டு மலர் ப. 7). ஆதியில் வேதம் நான்கு வகைகளுடன் நூறு ஆயிரம் சாகை(கிளை)களுடன் கூடிய ஒரே விருக்ஷமாக (மரமாக) இருந்தது

என்றும், துவாபரயுக முடிவில் வியாசரால் ருக், யஜுர், சாமம், அதர்வணம் என்று நான்காகப் பிரிக்கப்பட்டது என்றும் சொல்லுவர் (ஸ்ரீராமானுஜ ஸித்தாந்த பிரகாசிகை ப. 2).

வேதம் கரும பாகம் என்றும் பிரம்ம பாகம் என்றும் இரண்டு வகையாயிருக்கும். கரும பாகமாவது ஆராதிக்கப்படுபவனான ஸர்வேச்வரனுக்கு ஆராதனமாகச் செய்யும் யாகம் முதலிய கர்மாக்களையும் அவற்றை அநுட்டானத்தில் கொண்டு வரும் முறையையும் சொல்லுவதாகும். இதற்கு வழிநூல்களாகத் திகழ்வது மநுஸ்ம்ருதி முதலான தர்ம சாஸ்திரங்களாகும். பிரும்ம பாகமாவது ஆராதிக்கப்படுவனான ஸர்வேச்வரனுடைய இயல்பு, வடிவு, குணம், திருவிளையாடல்கள், செல்வங்கள் ஆகியவற்றையும் அவனை அடைவதற்குரிய உபாயத்தையும் அதனுடைய பயனையும் நேராகத் தெரிவிப்பதாகும். இதற்கு வழிநூல்கள் ஸ்ரீராமாயண பாரதங்களான இதிகாசங்களும் விஷ்ணு புராணம் முதலான புராணங்களுமாகும்.

புராணங்களில் திருவாய்மொழியின் பெருமையும் நம்மாழ்வாரின் பெருமையும் அமைந்த இடங்கள் காட்டப்படுகின்றன.

நித்யமான வேதகாதைகளும் திராவிட வேதத் தொகுதியும் ஒவ்வொரு கலியுகத்திலும் ஆத்ம ஞானமுள்ள பெரியோர்களால் வெளிப்படுத்துகின்றன என்றும் வியாச முனிவர் எப்படி துவாபர யுக முடிவில் மிகப் பெரியதாய் ஒன்றாய் இருந்த வேதங்களை ருக், யஜுர், சாமம், அதர்வணம் என்று நான்காகப் பிரிக்கப் போகிறாரோ, அப்படியே தாமே நித்யமாக உண்டான தமிழ்ப் பாசுரங்களை சடகோப முனிவர் வெளியே கொண்டு வரப் போகிறார் என்றும் வடமொழி வேதங்கள் போலவே திராவிட வேதங்கள் நித்யங்கள் தான் என்றும் மார்க்கண்டேய புராணம் கூறுகிறது (திவ்ய பிரபந்த வைபவ விவேக: ப. 21).

மகாவிஷ்ணு ஒரு முனிவரிடம் நம்மாழ்வார் அவதாரம் பற்றியும் திராவிட வேதங்கள் பற்றியும் கூறியது பிரம்மாண்ட புராணத்தில்

அறியற்பாலதாகும் (மேலது ப. 23).

அதாவது மேலொரு காலத்தில் எம்பெருமானுடைய படுக்கையான அரவரசன் உறங்காப்புளி மரமாகத் தோன்றப் போகிறான் என்றும் எல்லோருடைய விருப்பத்தை நிறைவேற்றும் இயல்புடைய எம்பெருமான் தன் ஸங்கல்பத்தால் வேதங்களைத் தமிழுருவில் கொண்டு வருவதற்காக முதல் மூன்று வருணங்களையன்றி நான்காம் வருணத்தை அடைந்தவனாய்க் கொண்டு சடகோபன் என்னும் பெயர் பெற்ற தன் பக்தனாகத் தோன்றப் போகிறான் என்றும், தாம்ரபரணீ நதியின் எந்த வடகரையில் எம்பெருமான் முன்பு நான்முகனால் அர்ச்சிக்கப்பட்டானோ, அந்த இடத்தில் சடகோபன் என்னும் பெயருடைய தனது அவதாரம் உண்டாகப் போகிறது என்றும் அப்போது மிகமிக உயர்ந்த திராவிட வேதங்கள் தோன்றப் போகிறது என்றும் சொன்னபடி.

இவ்வாறு திருவாய்மொழியின் பெருமையைப் புராண வசனங்கள் மூலம் காட்டியது மட்டுமின்றியே நம்மாழ்வார் தாமே அருளிய திருவாய்மொழியிலும் காட்டியது அறியற்பாலதாகும்.

பழையதான வேதார்த்தத்தை அருளிச்செய்கையாலே எம்பெருமான் மனிதனாய் வந்து அவதாரங்கள் செய்தாற் போலே வேதமும் தமிழாய் வந்து ஆழ்வார்கள் மூலமாக வெளி வந்ததை 'முந்தையாயிரம்' என்பர் (திரு. 6. 5. 11.—. 36 படி).

'தோற்றங்கள் ஆயிரம்' என்கிறபடியே பகவதவதாரம் போலே ஆவிர்ப்பவித்தன (தோன்றின) மந்த்ரங்களை ருஷிகள் காணுமா போலே என்பர் நம்பிள்ளை (6. 8. 11. 36 படி). 'பகவதாவிர்ப்பாவம்' போலே 'வேதாவிர்ப்பாவமான ஆயிரம்' என்பர் வாதிகேசரிஅழகிய மணவாளச் சீயர் (6. 8. 11. 12 படி).

மேலும் 'தெளிவுற்ற ஆயிரம்' என்பதனால் வேதார்த்தமானது

ஆழ்வார் திருவாய்மொழியினாலே எல்லோரும் சொல்லுவதற்குத் தகுதியாய் எல்லா சந்தேகங்களையும் தீர்த்து தெளிவடைந்தது என்பர் நம்பிள்ளை (9. 5. 11. 36 படி).

'சடகோபன் சொல்லப்பட்ட ஆயிரம்' என்கிறபடியே வேதம் போலே தான் தோன்றியன்றிக்கேயிருக்கை, பரத்துவம் (மேன்மைத் தன்மை) போலே வேதம். தான் அர்ச்சாவதாரம் போலே திருவாய்மொழி என்பர் நம்பிள்ளை. (8. 10. 11. 36 படி).

'அடியார்ந்த ஆயிரம்' என்கிறபடியே 'ருக்வேதம் போலவும், பாதங்களால் பூர்ணமான ஆயிரம்' என்பர் நம்பிள்ளை (3. 7. 11. 36 படி).

## ஆசார்யர்கள் போற்றிய திருவாய்மொழி

இவ்வாறு ஆழ்வார் தமது திருவாக்காலே திருவாய்மொழியின் பெருமையை அருளியபடியே ஆசார்யர்களும் ஆழ்வார் திருவுள்ளத்தைப் பின்பற்றி விரிவாகச் சொன்ன இடங்கள் பல காணப்படுகின்றன.

நம்மாழ்வாரை ஆசார்யராகப் பெற்ற மதுரகவியார் தாம் அருளிய கண்ணிநுண்சிறுத்தாம்பு என்ற பிரபந்தத்தில்,

**'அருள் கொண்டாடும் அடியவரின்புற**
**அருளினான் அவ்வருமறையின் பொருள்'** (பா : 8)

என்று அருளுகிறார். அதாவது எம்பெருமானுடைய க்ருபையைக் கொண்டாடுகின்ற பக்தர்கள் மகிழும்படி அந்த அருமையான வேதத்தின் உட்பொருள்களைத் தமிழ் மொழியில் திருவாய்மொழியாகப் பாடினார் ஆழ்வார் என்றபடி. 'நல்லோர்க்கு வேதமே அழியாச் செல்வமாகும்' (ஸாஉறி ஶ்ரீரம்ருதரஸதாம்) என்றும், 'எல்லா நற்சுவைகளையும் உடையவன்' (ஸர்வ ரஸ:) என்றும் 'ஆனந்த ஸ்வரூபனன்றோ அந்த பரம்பொருள்' (ரஸோவை ஸ:) என்றும் நித்யமான ஸத்வ குணமுடையவர்க்கல்லது தோற்றாத வேத ரகஸ்யமான உபநிடதத்தின்

பொருளைத் திருவாய்மொழியாக ஆழ்வார் அருளினார் என்றுட உரைப்பர் பெரியவாச்சான்பிள்ளை. (மேலது உரை ப. 175-76)

ரஜோ குணமும் தமோ குணமும் நிறைந்தவர்க்குத் தன்னை மறைத்து, ஸத்வ குணம் நிறைந்தவர்க்கு நன்மையை உபதேசிக்குமதாக நான்கு வேதமாகையாலே அந்தப் பொருளை வெளியிட்டார் என்றுப் ஆயிரம் சாகைகளைக் கொண்ட ஸாம வேதம் தெரிவிக்கும் பொருளை ஆழ்வார் ஆயிரம் பாசுரங்களில் அருளினார் என்றும் அநுபவிப்ப அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் (மேலது உரை ப. 184). மேலும்

**'மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள்**
**நிற்கப் பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான்'** (பா. 9

என்று போற்றுகிறார் மதுரகவிகள். வேதத்தின் பொருளாவது, 'எல்லா வேதங்களாலும் அறியப்படுபவன் நானே' (வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:) என்றும் 'வேதப் பொருளே என்வேங்கடவா' என்றும், 'வேதாந்த விழுப்பொருள்' என்றும் சொல்லுகிறபடியே எல்லா வேதங்களுட எம்பெருமானது இயல்பு, வடிவு,குணம், செல்வங்கள் முதலானவற்றை ஒரு மிடறாக ஓதித் தலைக்கட்டியதாகும். அதன் உட்பொருளாவது எம்பெருமானாகிற விஷயத்தைத் தெரிவிக்கிற பகுதி புறப் பொருளாய் எம்பெருமானது அடியார்களைப் பற்றி தெரிவிக்கும் பகுதி உட்பொருளாய் இருக்கும் என்பர் நாயனார். (மேலது உரை ப 197-98).

இப்படியாக வேதார்த்தங்களைத் திருவாய்மொழியில் சேர்த்து அத்திருவாய்மொழியின் அர்த்தங்களைத் தன்நெஞ்சில் நிற்கும்படி ஆழ்வார் செய்ததாக அனுபவிப்பார் மதுரகவிகள்.

அடுத்து, நம்மாழ்வாரின் அருள் பெற்ற நாதமுனிகள் திருவாய்மொழிக்கு அஞ்சலி செலுத்தும் வகையில்,

**'भक्तामृतं विश्वजनानुमोदनं सर्वार्थदं श्रीशठकोपवाङ्मयम् /**
**सहस्रशाखोपनिषत्समागमं नमाम्यहं द्राविडवेदसागरम् //'**

'பக்தாம்ருதம் விச்வஜநாநு மோதநம்
ஸர்வார்த்தம் ஸ்ரீசடகோப வாங்மயம் /
ஸஹஸ்ர சாகோபநித் ஸமாகமம்
நமாம்யஹம் திராவிட வேதஸாகரம் //'

என்கிற தனியன் மூலம், தொண்டர்க்கு அமுதமாய் இருப்பதும்,எல்லா மக்களையும் ஆனந்திக்கச் செய்வதும், அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய எல்லா உறுதிப் பொருள்களையும் கொடுக்கவல்லதும்,

ஆயிரக்கணக்கான கிளைகளையுடைய உபநிடதத்தில் திரட்சியாயிருப்பதுமான நம்மாழ்வாருடைய தமிழ் வேதக்கடலைத் தான் வணங்குவதாகக் கூறுகிறார். அதாவது 'ஸாம வேதமாய்', 'சாந்தோக்யோபநிஷத்தாய்', அதன் சாரமான உத்கீதமாய், அத்தையாயிற்று இப்படி பாடியருளினார் என்றும் இது 'ஸர்வவேதஸாகரஸாரமான உபநிஷத்தினுடைய திரட்சியாயிருக்கும்' என்றும் சொல்லுவர் பிள்ளைலோகார்ய சீயர். (பகவத் விஷயம் தனியன் உரை ப. 44).

நாதமுனிகளின் குமாரரான ஈச்வர முனிகள் மற்றொரு தனியனில் நம்மாழ்வாரை,

'திருவழுதி நாடென்றும் தென்குருகூரென்றும்
மருவினிய வண்பொருநலென்றும்—அருமறைகள்
அந்தாதி செய்தானடியிணையே எப்பொழுதும்
சிந்தியாய் நெஞ்சே தெளிந்து'

என்று போற்றுகிறார்.

அதாவது 'வைகுண்ட புவந லோகம்' என்கிறபடியே வைகுண்ட நாட்டை வேதமும், அமுத வெள்ளமான விரஜையாற்றாலே சூழப்பட்ட வைகுண்ட நகரத்தையும் அங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் திருவடிகளை உபநிஷத்தும் ஓதினாப்போலே, அந்த அருமறையின் தாத்பர்யமான அர்ச்சாவதாரமான ஆதிப்பிரான் என்னும் எம்பெருமானின் திருநாட்டையும் அவன் இருக்கிற ஆழ்வார்திருநகரியாகிய ஊரையும் அதற்கு வடக்கே உள்ள வண்பொருநல் ஆற்றையும் அங்கே உள்ள எம்பெருமான் திருவடிகளையும் குறிப்பிட்டு திருவாய்மொழியை அருளினார் ஆழ்வார் என்பர் சீயர் இதனுரையில் (பகவத் விஷயம் தனியன் உரை ப. 46).

**'வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்**
**ஆன்ற தமிழ்மறைகளாயிரமும் —— ஈன்ற**
**முதல் தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த**
**இதத்தாய் இராமாநுசன்'**

என்னும் தனியனில் பட்டர், திருவாய்மொழியை வளர்த்த இதத்தாய் வளரச் செய்த தாய் இராமாநுசர் என்கிறார். அதாவது ஆழ்வார் அவதரித்து வீடு பேற்றுக்கு எழுந்தருளின பின்பு புறச்சமயினரால் செஞ்சொல்லான திருவாய்மொழி தாழ்த்தப்பட்டு வருவதை இராமாநுசர் கண்டு ஸ்ரீபாஷ்ய நூலாலே அதனை போக்கி அந்த ஸ்ரீபாஷ்யத்தை திருவாய்மொழிக்கு காவலான வேலியாக்கினார் என்றும் திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்னும் ஆசார்யர் மூலமாக திருவாய்மொழிப் பொருளை வளர்த்து வந்தார் என்றும் பணிப்பர் பிள்ளைலோகார்ய சீயர் (மேலது ப 51).

திருமலை அனந்தாழ்வான் என்னும் ஆசார்யர் தாம் அருளிய தனியனில்

**'ஆய்ந்த பெருஞ் சீரார் சடகோபன் செந்தமிழ்**
**வேதம் தரிக்கும் பேராதவுள்ளம் பெற'**

என்று திருவாய்மொழியைச் செந்தமிழ் வேதம் என்றே குறிப்பிடுகிறார். (மேலது ப. 48). மேலும் பட்டர்,

'மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும்
தக்க நெறியும் தடையாகித் - தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும்

யாழினிசை வேதத்தியல்'

என்ற தனியன் மூலம் திருவாய்மொழியானது இறை இயல்பு, ஆன்ம இயல்பு, இறைவனை அடையும் வழி, தடையாகவுள்ள ஊழ்வினை, வாழ்வாகிற உயர்ந்த உறுதிப்பொருளான வீடு பேற்றின் இயல்பு ஆகியவற்றைக் கூறுகிறது என்பர். (மேலது ப. 52).

குருகையர்கோன் யாழினிசை வேதமாவது வடமொழி வேதம் போல தான் தோன்றியன்றிக்கே 'எய்தற்கரிய மறைகளை ஆயிரம் இன்தமிழால் செய்தற்குலகில் வரும் சடகோபன்' என்னும்படி நம்மாழ்வாரால் அருளிச் செய்யப்பட்ட பெருமையையுடையது என்றும் 'யாழினிசையே' என்று இசை வடிவான இறைவனைத் தெரிவிப்பதாகையாலே 'பண்ணார் பாடல்' என்றும் 'பண்புரை இசை கொள் வேதம்' என்னலாம் படி 'பண்கொள் ஆயிரம் என்று ஸாமவேதம் போலே திருவாய்மொழியும் சுவையுடையதாயிருக்கும்' என்பர் பிள்ளை லோகார்ய சீயர் (மேலது ப. 54).

திருவரங்கத்தமுதனார் என்னும் ஆசார்யர் தாம் அருளிய இராமாநுச நூற்றந்தாதியில் 'மாறன் பணித்த மறை' என்றும் 'தென்குருகைப்பிரான் பாட்டென்னும் வேதப் பசுந்தமிழ்' என்றும் 'பண்தரு மாறன் பசுந்தமிழ்' என்றும் 'எய்தற்கரிய மறைகளை ஆயிரம் இன் தமிழால் செய்தற்கு உலகில் வரும் சடகோபன்' என்றும் 'உறுபெருஞ் செல்வமும்..........செந்தமிழ் ஆரணம்' என்றும் பலபடியாகத்

திருவாய்மொழியை மறையாகப் பேசுவது அறியற்பாலதாகும்.

வேதாந்த தேசிகர்[1] என்னும் ஆசார்யர் தாம் அருளிய த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியின் முதல் ச்லோகம் மூலமாக நம்மாழ்வாருடைய திருவாய்மொழியானது உபநிஷத்து வாங்மயமான நூல்களின் ஸாரமானது என்று கூறுவர். மேலும் இந்நூலின் தொடக்க ச்லோகத்தில் திருவாய்மொழியோடு வேதத்தை ஒப்புமை காட்டியுள்ளார். அதாவது திருவாய்மொழியின் முதல் 21 பாசுரங்கள் பிரம்ம சூத்திரத்தின் அர்த்தங்களை முறையே விவரிக்கின்றன. இப்பாசுரங்கள் 21 சாகைகளாகப் படிக்கப்படுகிற ருக்குக்களுடைய வகைகளை வெளிப்படுத்துகின்றன. இதிலுள்ள 1000 பாட்டுகள் அர்த்தத்தோடு கூடின ஸாம வேதத்தின் முழுமையான 1000 சாகைகளையும் பின் செல்லுகின்றன என்பர். திருவாய்மொழியில் அர்த்தத்தோடு கூடிய பத்து பத்துக்களாலான 100 திருவாய்மொழிகளால் 101 சாகைகளாகக் கொண்ட யஜுர் வேதமும் காணப்படுகிறது. சாந்தி ரஸத்தை முக்கியமாகக் கொண்ட இப்பிரபந்தத்தில் அதுக்குத் தேவையான மற்ற எட்டு ரஸங்களும் தென்படுவதால் எட்டு சாகைகளைக் கொண்ட அதர்வண வேதமும் தோன்றுகிறது. எனவே திருவாய்மொழியானது எல்லா வேதமாம் தன்மையும் ஒரு சேரத் தன்னிடம் கொண்டதாகும். (தாத்பர்யரத்னாவளி பகவத் விஷயம் பகுதி 1 ப. 204). மேலும் வேதாந்த தேசிகர் முற்கூறியபடியே அதிகார ஸங்கிரகம் என்னும் பிரபந்தத்தில் 'செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே' என்ற தொடர் மூலம் திவ்யபிரபந்தங்கள் முக்கியமாகத் தமிழ் வேதமாகிய திருவாய்மொழியைத் தெளிய ஓதி வேதத்தின் உட்பொருளைத் தெளிவாக அறிய முடியும் என்று கூறுவர் (அதிகார சங்கிரகம்).

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தாம் அருளிய 'ஆசார்ய இருதயம்' என்னும் நூலில் திருவாய்மொழிக்கும் வேதத்துக்கும் உள்ள ஒப்புமையையும் திருவாய்மொழி வேதாந்தமான உபநிடதத்தின் சாரம் என்பதையும் மிகவும் அற்புதமாக நிரூபித்து உள்ளமை அறியலாம்:

**'ஓதுவார் ஓத்தெல்லாம் எவ்வுலகத்து எவ்வெவ்வையும்'** (திருவாய்மொழி 3.1.6) என்று நம்மாழ்வார் அருளியபடியே வேதமானது அத்யயனம் செய்பவர்களின் வேறுபாட்டாலும் உலகங்களின் வேறுபாட்டாலும் பலவகைப்பட்டிருக்கிறது. பலவகைப்பட்ட வேதத்தில் வடமொழி தென்மொழி என்ற பிரிவுகள் உள. வடமொழி வேதமானது ருக், யஜுர், ஸாமம், அதர்வணம் என நான்கு பிரிவுகளையுடையது. இவை 'ஸமஸ்க்ருதம் திராவிடம் என்கிற பிரிவு ருகாதி பேதம் போலே' என்பர் நாயனார் (ஆசார்ய இருதயம் நூற்பா. 40).

அகத்திய முனிவரால் பரப்பப்பட்ட தென்மொழியும் வடமொழிபோலே அநாதியானது. 'செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி' என்று திருமங்கையாழ்வார் தமிழ் ஓசையை வடமொழியோடு ஒரு சேரப் பேசுவதாலும் வடமொழிக்கு முன்பாக 'செந்திறத்த தமிழ்' என்று சொல்லியிருப்பதனாலும் தமிழ்மொழி அநாதியாகும் என்று மாமுனிகள் உரைப்பர் (நூற்பா. 40). இதனால் அநாதியாக உள்ள தன்மை வடமொழிக்கும் தென்மொழிக்கும் பொதுவாக உள்ளது.

நம்மாழ்வார் வடமொழி மறை என்ற வேதத்தை 'மறை' என்ற சொல்லால் குறிப்பிடுகிறார். மறைக்கு வடமொழி என்று அடை கொடுத்ததால் தென்மொழி மறையும் உண்டு என்பது தெளிவாயிற்று. இது பற்றியே 'வடமொழி மறை என்பது தென்மொழி மறையை நினைத்திறே' என்றார் நாயனார் (நூற்பா. 42).

தமிழ் மறை அல்லது திராவிட வேதம் என்பது நம்மாழ்வார் அருளிய நான்கு பிரபந்தமாகும். இந்த நான்கு பிரபந்தங்களான தமிழ் மறைக்கு அங்கங்களாக அமைந்தவை திருமங்கையாழ்வார் அருளிய ஆறு பிரபந்தங்களாகும். வேதத்துக்கு அங்கங்களும் உபாங்கங்களும் இருப்பது போல இத்தமிழ் மறைக்கும் அங்கங்களும் உபாங்கங்களும் உள்ளன. தமிழ் மறையினுடைய வேதமாம் தன்மையையும்

திருமங்கையாழ்வாரின் பிரபந்தங்களுடைய அங்கமாம் தன்மையையும் மற்றையாழ்வார்களுடைய நூல்களின் உபாங்ககங்களாந் தன்மையையும் நினைத்து, 'வேத சதுஷ்டய அங்க உபாங்கங்கள் பதினாலும் போலே இந்நூலுக்கும் இருந்தமிழ் நூற்புலவர் பனுவல் ஆறும் மற்றை எண்மர் நன்மாலைகளும்' என்று அருளிச் செய்தார் நாயனார். (நூற்பா. 43). வேத சதுஷ்டயமானது ருக், யஜுர், ஸாமம், அதர்வண வேதங்களாகும். நம்மாழ்வார் அருளிய தமிழ் மறையான நான்கு பிரபந்தங்களை,

'இயற்பா மூன்றும் வேதத்ரயம் போலே,
பண்ணார் பாடல் பண்புரை இசை கொள்
வேதம் போலே',

என்று அருளுகிறார் நாயனார் (நூற்பா. 50). அதாவது இயற்பாவான திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஆகிய மூன்றும் முறையே ருக், யஜுர், அதர்வண வேதங்களின் ஸ்தானமாகும். 'பண்ணார் பாடல்' என்பது பண்ணோடே சேர்ந்துள்ள இசையையுடைய திருவாய்மொழியாகும். இத் திருவாய்மொழியானது 'பண்புரை வேதம்' என்றும் 'இசை கொள் வேதம்' என்றும் சொல்லுகிறபடியே பண்ணையும் இசையையும் உடைய ஸாமவேதம் போலே இருக்கும் என்பர் மாமுனிகள் (மேலது உரை ப. 29). மேலும் ஸாமவேதமானது

பலவகைப்பட்டிருக்கையாலே, திருவாய்மொழி ஸாமவேதத்தில் உபநிடதபாகமானசாந்தோக்யத்தை ஒக்கும் என்பதை, 'சாந்தோகனென்று......தொண்டர்க்கமுதென்ன தேவாந்நமாக்கி மஹா கோஷ நல்வேத ஒலி போலே மஹாத்யய்நம் என்னப் பாடுகையாலே இத்தைச்சாந்தோக்ய ஸமம் என்பர்கள்' என்று அருளினார் நாயனார் (நூற்பா. 52). அதாவது எல்லா வேதங்களைக் காட்டிலும் ஸாமவேதத்தின் ஒலியானது பெரிதாக ஆயிற்று; அந்த ஸாமவேத ஒலியாலே பிரம்மாண்டமாகிய மண்டபமானது மிகவும் எதிர் ஒலி செய்தது என்கிற பிரமாணத்தாலும் 'பாடுநல் வேத ஒலி' என்று ஆழ்வார் தாமே அருளிச் செய்கையாலும் திருவாய்மொழி சாந்தோக ஸாமத்தில் உபநிடத பாகமாக சாந்தோக்யத்துக்கு ஒப்பாகும் என்றபடி (மேலது உரை ப. 30).

இது பற்றியே இத்திருவாய்மொழியின் துணைக் கொண்டு பிரம்ம சூத்திரங்களின் பொருளை அறுதியிட்டார் இராமாநுஜர் என்பதை 'பாஷ்யகாரர் இது கொண்டு சூத்திர வாக்கியங்கள் ஒருங்க விடுவர்' என்பர் நாயனார் (நூற்பா. 65).

மேலும் 'பாரத கீதைகளின் வேத உபநிஷத்வம் போலே இதுவும் வியாக்யை ஆனாலும் வேத ரகசியமாம்' என்பர் நாயனார் (நூற்பா. 68). அதாவது வேதத்திற்கு வழிநூலாய் அதன் பொருளை விரித்துப் பேசுகின்ற மகாபாரதமும் அதன் சாரமாக பகவத் கீதையும் முறையே வேதமும் உபநிடதமும் ஆவன போன்று இத்திருவாய்மொழியும் வேதத்தின் விரிவுரையான வழிநூலானாலும் வேத ரகசியமான உபநிடதம் என்றபடி (மேலது உரை ப. 46).

பூர்வாசார்யர்களுள் கடைக்குட்டியான மணவாள மாமுனிகள், 'உயர்வே பரன்படியை உள்ளதெல்லாம் தான் கண்டு உயர் வேத நேர் கொண்டு உரைத்து..........' என்கிற பாசுரம் மூலமாக உயர்த்தியையுடைய பரம்பொருளின் தன்மைகள் முழுவதையும் ஆழ்வார் மனதில் கண்டு உயர்ந்த பிரமாணமாகிய வேதத்தின் சாயையிலே திருவாய்மொழியை

அருளிச் செய்தார் என்று அருளியது காணலாம் (திருவாய்மொழி நூற்றந்தாதி பாடல் 1).

இத்தகைய பெருமை வாய்ந்ததும் வேத ரகசியமான உபநிடதக் கருத்துக்களைத் தெரிவிப்பதுமான திருவாய்மொழிக்குத் திருக்குருகைப்பிரான் பிள்ளான், நஞ்சீயர், நம்பிள்ளை செப்பு நெறியைப் பட்டோலைப் படுத்திய வடக்குத் திருவீதிப்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் என்னும் ஆசாரியர்கள் முறையேஆறாயிரப்படி,ஒன்பதினாயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி ,இருபத்து நாலாயிரப்படி, பன்னீராயிரப்படி என்ற வியாக்யானங்களை அருளியுள்ளனர் (உபதேசரத்தினமாலை பா. 39).

இவ்வியாக்யானங்களில் ஆழ்வார் திருவுள்ளக் கருத்துக்கு ஏற்ப, வேத, உபநிடத, புராண, இதிகாச தொடர்களைக் கொண்டு ஆசாரியர்கள் திருவாய்மொழிக்கு உரை வழங்கியது குறிப்பிடத்தக்கதாகும்.

இவற்றில், நம்பிள்ளை தாமருளிய ஈடு முப்பத்தாறாயிரத்தில் பல உபநிடதத் தொடர்களை ஒப்புமை செய்து உரை வழங்கியுள்ளதை அறியும் வகையில் உபநிடதங்களின் பெருமை அடுத்த இயலில் இயம்பப்படுகிறது.

# உபநிடதங்களின் பெருமை

பேரின்பப் பெருவாழ்வு பெற இன்றியமையாதது தத்துவ உணர்வு. இவ்வுணர்வைப் பெற எம்பெருமான் வேத சாஸ்த்ரங்களைக் காட்டிக் கொடுத்தான். வேதமானது கர்ம காண்டம் என்றும் ப்ரம்ம காண்டம் என்றும் இரண்டு பகுதிகளைக் கொண்டதாகும். கர்ம காண்டமாகிய பூர்வ பாகம், யாகம் முதலிய கர்மங்களைச் சொல்லுகிறது. ப்ரம்ம காண்டமாகிய உத்தர பாகம் வேதாந்தம் என்றும் உபநிஷத்து என்றும் சொல்லப்படுகிறது. இது எம்பெருமானுடைய ஸ்வரூபம், குணம், வடிவம் முதலானவற்றைப் பற்றி பேசுவதாகும்.

பொதுவாக 'உபநிஷத்து' என்பதற்கு இரகசியம் என்று பொருள். **धर्मेरहस्युपनिषनित्** 'தர்மே ரகஸ்யுபநிஷத்' என்று அமரகோசம் (3. 3. 93) கூறுகிறது. உபநிடதங்கள் வேதங்களின் சாரமாகும். அதனால் அவை கற்றுக் கொள்பவர்களின் தகுதியைப் பார்த்து உபதேசிக்கப்பட்டன. உபநிடதங்களில் உள்ளதை மற்றவர்கள் அறியக்கூடாது என்பது மட்டுமல்லாமல், அதை அறிவதற்குரிய தகுதியைப் பெற்றிருக்க வேண்டும் என்ற நிர்பந்தத்தால் உபநிடதங்களை மறைத்துப் பாதுகாத்து வந்தனர். எனவே உபநிடதம் என்பது இரகசியம் அல்லது மெய்யறிவை இரகசியமாகத் தெரிவிப்பதாகும்.

'உபநிஷத்' என்ற சொல் 'உப' 'நிஷத்' என்று இரண்டு சொல்லாகி, 'உப' என்பதனால் 'அருகில்' என்றும் 'நிஷத்ய' என்பதனால் 'உட்கார்ந்து' என்றும் பொருளாய் 'உபநிஷத்' என்பதற்கு ஆசார்யன் அருகில் உட்கார்ந்து சீடனால் ஞானத்தைப் பெறுவதாகும்.

**'उप-समीपे, निषद्य-उपविघ्य,शिष्येण आचार्यात् ग्टह्यमानत्वात् उपनिषदिति'** உபநிடதங்களிலுள்ள உண்மைப் பொருள்கள் ஒருவனுடைய புலன்களால் எளிதில் அறிய முடியாது என்றும் யோக பயிற்சியினால் உணர முடியும் என்றும் கடோபநிடதமும் (1. 3. 12) ச்வேதாச்வதர உபநிடதமும் (1. 3) கூறுகின்றன. உபநிடதம் என்பது வேதங்களின் கடைசி பகுதியான வேதாந்தம் என்று முண்டகோபநிடதம் (3. 2. 3) கூறுகிறது. வேதாந்தமே பரம இரகசியம் என்று ச்வேதாச்வதர உபநிடதம் (5. 22) கூறுகிறது. ஸ்ரீபாஷ்யத்துக்கு வியாக்யானம் இட்டருளிய சுதர்சனசூரி என்னும் ஆசார்யர் 'உபநிஷத்'என்பதற்கு **'ब्रह्मणि उपनिषण्णेत् उपनिषत्'** என்று பொருள் வழங்குகிறார். அதாவது பிரம்மத்தின் அருகில் இருப்பது; பிரம்மாநுபவம் - பிரம்மாநுபவமாவது எம்பெருமானின் பெருமை, ஸ்வரூபம், வடிவம், குணம், திருவிளையாடல்கள் பற்றி அனுபவிப்பதாகும். **'अद्वारक भगवत्प्रतिपाद क त्वं उपनिषणत्वम्'** இங்ஙனே எம்பெருமானுடைய மென்மை, ஆற்றல், அடியாரிடம் அன்பு, அருள், அழகு-முதலான குணங்கள் உபநிடதத்தில் நிதி சேமித்து வைப்பது போல் இரகசியமாக இருப்பதை,' **न्यधायिषत ये गुणा निधिनिधाय मारण्यकेषु'** என்று பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் (36) அருளியது நினைதற்பாலதாகும். இதில் ஆரண்யகம் என்று உபநிஷத்துக்களைச் சொல்லுகிறது; அரண்யத்தில் ஓதப்பட்டவை என்று காரணப் பெயர் (ஸ்ரீர. ஸ்தவம் - ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி உரை ப. 67).

மேலை நாட்டறிஞர்களும் உபநிடதம் என்ற சொல்லுக்குப் பலபடியாகப் பொருள் வழங்கியுள்ளனர்.

மேக்ஸ்முல்லர் என்ற தத்துவ ஞானி 'உபநிடதம் என்ற சொல்லானது ஒரு குறிப்பிட்ட மக்களால் தூய மனதுடன் தெய்வத் தன்மையை அறிதலாகும்' என்பர். (A History Of Ancient Sanskrit Literature p 166).

உபநிடதங்களின் தத்துவத்தை விளக்கிய பேராசிரியர் டியூஸன், உபநிடதம் என்ற சொல்லுக்கு 'இரகசியக்குறி', 'இரகசியப்பெயர்', 'இரகசியத்தைத் தன்னுள் கொண்டது', 'இரகசியச் சொல்', 'இரகசியத் திட்டம்', 'இரகசிய அறிவுரை' என்று பலபடியாகக் கூறுகிறார் (The Philosophy of Upanishads. p 15).

உபநிடதங்களில் மிகச் சிறப்பு வாய்ந்தவை பத்து, அவையாவன:

(1) ஈச (2) கேந (3) கட (4) ப்ரச்ந (5) முண்டக (6) மாண்டூக்ய

(7) தைத்திரீய (8) ஐதரேய (9) சாந்தோக்ய (10) பிருஹதாரண்யக உபநிடதங்களாகும். இவை தவிர பண்டைச் சான்றோர்களால் சிறப்பாகத் தங்கள் தங்கள் பாஷ்யங்களில் கையாளப்பட்டவை சுவேதாச்வதர, கௌஷீதகி, சுபால, நாராயண, அதர்வசிகா மகோபநிடதங்களாகும். மேற்கூறியவற்றில் பல உபநிடதத் தொடர்களைப் பூர்வாசார்யர்கள் மேற்கோள் காட்டி, ஒப்புமை சொல்லி, திருவாய்மொழியின் வேதமாம் தன்மையை நிறுவியுள்ளனர்.

அவையாவன: (1) கேன (2) கட (3) முண்டக (4) தைத்திரீய (5) ஐதரேய (6) சாந்தோக்ய (7) பிருஹதாரண்யக (8) சுவேதாச்வதர (9) கௌஷீதகி (10) சுபால (11) அதர்வசிகா (12) நாராயண (13) மகோபநிடதங்களாகும். இவற்றின் பெருமையைக் காண்போமாக:

(1) கேனோபநிடதம்:

ஸாம வேதத்தில் ஜைமிநீய ப்ரஹ்மணத்தில் ஓதப்படுவது கேனோபநிடதமாகும். ஜைமிநீய உபநிடதம் என்றும் தலவகாரோபநிடதம் என்றும் கூறுவர். 'கேன' என்ற சொல்லால் முதலில் தொடங்கப்படுவதால் இப்பெயர் வந்தது. இது இரண்டு பகுதியாய், நான்கு காண்டங்களைக் கொண்டதாகும். எல்லா ஞானங்களுக்கும் பர ப்ரம்மமே காரணம் என்றும், இந்த்ரியங்களுக்கு அப்பாற்பட்டது என்றும் இவ்வுபநிடதம் கூறுகின்றது. எல்லா உபநிடதங்களின் சாரமும் இவ்வுபநிடதத்தில் அடங்கியதாகப் பண்டிதர்கள் கூறுவர்.

(2) கடோபநிடதம்:

கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சேர்ந்த இவ்வுபநிடதம் இரண்டு அத்தியாயங்களைக் கொண்டது. ஒவ்வொன்றும் மூன்று பகுதிகளைக் கொண்டதாகும். வீடு பேற்றின் உண்மை நிலையையும் அதற்கு உபாயமாயிருக்கும் எம்பெருமானைத் துதித்தலையும் சொல்லுகிறது இவ்வுபநிடதம்.

(3) முண்டகோபநிடதம்:

அதர்வ வேதத்தைச் சேர்ந்த இவ்வுபநிடதம் முண்டகம் எனப்படும் மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்டதாகும். ஒவ்வொரு பிரிவிலும் கண்டங்கள் இரண்டாய் மொத்தம் ஆறு பகுதிகள் உள. இவ்வுபநிடதம் முழுதும் நாராயணனையே பேசுகிறது. எல்லா வித்யைக்கும் அடிப்படையான பிரம்ம வித்யையின் பயனை இவ்வுபநிடதம் வெளியிடுகிறது.

(4) தைத்திரீயோபநிடதம்:

கிருஷ்ண யஜுர் வேதத்திலுள்ள தைத்திரீய சாகையில் ஆரண்யகத்தில் 5வது ப்ரச்நமும் 6வது ப்ரச்நமும் தைத்திரீயோபநிடதமாகும். 5வது ப்ரச்நத்தில் சிக்ஷாவல்லி, ஆனந்தவல்லி, ப்ருகுவல்லி என்ற மூன்று பிரிவுகள் உள. சிக்ஷை என்கிற வேதாந்தத்தில் கூறும் விஷயங்களை குறிக்கும் சிக்ஷாத்யாயம் முதலிலேயிருப்பதால் முதல் வல்லிக்கு சிக்ஷாவல்லி என்றும், எம்பெருமானுடைய ஆனந்த குணத்தின் அளவைச் சொல்ல முடியாமையை உபதேசிப்பதால் ஆனந்தவல்லி என்றும், 'ப்ரஹ்ம சப்தம்' தொடங்கப் பெற்றதால் ப்ரஹ்மவல்லி என்றும் பெயராம். ப்ருகுவுக்கு அவர் தந்தையான வருணன் உபதேசித்ததால் இது ப்ருகுவல்லி என்றும் சொல்லப்படுகிறது. இவ்வுபநிடதத்தில் எம்பெருமானை அடைவதற்கு உபாயமான பரவித்யை கூறப்படுகிறது.



(5) ஐதரேயோபநிடதம்:

இது ருக் வேதத்தைச் சேர்ந்ததாகும். ஆறு காண்டங்களைக் கொண்டது. ஆத்ம ஷட்கம் என்றும் வழங்குவர்.

(6) சாந்தோக்கிய உபநிடதம்:

பத்து உபநிடதங்களில் ஒன்பதாவதான இவ்வுபநிடதம் ஸாம வேதத்தைச் சார்ந்ததாகும். ஸாம வேதத்துக்கே சாகைகள் அதிகம். அதில் தாண்டி சாகையின் கடைசி பாகம் இவ்வுபநிடதமாகும். வியாசர் எழுதிய பிரம்ம சூத்ரத்தில் முதலிருந்து கடைசி வரை அதிகமாக இவ்வுபநிடதம் எடுத்தாளப் பெற்றது இதற்கு ஒரு பெருமையாகும். எட்டு அத்தியாயங்களைக் கொண்டதாய், ஒவ்வொரு அத்தியாயமும் பல பிரிவுகளைக் கொண்டதாகும். முதலிரண்டு அத்தியாயங்கள் ஸாம விஷயமாகப் பலவற்றை விதிக்கின்றன. மூன்றாவது அத்யாயமுதல் முக்கியமான பக்தி மார்க்கங்களைப் பற்றி அறிவிக்கின்றன. நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழி ஸாம வேதத்தின் உபநிடத பாகமான சாந்தோக்கியத்தை ஒக்கும் என்பர் அழகியமணவாளப்பெருமாள் நாயனார்.

(7) பிருஹதாரண்யக உபநிடதம்:

முக்கியமான பத்து உபநிடதங்களில் இவ்வுபநிடதம் பழமையானதும் இறுதியானதுமாகும். வேதத்தின் கடைசி பாகம் ஆரண்யகம் எனப்படுவதால் எல்லா உபநிடதங்களுமே ஆரண்யங்களாகும். அவற்றில் இது சிறந்த பொருளைக் கூறுவதால் பெருமை பெற்றிருப்பது போல உருவிலும் பெரியதாயிருப்பதால் பிருஹதாரண்யக உபநிடதம் எனப்படுகிறது. இது சுக்ல யஜுர் வேதத்தைச் சார்ந்த சதபத ப்ராம்மணத்தின் கடைசி பாகமாகும். இது காண்வ சாகையிலும் மாத்யந்திர சாகையிலும் உள்ளது. எட்டு அத்தியாயங்கள் கொண்ட இதில் முதலிரண்டு அத்தியாயங்கள்

ஞானத்தைப் பற்றிச் சொல்லாமல், ஸோம யாகத்தைச் சேர்ந்ததோர் அங்கத்தை உரைப்பதால் இவற்றை விட்டு மேலுள்ள ஆறு அத்தியாயங்களுக்கே பாஷ்யம் இயற்றியுள்ளனர். ஒவ்வொரு அத்தியாயத்தின் உட்பிரிவுகளுக்கு ப்ராம்மணம் என்றும் ஒவ்வொன்றிலும் பல ப்ராம்மணங்கள் உள.

(8) ச்வேதாச்வதர உபநிடதம்:

இது 108 உபநிடதங்களில் பதினோராவதாகும். ஆறு அத்தியாயங்களைக் கொண்ட இவ்வுபநிடதமானது சித்து, அசித்து, ஈச்வரன் என மூன்றாகத் தத்துவங்களை வகுத்ததற்கு மூலாதாரமாகும். இது கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சேர்ந்ததாகும்.

(9) கௌஷீதகி உபநிடதம்:

நான்கு அத்தியாயங்களைக் கொண்ட இவ்வுபநிடதம் கௌஷீதகி முதலான ருஷிகள் அறிவிக்கும் உபாஸனங்கள் பற்றியதாகும். இவர்கள் கொண்ட ப்ராம்மணத்தின் இறுதியில் கௌஷீதகி ஆரண்யமே கௌஷீதகி உபநிடதமாகும். இது ருக் வேதத்தைச் சார்ந்ததாகும்.

(10) சுபாலோபநிடதம்:

பதினாறு அத்தியாயங்களைக் கொண்ட இவ்வுபநிடதம் நாராயணனே பரம்பொருள் என்பதை நன்கு அறிவிப்பதாகும். இவ்வுபநிடதத்தில் சொல்லப்பட்ட வித்யையானது ஆசார்யனானவன் தன் பிள்ளைக்கும் சீடனுக்கும் தவிர யாவருக்கும் உபதேசிக்கக் கூடாது என்றும் பரீட்சை செய்யாமல் உபதேசிக்கக் கூடாது என்றும் அப்படி இவ்வுபநிடதத்தில் உபதேசித்த ஸாரங்கள் எல்லாம் தேவதையிடம் போலே ஆசார்யனிடமும் சமமான சிறந்த பக்தியுள்ள மகாத்மாவுக்கே விளங்கும் என்றும் சொல்லுவதாகும். இது சுக்லயஜுர் வேதத்தைச் சேர்ந்ததாகும்.

(11) அதர்வசிகோபநிடதம்:

இரண்டு காண்டங்களைக் கொண்ட இவ்வுபநிடதம் பைப்பலாதருக்கு அதர்வர் என்னும் ருஷி உபதேசித்ததாகும.

(12) மகோபநிடதம்:

சாம வேதத்தைச் சேர்ந்த இவ்வுபநிடதம் நாராயணனுடைய பெருமையைச் சொல்லுவதாகும்.

(13) நாராயணஉபநிடதம்:

கிருஷ்ணயஜுர் வேதத்திலுள்ள தைத்திரீய சாகையில் ஆரண்யகத்தில் ஆறாவது ப்ரச்நம் நாராயண உபநிடதம் எனப் பிரிக்கப்பட்டு எண்ணப்படுகின்றது. இது யஜ்ஞன் என்ற நாராயணன் என்னும் ருஷியினால் வெளியிட்டது பற்றி யாஜ்ஞிகீ என்றும் நாராயண உபநிடதம் என்றும் வழங்குவர். நாராயணாநுவாகம் நடுநாயகமாகத் திகழ இப் ப்ரச்நமானது முற்றிலும் நாராயணனையே நன்கு உரைப்பதால் நாராயண உபநிடதம் என்றும், அவனை ஆராதிக்கும் முறையை உணர்த்துவதால் யாஜ்ஞிகீ என்றும் சொல்லுவர். (ஸ்ரீ உ. வே. உத்தமூர் வீரராகவாசார்ய ஸ்வாமி, உபநிஷத் ஸாரம், உபய வேதாந்த க்ரந்தமாலை 2, 3 புஸ்தகங்கள்).

இத்தகைய பெருமை வாய்ந்த உபநிடதங்கள்,

**'प्राप्यस्य ब्रह्मणो रूपं प्राप्तुश्च प्रत्यगात्मन : |**
**प्राप्तधुपायं फलं प्राप्तेस्तथा प्राप्तिविरोधिच ||**
**वदन्ति सकला वेदाः सेतिहास पुराणकाः |**
**मुनयश्च महात्मानो वेदवेदार्थ वेदिनः || '**

ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந:|
ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததா ப்ராப்திவிரோதிச ||
வதந்தி ஸகலா வேதாஸ் ஸேதிஹாஸ புராணகா:|
முநயச்ச மஹாத்மாநோ வேத வேதார்த்த வேதிந: ||

(ஹாரீத ஸ்ம்ருதி)

(அடையத்தக்க எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும், அடைபவனான ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தையும், அடைதற்கேற்ற உபாய ஸ்வரூபத்தையும், அடையும் பலனின் ஸ்வரூபத்தையும் அப்படியே அடைவதற்கு விரோதியாய் இருப்பதன் ஸ்வரூபத்தையும் இதிகாச புராணங்களுடன் கூடின எல்லா வேதங்களும் சொல்லுகின்றன; வேதங்களையும் வேதாந்தங்களானவற்றையும் அறிந்தவர்களான மகாத்மாக்களான மகருஷிகளும் சொல்லுகிறார்கள்) என்கிறபடியே அடையத்தக்க எம்பெருமானின் தன்மை, அடைபவனான ஜீவாத்மாவின் தன்மை, அடையும் வழி, அடைந்து பெறும் பயன், அடைவதற்குத் தடை ஆகிய வேதஸாரமான அர்த்த பஞ்சகத்தையே தெரிவிக்கின்றன.

மேற்கூறிய உபநிடதங்களில் அடங்கிய அர்த்தபஞ்சகக் கருத்துக்கள் திருவாய்மொழியிலும் அமைந்ததைக் காணலாம்.

# திருவாய்மொழியில் உபநிடதக் கருத்துக்கள்

வைணவ சமயத்தில் தத்துவங்கள் எனக் கூறப் பெறுவன 26 ஆகும். அவை பூதங்கள் ஐந்து, பொறிகள் ஐந்து, புலன்கள் ஐந்து, தொழிற்கருவிகள் ஐந்து ஆகிய இருபதுடன் மனம், அகங்காரம், மஹத், அவ்யக்தம் ஆகிய அகக்கூறுகள் நான்கும் சேர்ந்து 24 ஆகும். இவற்றுக்கும் மேலாக ஜீவாத்மா, ஈச்வரன் என்ற இரண்டும் சேர்த்து வைணவ தத்துவங்கள் 26 ஆகும். இவற்றை வைணவ அதிகாரிகள் மூன்றாகப் பகுப்பர். அவையாவன: சித்து (அறிவுள் பொருள்), அசித்து (அறிவற்ற பொருள்), ஈச்வரன் என்பனவாகும். 'சிதசிதீச்வர தத்துவங்கள் ப்ரகார ப்ரகாரிகள் ஐக்யத்தாலே ஒன்று என்னலாய் ஸ்வரூபபேதத்தால் பல என்னலாயிருக்கும்' என்பர் நம்பிள்ளை (முதல் ச்ரிய: பதி - 36 படி). அதாவது அறிவில் பொருளும், அறிவுள் பொருளும், எம்பெருமானும் அடை (விசேஷணம்), அடைகொளியின் (விசேஷ்யம்) ஒற்றுமையாலே ஒரே பொருள் என்னலாய் தனித்தனியான வேறுபாட்டாலே பல பொருளாய் இருக்கும் என்றவாறு.

இந்த அடிப்படை வைணவ சமயக் கருத்துக்களை வைணவ ஆசார்யர்கள் உலகெங்கும் பரப்பினர். வடமொழி வேத வேதாந்தங்களிலும் தென்மொழி வேதமாகிற ஆழ்வார் பாடல்களிலும் இம் முப்பொருள் (தத்வத்ரயம்) பொதிந்துள்ளதை உலகிற்கு வெளிப்படுத்தியவர் இராமானுச முனிவராவார். இவரது சமயக் கருத்துக்களே விசிஷ்டாத்வைதம் என்ற பெயரில் நிலவி வருகிறது. இதுவே எம்பெருமானார் தரிசனம் எனப்படும் (உபதேசரத்தினமாலை பா. 38).

சித்தானது பத்தர், முக்தர், நித்யர் என மூன்று பிரிவுகளாய் கணக்கற்றவையாய் இருக்கும்; அசித்தானது காலம், பிரகிருதி, நித்யவிபூதி என மூன்று பிரிவுகளாய் எண்ணற்றவையாயிருக்கும்.

'ஒரே உருவத்தால் ஒருபடிப்பட்ட நிலைமையையுடைத்தாகையாலே சித்து' என்றும், 'உருவத்தின் மாறுதலாலே ஒருபடிப்பட்ட நிலைமையில்லாமையாலே அசித்து' என்றும் கூறுவர் வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் (1. 2. 4 - 12 படி). இவ்விரண்டையும் விட்டுப்பிரியாத சரீரமாகக் கொண்டிருக்கும் ஈச்வரன் என்னும் திருமகள் கேள்வனே பரம்பொருளாவான்.

மேற்கூறிய முப்பொருள்களுள் சித்தான ஆத்மாக்கள் உய்யும் பொருட்டு பரம்பொருளான எம்பெருமானை உள்ளபடி அறிந்து, அவனையே நெறியாகப் பற்றி, அவன் உகப்புக்கே ஆட்பட்டு, அடிமை செய்ய வேண்டும். இதற்காக அறிய வேண்டிய பொருள்கள் அர்த்த பஞ்சகமான ஐம்பெரும் பொருள்கள். அவையாவன:

(1) பற்றப்படுபவனான இறைவனுடைய இயல்பு (இறைநிலை,

(2) பற்றுபவனான ஜீவாத்மாவின் இயல்பு (உயிர்நிலை)

(3) இறைவனை அடைவதற்கு உறுப்பான நெறி இயல்பு (தக்க நெறி)

(4) பேற்றைப் பெறவொட்டாமல் தடுக்கும் விரோதியின் இயல்பு (தடை அல்லது ஊழ்வினை)

(5) இறையருளால் தடை நீங்கப் பெற்று பெற வேண்டிய பேற்றின் இயல்பு (வாழ்வு)

இதுவே எல்லா வேதங்களின் திரண்ட கருத்தாகும். முற்கூறிய ஹாரீதஸ்ம்ருதி வசனத்தின்படி உபநிடதங்களும் இவ்வைம் பொருளையே பகர்கின்றன.

திருவாய்மொழிக்கு அமைந்த தனியன்களுள் பட்டர் என்னும் ஆசார்யர் அருளிய

'மிக்கவிறை நிலையும் மெய்யாமுயிர்நிலையும்
தக்கநெறியும் தடையாகித் தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்
யாழினிசை வேதத்தியல்'

என்ற தனியன் மூலம் திருவாய்மொழியும் அர்த்த பஞ்சகத்தையே உணர்த்துகிறது என்று அறியலாம். 'இவ்வைந்து அர்த்தமுமே திருவாய்மொழியால் ப்ரதிபாதிக்கிறது' என்பர் நம்பிள்ளை: அதாவது

'ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந :
ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததா ப்ராப்தி விரோதிச||
வதந்தி ஸகலா வேதா: ஸேதிஹாஸ புராணகா : |
முநயச்ச மஹாத்மாநோ வேத வேதார்த்த வேதிந : ||'

என்று ஸகல வேத தாத்பர்யம் இவ்வர்த்த பஞ்சகம் என்னும் இடத்தைப் பெரியவங்கிபுரத்துநம்பி திருவாய்மொழிக்கு வாக்யார்த்தமாக அருளிச் செய்தார் என்று நம்பிள்ளை முதல் ச்ரிய:பதியில் அருளியது நினைத்தற்பாலதாகும்.

திருவாய்மொழிக்கு அமைந்த ஐந்து வியாக்யானங்களுள் நம்பிள்ளை அருளிய ஈடுமுப்பத்தாறாயிரம் என்னும் வியாக்யானம் விரிவானதாகும். இவ்வியாக்யானத்தில் குறிப்பிட்ட உபநிடதத் தொடர்களோடு ஒப்பிட்டுக் காணும் போது 13 உபநிடதத்திலிருந்து 300க்கும் மேலான வாக்யங்கள் திரும்பத் திரும்ப உரைத்த இடங்களைக் காண முடிகிறது. அவற்றைத் தொகுத்து காணும் போது உபநிடதங்களின் கருத்துக்கள் திருவாய்மொழியிலும் அமைந்திருப்பது காண முடிகிறது. பன்னீரா யிரப்படி இருபத்து நாலாயிரப்படிகளில் அமைந்த சில உபநிடதக் கருத்துக்களும் இடம் பெறுகின்றன.

**இறை நிலை:**

அந்தக் கருத்துக்களை அர்த்த பஞ்சக நோக்கில் பகுத்துப் பார்க்கும் போது கேன, கட, முண்டக, தைத்திரீய, சாந்தோக்கிய, சுவேத,

சுபால, மகோபநிடதங்கள் காட்டிய இறைவனுடைய பல்வேறு தன்மைகளைத் திருவாய்மொழியில் 90 பாசுரங்களில் பொருத்தமாகக் காட்டியது அறியற்பாலதாகும். இதில் இறைவனின் ஸ்வரூபம், குணம், வடிவு, விபூதி (செல்வங்கள்) ஆகியவை அடங்கியுள்ளன. இவற்றை விரிவாக

1. எம்பெருமான் எல்லாப் பொருள்களுக்கும் காரணமானவன்;
2. பிரமன், சிவன் முதலானோர்க்குக் காரணமானவன்;
3. எம்பெருமான் வேதங்களை உபதேசித்தவன்;
4. சிதசித் வஸ்துக்கள் எம்பெருமானது அதீனம்;
5. எம்பெருமானுடைய ஸ்வரூபத்தின் சிறப்பு;
6. எம்பெருமான் அளவிடற்கரியவன்;
7. எம்பெருமான் எல்லா இனிமையோடு கூடியிருக்கும் தன்மையன்;
8. எம்பெருமானின் எல்லா உறவாயிருக்கும் தன்மை;
9. எம்பெருமான் மிக்க ஒளியுடையவன்;
10. எம்பெருமான் உயர்ந்தோரைக் காட்டிலும் உயர்ந்தவன்;
11. எம்பெருமானின் பரத்துவமும் ஸௌலப்யமும்;
12. எம்பெருமான் லீலாவிபூதிக்கும் (மண்ணாட்டுக்கும்) தலைவன்;
13. எம்பெருமான் அந்தர்யாமியாய் இருப்பவன்;
14. எம்பெருமான் எண்ணற்ற வடிவு, திருநாமங்களை உடையவன்;
15. எம்பெருமானின் திவ்யமங்கள திருமேனி அழகு;
16. எம்பெருமானின் கல்யாண குண யோகம்;
17. எம்பெருமான் அருளின் பெருமை;
18. சரீராத்மபாவம்;

என்ற பதினெட்டு வகைப்பாட்டில் அறிவிக்கப்படுகிறது.

**உயிர் நிலை:**

உயிர்நிலையாவது என்றும் உள்ளதாய், அணு அளவினதாய்,

ஞானம், ஆனந்தம் ஆகியவற்றை ஸ்வரூபமாக உடையதாய், ஞானத்தையே பண்பாக உடையதாய் அசித்தைப் போல வேறுபடுகையன்றிக்கே விகாரம் அற்றிருக்கையாய் (ஸதைகரூபனாய்) எம்பெருமானுக்கே என்றும் அடிமைப்பட்டதாய் இருக்கும் என்பர் நம்பிள்ளை (முதல் ச்ரிய:பதி -36 படி). இத்தகைய ஜீவாத்மாவின் தன்மைகள் கட, தைத்திரீய, சாந்தோக்கிய, பிருகுதாரண்யக உபநிடத வாக்யங்கள் மூலமாகத் திருவாய்மொழியில் 10 இடங்களில் மேற்கோளாகக் கையாளப்பட்டுள்ளன. இவற்றையே உயிர்நிலையின் தனித்தன்மை, முக்தர்களின் நிலை, முக்தனுக்கு ஸ்வாதந்த்ரியமின்மை, எம்பெருமானை அறிய இச்சையும் தகுதியும் என்ற நான்கு தலைப்புக்களில் விளக்கப்பட்டுள்ளன.

**தக்கநெறி:**

'த்ரைவர்ணிகாதிகாரமான பக்தியும் அகிஞ்சநாதிகாரமான பிரபத்தியும் என்று இரண்டிறே வேதாந்த ஸித்தமான உபாயம்' என்பர் நம்பிள்ளை (முதல் ச்ரிய:பதி- 36 படி). அதாவது மூன்று வருணத்தார் மேற்கொள்ளக் கூடிய பக்தியும் வேறுகதியில்லாதவர்கள் கைக்கொள்ளும் பிரபத்தியுமாகிய இரண்டு வழிகள் உபநிடதங்களில் உபாயமாகச் சொல்லப்பட்டிருக்கிறது என்றவாறு. நெறி - வழி அல்லது உபாயம். தக்கநெறியாவது வீடுபேறு பெற எம்பெருமானையே உபாயமாகப் பற்றுவதாகும். கட, முண்டக, சாந்தோக்ய உபநிடத வாக்யங்களைக் கொண்டு திருவாய்மொழியில் 13 இடங்களில் நம்பிள்ளை உபாய ஸ்வரூபத்தை நிறுவியுள்ளார். அவற்றைத் தொகுத்து எம்பெருமானை அடையும் உபாயம்; எம்பெருமானைத் தஞ்சமாகப் பற்றுவதால் வரும் பேறு என்ற இரண்டு நிலைகளில் இயம்பப்படுகிறது.

**தடை அல்லது ஊழ்வினை :**

பேரின்பப் பெருவாழ்வை இவ்வுலகிலுள்ள உயிர்கள் அடைய தடையாயிருப்பவை ஊழ்வினையாகும்; ஊழ்வினையாவது அவித்யை,

கருமம், வாசனை, ருசி, பிரகிருதி சம்பந்தமாகும்; இவற்றின் தொடர்ச்சியான நிலையால் மேன்மேலும் பலபிறவிகளை எடுத்துப் பேரின்பப் பெருவாழ்வு பெற முடிவதில்லை. இப்படி எண்ணற்ற தடைகள் இருப்பினும் எம்பெருமான் இவர்களுக்கு நேரிடும் புண்யங்களை ஒன்று பத்து நூறாக்கி வளரச் செய்து தன் இன்னருளாலே தன்னை உணர வைக்கிறான். அதனால் பக்தி உண்டாகி ஆசார்யன் வாயிலாக எம்பெருமானையே உபாயமாகப் பற்றி தடை நீங்கப் பெற்று வீடுபேறு பெறுகின்றனர். திருவாய்மொழியில் ஏழு இடங்களில் தைத்திரீய, சாந்தோக்கிய உபநிடதத் தொடர்கள் மூலம் ஊழ்வினை பற்றி நம்பிள்ளை உரை வகுத்துள்ளார். இது ஜீவாத்மா பாபங்களைப் போக்கும் வழி; எம்பெருமானைப் பற்றுவதால் வினைகள் அறுதல் என்ற இரண்டு தலைப்புகளில் விளக்கப்படுகிறது.

**வாழ்வு அல்லது முக்தி நிலை:**

மேற்கூறியபடியே எம்பெருமான் இன்னருளால் பிரகிருதி ஸம்பந்தம் நீங்கப் பெற்று ஜீவாத்மா நித்யவிபூதியாகிற பரமபதம் சென்று அவன் உகக்கும் கைங்கர்யத்தை செய்வதே வாழ்வாகும். பரமபதத்தில் எம்பெருமானின் விருப்பப்படியே திவ்யமான சரீரத்தை எடுத்துக் கொண்டு எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைகளிலும் உசிதமான எல்லா கைங்கர்யங்களையும் செய்கிறான் முக்தன். இத்தகைய தேச விசேஷமான பரமபத அநுபவத்தை தைத்திரீய, கௌஷீதகி, முண்டக, சாந்தோக்கிய உபநிடதங்கள் காட்டியபடியே திருவாய்மொழியில் 10 இடங்களில் நம்பிள்ளை நிரூபித்து உள்ளார். இவை ஜீவாத்மாவின் தேச விசேஷமான பரமபத அநுபவம்; எம்பெருமானைப் பாடுவதே பேறு; எம்பெருமானோடு மேல் எல்லையான ஒற்றுமையை (பரம சாம்யத்தை) அடைதல் என்ற தலைப்புகளில் விளக்கப்படுகின்றன.

இவ்வாறு அர்த்த பஞ்சக விவரணமாகத் திருவாய்மொழியில் அமைந்த உபநிடதக் கருத்துக்கள் ஒவ்வொரு நிலைகளிலும் விரிவாகச் சொல்லப்படுகின்றன.

## இறைநிலை:

**எம்பெருமான் எல்லாப் பொருள்களுக்கும் காரணமானவன்:**

'எம்பெருமான் மூன்று வகைப்பட்ட சேதனர்களான பத்தர், முக்தர், நித்யர்களுக்கு மூவகைப்பட்ட காரணமாக இருக்கிறான். அவ்வாறே மூவகைப்பட்ட அசேதனங்களான மூலப்பிரகிருதி, சுத்தஸத்துவம், காலம் ஆகியவற்றுக்கு மூவகைக் காரணமாகவும் இருக்கிறான். மூவகைப்பட்ட காரணமாவன: முதற் காரணம், துணைக் காரணம், நிமித்த காரணம் என்பன. எம்பெருமான் இவ்வுலகில் நுட்பமான சித்து அசித்துக்களோடு அவைகளுக்கு உயிராய்க் கூடியிருக்கையாலே முதற் காரணமாயும் ஞானம், சக்தி முதலிய குணங்களோடு கூடியிருக்கையாலே துணைக் காரணமாயும், தன் இச்சையோடு (சங்கல்பத்தோடு) கூடி இருக்கும் தன்மையாலே நிமித்த காரணமாயும் இருக்கிறான். அவ்வாறே பரமபதத்தில் முக்த நித்யர்கள் மற்றும் திவ்யமான அசேதனங்களோடு கூடியிருக்கையாலே முதற் காரணமாயும், அங்குள்ளார் விநியோகம் கொள்வதற்கேற்ப ஞானம், சக்தி முதலான குணங்களோடு கூடியிருக்கும் தன்மையால் துணைக் காரணமாயும் தன் இச்சையோடு கூடியிருக்கும் தன்மையால் நிமித்த காரணமாயும் திகழ்கிறான்' என்பது மாமுனிகள் வாக்கு (ஆ. இ.நூற்பா. உரை. 220). இக் கருத்தை உபநிடதங்கள் விரிவாகக் கூறுகின்றன.

உலகங்களைப் படைப்பதற்குக் காரணமான குணங்களோடு கூடிய எம்பெருமானை அடைய வேண்டும் என்று சொல்வதற்காக முதலில் படைத்தலைச் சொல்லுகிறது உபநிடதங்கள். அதையே

**'सः अकामयत बहुस्याम् प्रजायेयेति '**

(ஸ: அகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி) என்று தைத்திரீயோபநிட ஆனந்தவல்லி (2. 6) ஓதுகிறது. இதன் பொருளாவது -'அந்த பரமாத்ம தேவர், மனிதர், முதலான பலவகையாக வேண்டி ஆகாயம் முதலா பஞ்சபூதங்களாக விரியக்கடவேன் என்று சங்கல்பித்தார்'. இதனை அடியொற்றியே நம்மாழ்வாரும் 'மண்ணும் நீரும் எரியும் நல்வாயுவு விண்ணுமாய் விரியும் எம்பிரானையே' (1. 10. 2) என்கிறபடியே பஞ்சபூதங்களுக்கும் காரணமான எம்பெருமானை உதவியாளன் என் போற்றுகிறார். இவ்விடத்தில், 'ப்ருதிவ்யாதி பூதங்களையும் ப்ரகாரமா உடையனாய்க் கொண்டு ஜகதாகாரேண விரிந்திருக்கிற என்னுடை ஸ்வாமி' என்பது வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் உரை (1. 10. 2 12படி). பெரியவாச்சான் பிள்ளையும் 'பஹுஸ்யாம்' என்கிறபடியே விரிந்து இருக்கும் ஜகத் காரணத்வத்தால் உண்டான உபகாரத்தை நினைத்த என்று உரையிடுகிறார் (1. 10. 2 - 24 படி). நம்பிள்ளையும் 'காரணமான பஞ்சபூதங்களுக்கும் அந்தராத்மாவாய் 'பஹுஸ்யாம்' என்கிறபடியே தன மலர்த்தியேயாம்படி இருக்கிற உதவியாளன்' என்று கூறுவர் (1. 10. 2 36படி). இதனால் எம்பெருமான் எல்லாப் பொருள்களுக்கும் முத காரணமாந் தன்மையைச் சொன்னபடி.

பலவகைப்பட்ட பொருள்கள் நிறைந்த இந்த உலகையெல்லாம் படைப்பதற்கு முன்பு ஒரே வஸ்துவாய், படைக்கும் தொழிலையுடைய கருத்தாவாகிய மற்றொரு இரண்டாவது வஸ்துயின்றியிருந்தது. அவ்வஸ்து 'நான் வெகுவாக ஆகக்கடவேன்' என்று ஸங்கல்பம் செய்து கொண்டு ஒளி (தேஜஸ்) முதலானவற்றைப் படைத்தது. இக் கருத்தையே சாந்தோக்ய உபநிடத ஸத்வித்யையில் (6. 2. 1),

**'सदेव सोम्येदमग्र आसीत् - एकमेव अद्वितीयम्**
**तदैक्षत बहुस्याम् प्रजायेयेति'**

(ஸதேவ ஸோம்யேதம் அக்ரஆஸீத் ஏகமேவ

அத்விதீயம் ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி) என்ற மந்திரம் ஓதுகிறது. உத்தாலகர் தம் மகனாகிய ச்வேதகேதுவுக்குக் கூறுவதாக அமைந்தது இந்த வாக்யம். 'ஸோம்ய! இதம் அக்ரே ஸதேவ ஏகமேவ அத்விதீயம் ஆஸீத்' என்று கொண்டு கூட்டி உரை செய்க. 'சந்திரன் போன்ற பிரியமானவனே! தேவர், மனிதர், விலங்கு, தாவரம் முதலிய பல பெயர்களுடனும் பல உருவங்களுடனும் கூடிய இவ்வுலகமானது இதற்கு முன்பு பிரளய காலத்தில் 'ஸத்' என்ற ஒரே பெயருடனும் ஒரே உருவத்துடனும் ஒன்றாகவே இருந்தது. அது இப்போது பல பெயர்களுடனும் பல உருவங்களுடனும் தென்படுகிறது' என்பது மேற்கூறிய உபநிடதத் தொடரின் பொருளாகும்.

உதாரணமாக, குயவன் வீட்டில் இன்று நம் கண் முன்னே தென்படுகின்ற வேறு வேறான பல உருவங்களுடனும், அவற்றுக்குத் தக்க மடக்கு, சட்டி, பானை முதலிய பல பெயர்களுடனும் கூடியிருக்கும் பல பொருள்களின் திரட்சியானது நேற்று ஒரே விதமான உருவத்துடனும் மண் என்ற ஒரே பெயருடனும் ஒரே பொருளாக இருந்தது என்றால், இன்று பலவாக உள்ள இப் பொருள்களெல்லாவற்றுக்கும் நேற்றிருந்த மண் என்னும் ஒரு பொருளே முதற் காரணமாகும். அவ்வாறே இன்று தேவர் மனிதர் விலங்கு தாவரம் முதலான பல பெயர்களுடனும் பல உருவங்களுடனும் தோன்றும் பல பொருட்கட்கும் முதல் காரணமாக 'ஸத்' என்னும் ஒரே பெயருடனும் அதற்குத்தக்க ஒரே உருவத்துடனும் கூடி ஒன்றாகவே இருக்கும் பிரம்மத்தைச் சொல்ல வேண்டும். ஆக பிரம்மமே உலகிற்கு முதல் காரணம் என்பதாகும். இதற்கு மேல் இன்றுள்ள பானை சட்டி முதலியவை எல்லாம் மண்ணாகவே நேற்று இருந்தது என்றால் இவற்றைச் செய்யும் கருத்தாவாகக் குயவன்

இருந்தானே, அது போல தேவர் மனிதர் முதலியனவான உலகெல்லாம் முன்பு பிரம்மாக ஒரே பொருளாக இருந்ததென்றால் இவ்வுலகத்தை படைக்கும் கருத்தா ஒருவன் இருந்திருக்க வேணும். அவனை 'அத்விதீயம்' என்ற சொல்லால் கூறுகிறது உபநிடதம். அது 'ஸத்' என்று ப்ரம்மத்தைக் கூறும் பதத்திற்கு அடைமொழியாகும். ப்ரம்மம் அத்விதீயம் என்றால் உலகிற்கு முதற் காரணமான ப்ரம்மம் தன்னை விட வேறான கருத்தா என்னும் இரண்டாம் பொருளை உடையதன்று என்பதே பொருளாகையால் உலகிற்குக் கருத்தாவும் ப்ரம்மமே என்றதாயிற்று. (கீதாசார்யன் 1997 ஸ்ரீ உ.வே.வித்வான் கார்ப்பங்காடு வேங்கடாச்சார்ய ஸ்வாமி உரை).

இது பற்றியே நம்மாழ்வார்,

'தாமோதரனைத் தனி முதல்வனை' (2. 7. 12) என்ற பாசுரத்தில் 'தனி முதல்வனை' என்பதனால் எம்பெருமானே மூவகைக் காரணமாயிருக்கும் என்பர். 'தனி' என்பதனால் நிமித்த காரணமும் 'முதல்' என்பதனால் முதற் காரணமும் மற்றும் உபலக்ஷணத்தால் துணைக் காரணமும் சொல்லியபடி (2. 7. 12 - 36படி). மேலும் வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் 'தனி முதல்வன்' என்பதற்கு 'ஸமஸ்த ஜகதேக காரணத்வம்' என்று உரையிடுகிறார் (12 படி). 'முதல் தனி வித்தேயோ முழு மூவுலகாதிக் கெல்லாம்' (10. 10. 9) என்று ஆழ்வார் அருளியது காண்க. அதாவது ஒன்றொழியாதபடி மூன்று உலகம் தொடக்கமான வற்றுக்கெல்லாம் மூன்றுவித காரணமானவனே என்றபடி. ஆங்கு 'முதல்' என்பது நிமித்த காரணத்தையும், 'தனி' என்பது துணைக் காரணத்தையும், 'வித்து' என்பது முதற் காரணத்தையும் குறிக்கும் (36படி). 'ஊழி முதல்வனொருவனே யென்னுமொருவன்' (10. 7. 9) என்ற பாசுரத்தில், 'ஊழி முதல்வன் ஒருவனே' என்பதனால் 'காலம் முதலான எல்லாப் பொருள்களுக்கும் காரணமானவன் இவன் ஒருவனுமே என்று 'ஸதேவ'

இத்யாதி ப்ரமாணங்களால் சொல்லப்படுகிற ஒருவன்' என்று நம்பிள்ளை எம்பெருமான் எல்லாவற்றுக்கும் காரணமானவன் என்பதை அருளுகிறார் (10. 7. 9 - 36படி).

மேலும் எம்பெருமானே எல்லாவற்றுக்கும் காரணமானவன் என்பதை தைத்திரீய உபநிடத பிருகுவல்லி (1. 2)

'यतोवा इमानि भूतानि जायन्ते |
येन जातानि जीवन्ति |
यत्प्रयन्त्यभिसं विशन्ति |
तद्विजिज्ञासस्व | तद्ब्रह्मेति |'

(யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே| யேந ஜாதாநி ஜீவந்தி| யத் ப்ரயந்த்யபிஸம்விசந்தி| தத்விஜிஜ்ஞாஸஸ்வ| தத்ப்ரஹ்மேதி|) என்ற மந்திரத்தின்படியே எல்லா வஸ்துக்களும் எந்த வஸ்துவிடத்தில் நின்றும் உண்டாகிறதோ, எதனால் பிழைக்கின்றனவோ, எவ்விடத்தில் சேருகின்றனவோ, மோக்ஷத்தில் எந்த வஸ்துவைச் சேருகின்றனவோ, அவ்வஸ்துவே ப்ரம்மம் என்று சொல்லுகிறது, அதர்வசிகோபநிடதமும் (2. 17),

'कारणन्तु ध्येयस्सवैश्वर्य सम्पन्न :|
सर्वेश्वरः शम्भुराकाशमध्ये /
परमस्स्वराट् |'

(காரணிந்து த்யேயஸ்ஸர்வைணவர்ய ஸம்பந்ந: ஸர்வேச்வர: சம்புராகாசமத்யே)

என்ற மந்திரத்தினால் ஜகத் காரணவஸ்து எம்பெருமானே என்பது வலியுறுத்துகிறது. அதாவது, 'காரணம்' என்பதனால் அறிவற்ற பொருள், அறிவுள்ள பொருள் ஆகியுவற்றோடு கூடிய எம்பெருமான் இவ்வுலகுக்குக் காரணம் என்றபடி; 'ஸர்வேச்வர:' என்பதனால் எல்லாவற்றுக்கும் உள்ளே இருந்து நியமிப்பவன் என்றபடி; 'ஸர்வைச்வர்ய ஸம்பந்ந:' என்பதனால்

தான் எல்லாவற்றுக்கும் சேஷியான - ஸ்வாமியான தன்மையால் அதாவது தாயாய்த் தந்தையாய் அரசனாய்த் தலைவனாய் இருப்பதை சொன்னபடி; 'சம்பு:' என்பதனால் வீடுபேற்றையும் அளிக்க வல்லவ என்றபடி. சம் - மோக்ஷஸுகம்.

மேற்கூறிய உபநிடதத் தொடர்களின் பொருளை உட்கொண்டே எம்பெருமான் எல்லாவற்றுக்கும் காரணமானவன் என்பதை நம்மாழ்வார் 'சோதியாகி எல்லா உலகும் தொழும் ஆதிமூர்த்தி' (3. 3. 5) என்று பாசுரமிடுகிறார். ஆதிமூர்த்தியாவது காரணபூதனான ஸர்வேச்வரன் காரணபூதனாகையாலே எல்லாவுலகும் தொழும்படி இருக்கிறான் 'எல்லாவுலகும் தொழும்' என்பதனால் முற்கூறிய தைத்திரீய உபநிட காரண வாக்யத்தின்படி ஆச்ரயணத்தைச் சொல்லி, 'ஆதி மூர்த்தி என்பதனால் அதர்வசிகோபநிடதம் கூறியபடி அடையப்பட வேண்டி வஸ்துவான ஜகத் காரண வஸ்துவைச் சொல்லிற்று என்பர் நம்பிள்ளை (3. 3. 5. - 36படி).

மேலும்,

'நாடிநீர் வணங்கும் தெய்வமும் உம்மையும் முன் படைத்தான்
வீடில்சீர் புகழாதிப்பிரான்' (4. 10. 2)

என்ற பாசுரத்தில் 'ஆதிப்பிரான்' என்பதனாலும், 'ஓடி ஓடிப் பல பிறப்பு பிறந்து— (இறுதியில்) ஆடுபுட்கொடி ஆதிமூர்த்திக்கு அடிமை புகுவதுவே (4. 10. 7) என்ற பாசுரத்தில் 'ஆதி மூர்த்திக்கு' என்பதனாலும்,

'மாசறுசோதி என் செய்யவாய் மணிக்குன்றத்தை
ஆசறுசீலனை ஆதிமூர்த்தியை நாடியே' (5. 3. 1)

என்ற பாசுரத்தில் 'ஆதிமூர்த்தியை' என்பதனாலும்,

'பாதநாளும் பணியத் தணியும் பிணி
ஏதம்சாரா எனக்கேல் இனியென்குறை?

வேதநாவர் விரும்பும் திருக்கண்ணபுரத்து

ஆதியானை அடைந்தார்க்கு அல்லலில்லையே' (9. 10. 9)

என்ற பாசுரத்தில் 'ஆதியானை' என்பதனாலும் எம்பெருமானே எல்லாவற்றுக்கும் காரணமானவன் என்ற மேற்கூறிய உபநிடதக் கருத்தைச் சுருக்கி ஒரு சொல்லால் நயம்படக் காட்டியது நுண்ணிதின் நோக்கத்தக்கதாகும்.

**எம்பெருமான் பிரமன் சிவன் முதலானோர்க்குக் காரணபூதன்:**

தைத்திரீயோபநிடத நாராயணவல்லி (1. 11)

**'स ब्रह्मा स शिव स्सेन्द्र स्सेक्षर : परमस्स्वराट् '**

(ஸ: ப்ரஹ்மா ஸசிவஸ்ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரம ஸ்வராட்)

என்று ஓதுகிறது. இதன் பொருள் பின்வருமாறு: அந்த பரமாத்மாவானவன் பிரமனுக்கு அந்தர்யாமி; அவன் சிவனுக்கு அந்தர்யாமி; அவன் இந்திரனுக்கு அந்தர்யாமி; அவன் பாபமில்லாதவன்; உயர்ந்தவன்; கருமத்துக்கு வசப்படாதவன்.

இத்னை அடியொற்றியே ஆழ்வாரும் பல பாசுரங்களில் எம்பிரானையே பிரமன் சிவன் இந்திரன் முதலான தேவர்களுக்குக் காரணபூதனாய் இருக்கிறான் என்று அருளுகிறார். 'தானோருருவே தனிவித்தாய்த் தன்னில் மூவர் முதலாய' (1. 5. 4) என்ற பாசுரத்தில் 'தன்னில்' என்பதனால் தன் பக்கலில் என்றபடியாய் எம்பெருமானுடைய ஸங்கல்பரூப ஞானத்தாலே என்று உரைப்பர். 'மூவர் முதலாய' என்பதனால் 'ஸஸேந்த்ர:' என்கிறபடியே இந்திரனையும் கூட்டிச் சொல்லுவர். எனவே எம்பெருமான் தன் ஸங்கல்பத்தாலே பிரமன் சிவன் இந்திரன் மூவர்க்கும் காரணமாய் நிற்பவன் என்பதைத் தெரிவித்ததாகும் (1. 5. 4. - 36படி).

'பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும் நாயகன் அவனே கபால நன்மோக்கத்துக் கண்டு கொள்மின்' (4. 10. 4) என்றதும் இங்கு அநுஸந்தேயம்.

மேலும்,

அணைவது அரவணைமேல் பூம்பாவை யாகம்

புணர்வது இருவரவர் முதலும் தானே

இணைவனாம் எப்பொருட்கும் வீடுமுதலாம்

புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே' (2. 8. 1)

என்ற பாசுரத்தில் 'இருவரவர் முதலும் தானே' என்பதற்கு எம்பெருமா பிரமன் ருத்ரர்களுக்குக் காரணபூதனாய் இருக்கும் என்றும் 'ஸ ப்ரஹ் ஸசிவ:' என்கிற பிரசித்தியாலே இருவரவர் என்றதாகக் கூறுவர் நம்பிள் (2. 8. 1 - 36படி). இப் பாசுரத்தில் 'அணைவது புணர்வது' என்பதனா பரமபதமானது அநுபவிக்கும் பூமியாய் நித்யமாய் இருக்கும் என்று 'முதல்' என்கையால் இவ் விபூதியில் கார்ய காரண பாவத்தால் வ ஸம்பந்தமும், இது தான் படைப்பது அழிப்பதாம் என்றும் சொல்லு இதனால் பிரம்ம ருத்ரர்கள் ஸம்ஸாரபத்தர்கள் என்றும் வீடுபேறு அளிக் காரணமாயிருப்பவன் எம்பெருமானே என்றும் சொன்னபடி. இ உரைநயம் பெரிதும் பாராட்டத்தக்கதாகும்.

இப்படிப்பட்ட எம்பெருமானோடு ஒக்க இன்னார் இன்ன என்னும்படி தந்தாம் உயர்த்தியைக் கொண்டு அபிமானிகளாய் ஒ இருப்பிடங்களையுடையராயிருக்கிற தேவ ஜாதியை 'விண்ணுள் ஏணுடை தேவர்' (7. 4. 5) என்கிறார் ஆழ்வார். (ஏண் - உயர்ச்சி). அதாவது ' ப்ரஹ்மா ஸசிவஸ்ஸேந்த்ர:' என்கிற ஒரு கோவையிலே எண்ணலாம்ட இருக்கிறவர்கள் என்று நம்பிள்ளை உரை (36படி). இங்கு தன்னுட ஒப்புச்சொல்லலாம்படியான எளிவந்த தன்மையை (சில குணத் எம்பெருமானுக்கு உள்ளதாகக் காட்டுகிறார். இக் கருத்தை முன்னர்க் குறி 'பேச நின்ற சிவனுக்கும் பிரமனுக்கும் பிறர்க்கும்' (4. 10. 4) என அடையாலும் தெளியலாம்.

மேலும்,

'என்திருமார்பன்தன்னை என்மலைமகள்கூறன்தன்னை

என்றும்என்நாமகளை அகம்பால்கொண்ட

நின்றசசீபதியை நிலம்கீண்டுஎயில்மூன்றெரித்த

வென்றுபுலம்துரந்த விசும்பாளியைக்காணேனோ!' (7. 6. 7)

என்ற பாசுரத்தின் முதலிரண்டு அடிகளினால், சிவன், பிரமன் ஆகியோர்க்கு தான் அந்தர்யாமியாய் இருப்பது மட்டுமின்றி 'நின்ற சசீபதியை' என்பதனால் இவர்களை (பிரமன், சிவன்) எண்ணினால் தன்னை (இந்திரனை) எண்ணலாம்படி ஐச்வர்யத்தால் குறைவற்றிருக்கிற இந்திரனுக்கு அந்தர்யாமியாய் இருக்கிறபடியைச் சொன்னபடி. இவ்விடத்தில் நம்பிள்ளை உரை பின்வருமாறு: 'ஸ ப்ரஹ்மா ஸசிவ:' என்றால் 'ஸேந்த்ர:' என்று ஒக்கச் சொல்லலாம்படி முட்டுப் பொறுத்து நின்ற இந்திரனுக்கு அந்தர்யாமியாய் உள்ளவன் என்றவாறு.

அந்தப் பிரமன், சிவன், இந்திரன் ஆகியோருடைய இயல்பு, இருப்பு, வளர்ச்சிகள் எம்பெருமான் இட்ட வழக்கு என்பதை,

'அவனேயகல் ஞாலம் படைத்திடந்தான்

அவனேயஃதுஉண்டு உமிழ்ந்தான்அளந்தான்

அவனேயவனும் அவனும் அவனும்

அவனேமற்றெல்லாமும் அறிந்தனமே' (9. 3. 2)

என்ற பாசுரத்தில் 'அவனே யவனும் அவனும் அவனும்' என்று அருளுகிறார் ஆழ்வார். அதாவது படைப்பு, அழிப்பு, காத்தல் தொழில்களுக்குக்கடவராய்த் தன் இட்டவழக்காலே வேதாந்தத்திலே 'ஸ ப்ரஹ்மா ஸசிவஸ்ஸேந்த்ர:' என்று மும்மூர்த்திகளுக்கு அந்தர்யாமியாய் இருக்கும் நிலையை 'அவனே' என்று காட்டுவதாக உரைப்பர் வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர். (9. 3. 2 - 12 படி).

எம்பெருமான் வேதங்களை உபதேசித்தவன்

'यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै |
तं ह देवमात्मबुद्धिप्रकाशं मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये || '

(யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்
யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை
தம் ஹ தேவமாத்ம புத்தி ப்ரகாசம்
முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே || )

என்று ச்வேதாச்வதரோபநிடதம் (6. 18) ஓதுகிறது. அதாவது 'எ பிரமனை முன் படைத்தானோ, எவன் வேதங்களையும் அவனு உபதேசித்தானோ, அப்படிப்பட்ட தேவனும், தன் விஷயமான ஞானத் வெளிப்படுத்துமவனான பரமபுருஷனை மோக்ஷமடைய விரும்பும் ந சரணமடைகிறேன்' என்றவாறு.

இம்மந்திரத்தில், 'யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர் என்பதனால் எம்பெருமான் முதன் முதலில் பிரமனைப் படைத் சொல்லப்பட்டது. 'யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ் என்பதனால் அந்த எம்பெருமான் பிரமனுக்கு வேதங்களை உபதேசித்த என்றது சொல்லப்பட்டது.

இது பற்றியே ஆழ்வாரும், 'அமரர்க்கும் அறிவியந்து' (1. என்று பாசுரமிடுகிறார். இவ்விடத்தில் நம்பிள்ளை உரை பின் வரும "பிரமன் தேவர்களுக்கு ஜ்ஞானப்ரதானம் பண்ணினான் என்று ப்ரஸித்தி உண்டு. அதுக்கடி ஆராய்ந்தால் 'யோ ப்ரஹ்மாணம் விதத பூர்வம்' என்கிறபடியே அவனடியாயிருக்கும்." அவனடியாயிருக் என்றது - தான் பிரமனுக்கு ஞானத்தை உண்டு பண்ணி அவனு அந்தராத்மாவாய் அவனையிட்டு தேவர்களுக்கு ஞானத்தை உ பண்ணினான் என்றபடி (அரும்பதவுரை ப. 331).

மேலும்,'நாடி நீர் வணங்கும் தெய்வமும் உம்மையும் முன் படைத்தான்' (4.10. 2) என்ற பாசுரத்தில் 'முன் படைத்தான்' என்பதனால் 'யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்' என்கிறபடியே எம்பெருமான் முதன் முதலில் பிரமனைப் படைத்தது சொல்லப்பட்டது. (4. 10. 2 36-படி).

'பீடுடை நான்முகனைப் படைத்தானுக்கு' (6. 6. 4) என்பதனால் 'யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்' என்றத்தையும், 'பண்புடை வேதம் பயந்த பரன்' (6. 6. 5) என்றதனால் பிரமனுக்கு வேத சக்ஷுஸ்ஸைக் கொடுக்கையாலே 'யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை' என்றத்தையும் சொல்லுகிறது" என்று அரும்பதவுரைக்காரர் காட்டியது அறியற்பாலதாகும் (6. 6. 5 - 36 படி).

மேற்கூறிய உபநிடதத்தின்படியே எம்பெருமான் பிரமனை முதன் முதலில் படைத்தான் என்பதை,

'தன்மையறிபவர்தாம் அவற்காளன்றி யாவரோ
நன்மைப் புனல் பண்ணி நான்முகனைப் பண்ணித்தன்னுள்ளே'

என்ற அடிகளால் உணரலாம். இவ்விடத்தில் நம்பிள்ளை உரை இன்சுவையாயிருக்கும்; 'இவ்வளவும் வர அசித்தைக் கொண்டு கார்யம் கொண்டு இவையிரண்டும் நம் புத்த்யதீனமான பின்பு இச் சித்தையும் கொண்டு கார்யம் கொள்வோம்' என்று பார்த்து, சதுர்முகனைப் படைத்து, சிதசித்திரண்டும் இவனுக்கு உறுப்பாய் பரதந்த்ரமாய் (இட்டவழக்காய்) இருப்பது - 'யோ ப்ரஹ்மாணம் ... ' என்று நன்மைப் புனல் பண்ணி நான்முகனைப் பண்ணி என்று ஒரு குழமணனைப் பண்ணி என்பாரைப் போலே என்பர் (7. 5. 4. - 36 படி).

'என் சொல்லி நிற்பன்' (7. 9. 2) என்ற பாசுரத்தில் 'மூவுருவாம்

முதல்வனே' என்ற இடத்தில் 'யோ ப்ரஹ்மாணம் .... ' என்று பிரமனுக்கு வேதத்தை அறிவித்ததைச் சுட்டிக் காட்டி உரைப்பர் நம்பிள்ளை (7. 9. 2 - 36 படி).

**எம்பெருமானுடைய ஸ்வரூபத்தின் இயல்பு:**

எம்பெருமானுடைய வடிவமானது அழிந்து போகின்ற உடலான அசித்தின் தன்மையையும் அழியாததுமான ஆத்மாவின் சித் தன்மையையும் உடையதன்று, தைத்திரீயோபநிடத ஆனந்தவல்லி (21)

**'सत्यञ्चानृतं च सत्यमभवत्'**

(ஸத்யஞ்ச அந்ருதஞ்ச சத்யமபவத்)

என்று எம்பெருமானது ஸ்வரூபத்தின் சிறப்பை ஓதுகிறது. அதாவது 'ஸத்யம்' என்ற சொல்லால் சொல்லப்படும் அழிவில்லாத ஆத்மவர்க்கமும், 'அந்ருதம்' என்ற சொல்லால் சொல்லப்படும் அழியுமதான அசித்தும், 'ஸத்யம்' என்ற சொல்லாலேயே விவஹரிக்கப்படும் ஈச்வரனாயிற்று என்றபடி இக்கருத்தைத் தெரிவிக்கும் வகையில் வேதம் தமிழ் செய்த மாறன்,

'இல்லதும் உள்ளதும் அல்லதவனுரு' (1. 2. 4) என்று பாசுரமிடுகிறார். பிரமாணங்களால் அறிய முடியாததாய், முயற்கொம்பு போன்று உலகில் இல்லாததாய் உள்ள தன்மையினைப் பற்றியாவது, இப்பி வெள்ளியாகத் தோன்றுதல் போன்று கண்களுக்குத் தோன்றுகிற அளவேயாகிப் பின்பு பிரமாணங்களைக் கொண்டு பார்த்தால் இல்லை என்று கூறத்தக்க தன்மையினைப் பற்றியாவது; 'இல்லது' என்று ஆழ்வார் இங்குச் சொல்லவில்லை என்றும், தோன்றி அழியும் மின்னலைப் போன்று அழியும் தன்மையதான உடலை 'இல்லது' என்கிறார் என்று உரைப்பர்

நம்பிள்ளை (1. 2. 4 - 36 படி). அவ்வாறே அழிந்து போகும் பொருளிலும் வேறுபட்ட ஆத்மா தன்மையினை நோக்கி 'உள்ளது' என்றதாகக் கூறுவர். இக்கருத்தை மேற்கூறிய உபநிடதத் தொடரோடு ஒப்பு நோக்கும் போது, எம்பெருமான் 'ஸத்யம்' என்ற சொல்லால் சொல்லப்பட்ட ஆத்மாவோடும் 'அந்ருதம்' என்று சொல்லப்பட்ட உடலோடும் கூடிய தன்மையுடையவன் என்றவாறு, ஆழ்வார் 'உள்ளது' என்றதனால் 'நான் சுகமாக இருக்கிறேன்' என்ற ஆத்மாவின்படியும் இல்லது என்றதனால் 'அழியுமதான அசித்தின்படியும் என்று அவனுரு' என்று சொல்லுகிறார். எனவே மேற்கூறிய உபநிடதத்தின்படி ஸத்யமாக நித்யமாக இருப்பவன் எம்பெருமான் என்றதாயிற்று.

**சிதசித்வஸ்துக்கள் எம்பெருமானதீனம்:**

சாந்தோக்ய உபநிடத சாண்டில்ய வித்யையில் (3. 14. 1) ஜீவாத்மாவுக்கு முக்கியமாக உபாஸ்யமான பிரம்மத்தின் தன்மைகளைச் சொல்லுகிறது.

**'सर्वं खल्विदं ब्रह्म तज्जलानिति शान्त उपासीत'**

(ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி சாந்த உபாஸீத) என்பது அம்மந்திரம்; எல்லாப் பொருள்களும் பிரம்மத்தின் இடத்திலிருந்து உண்டானவை; எல்லாம் பிரம்மத்துக்கு நியாம்யம்; எல்லாம் பிரம்மத்துக்கு சரீரம்; படைப்பும் லயமும் ஸ்தூல சித்தான அறிவுள் பொருளையும் அசித்தான அறிவில் பொருளையும் உடலாகக் கொண்ட பிரம்மத்துக்கு உண்டு. இதனால் ஜீவாத்மா மேற்கூறிய குணங்களோடு கூடிய பிரம்மத்தை உபாஸிக்க வேண்டும் என்று இம்மந்திரத்தின் கருத்து.

இதில் 'ப்ரஹ்ம' என்ற சொல்லால் காரண நிலையிலுள்ள சூட்சும சிதசித்துக்களோடு கூடிய பிரம்மம் என்றபடி; 'ஸர்வ' என்பதனால் கார்யரூபமான உலகத்தோடு கூடிய பிரம்மம் என்றபடி; இப்படி காரணகாரிய நிலைகளோடு கூடியவன் எம்பெருமான் என்பதை, 'ஸர்வம்

கல்விதம் ப்ரம்ம' என்று உபநிடதம் ஓதிற்று. மேலும் இவ்வுபநிடதே
(6. 12. 3)

**'स य एषोऽणिमा ऐतदात्मिदं सर्वम् |**
**तत् सत्यं स आत्म तत्वमसि श्वेतकेतो इति||'**

(ஸ ய ஏஷோணிமா ஐயதாத்மமிதம் ஸர்வம் தத் ஸத்யம் ஸ ஆத்ம தத்வமஸி ச்வேதகேதோ இதி) என்று ஓதிற்று. இதில் 'தத்வமஸி' என்ப முக்கியமாகக் கொள்ளப்படுகிறது. இங்கு 'தத்' 'த்வம்' என்ற இரண் பதங்கள் சாமுாநாதிகாரண்ய நியாயத்தால் (ஒரே வேற்றுமையி படிக்கப்படுவதால்) பிரம்மத்தையே சொல்லுகின்றன. அதில் 'த என்பதனால் ஏம்பெருமானின் உலகுக்குக் காரணமாம் தன்மையு (ஜகத்காரணத்வம்) எல்லாக் கல்யாண குணங்கள் உண்டாம் தன்மையு (ஸர்வ கல்யாண குணாகரம்) அவயமில்லாத தன்மையும் (நிரவயப் விகாரமில்லாத தன்மையும் (நிர்விகாரம்) சொல்லப்படுகிறது. 'த்வம்' என் சொல்லாலும் அந்த ப்ரம்மமே ஜீவாத்மாவுக்கு அந்தர்யாமியாய் சரீ ஆத்மபாவத்தோடு கூடியிருக்கிறான். அவனே ஜீவாத்மாவின் ஒ கார்யத்தில் மீளுகைக்கும் மூளுகைக்கும் காரணமாய் இருக்கிறா இதனால் சிதசித்வஸ்துக்களின் ஸ்வரூபம், காத்தற்றன்மை ஆகியவை எம்பெருமான் அதீனங்கள் என்றபடி (மாமுனிகள் பிரமாணத்திரட் (1. 1. 4 - 36 படி).

இதனை அடியொற்றியே நம்மாழ்வாரும்,

'நாமவனிவனுவன் அவளிவளுவளெவள்
தாமவரிவருவர் அதுவிது வுதுவெது
வீமவை யிவையுவை அவை நலம் தீங்கவை
ஆமவை யாயவை ஆய்நின்ற அவரே' (1. 1. 4)

என்று பாசுரமிடுகிறார். இப்பாசுரத்தில், 'நாமவனிவனுவ அவளிவளுவளெவள்' என்று பலவிதமான சொற்களால் சொல்லப்படுகி

எல்லாப் பொருள்களுடைய இயல்பு, காற்றற்றன்மை, 'ஆய்நின்ற அவரே' என்பதனால் எம்பெருமான் அதீனம் என்று ஒரே வேற்றுமையில் படிக்கப்படுகிறது. 'தேவாதி பதார்த்தங்களை நாலு மூன்று வகையாலே சேர்த்து அவற்றினுடைய ஸ்வரூபம் அவனதீனம்' என்பர் நம்பிள்ளை. நாலு மூன்று வகையாவது - நாம் அவன் இவன் உவன் எவன்- ஆண்பால்; அவள் இவள் உவள் இவள்-பெண்பால்; அது இது உது இவை யவை உவை - பலவின் பால்; எது - பூஜ்ய பதார்த்தம்; வீம் அவை - அழியும் பொருள்; நலமவை தீங்கவை - நன்மை தீமை; ஆம் அவை ஆய்அவை - காலபேதம். ஆக ஏழு வகைப்பொருள்களின் ஸ்வரூபம், காற்றற்றன்மை எம்பெருமானதீனம் என்றபடி. 'ஆய்நின்ற' என்பதனால் ஆய்நின்ற பொருள்கள். அதாவது மேற்கூறிய பொருள்கள் இவற்றைப் பொருளாகக் கொண்ட அளவிலே 'அவரே' என்று எம்பெருமானோடு ஒற்றுமை 'ஐக்யம்' சொல்ல முடியாது. ஏனெனில் அறிவற்ற பொருளும் அதை அபிமானித்திருக்கிற சித்தான அறிவுள் பொருளும் அந்த அறிவுள் பொருளும் அதில் அந்தர்யாமியான பரமாத்மாவுமான இந்தச்சேர்த்தியை 'அவரே' என்றபடி, எனவே அவர் என்பதனால் 'இதம் ஸர்வம் ப்ரஹ்மகலு' என்னுமாபோலேயும் 'தத்வமஸி' என்னுமா போலேயும் இருக்கிற எம்பெருமான். அதாவது ஆகிநின்ற பொருள்களுக்கு அந்தர்யாமியான எம்பெருமானைச் சொல்லி ஆய்நின்ற பொருள்களுக்கு அந்தர்யாமியாய் நின்றவர் என்று சொல்லுதல் (1. 1. 4 -36படி). 'யானும் நீதானே யாவதோமெய்யே அருநரகவையும் நீயானால்' (8. 1. 9) என்ற பாசுரத்தில் 'அருநரகவையும் நீ' என்பதற்கு "தாண்ட முடியாததாய் துக்கங்கள் நிறைந்ததான பிறவியில் வஸ்துக்களானவையும் 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம' என்கிற மர்யாதையாலே எம்பெருமானுக்கு இட்டவழக்கானவை" என்று வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் உரைத்தது காண்க (8. 1. 9 - 12படி).

மேலும்,

'தானேயுலகெல்லாந் தானேபடைத்திடந்து

தானேயுண்டுமிழ்ந்துதானேயாள்வானே' (10. 5. 3)

என்ற பாசுரத்தில் 'தானேயுலகெல்லாம்' என்பதற்கு நம்பிள்ளை 'ஸர்வம்கல்விதம் ப்ரஹ்ம தத்த்வமஸி என்றக் கடவதிறே' என்கிறார் (10. 5. 3 - 36படி). அதாவது தானே படைத்து தானே இடந்து தானே உண்டு தானே உமிழ்ந்து தானே உலகெல்லாம் ஆள்வானாகையாலே 'தானேயுலகெல்லாம்' என்றபடி, வாதிகேசரி அழகிய மணவாளச்சீயரும் 'தானேயுலகெல்லாம்' என்பதற்கு நாராயண சப்தத்தால் சொல்லப்படும் எம்பெருமான் தானே 'ஸர்வம்கல்விதம் ப்ரஹ்ம' என்கிறபடியே சமமாகச் சொல்லலாம்படி எல்லா உலகத்துக்கும் ஏகப்ரகாரியாய் இருப்பவன் என்று உரையிடுகிறார் (10. 5. 3 - 12படி).

மேலும்,

'सदेव सोम्येदम् अग्र आसीत् एकमेव अध्वितीयम् |'

(ஸதேவ ஸோம்யேதம் அக்ரஆஸீத் ஏகமேவ அத்வதீயம்) என்கிற சாந்தோக்ய உபநிடத ஸத்வித்யை (6. 2. 1) வசனத்தால் இவ்வுலகமானது இதற்கு முன்பு பிரளய காலத்தில் 'ஸத்' என்ற ஒரே பெயருடனும் ஒரே உருவத்துடனும் ஒன்றாகவே இருந்தது என்று சொல்லப்பட்டுள்ளது. சுபாலோபநிடதமும் (2)

'तमः परे देवे एकी भवति '

'தம: பரேதேவ ஏகீ பவதி' என்கிறபடியே பிரளய காலம் வந்த போது தமஸ்ஸு தனியே தெரியாதபடி பரதேவதையில் ஒன்றி மறைகிறது என்று ஓதிற்று. இவ்விரண்டு உபநிடதக் கருத்தை உட்கொண்டு ஆழ்வார்,

'இல்லைநுணுக்கங்களே இதனிற்பிறிதென்னும் வண்ணம்

தொல்லைநன்னூலில்சொன்ன உருவும்அருவும்நீயே' (7. 8. 10)

என்று பாசுரமிடுகிறார். இதில் 'தொல்லை நன்னூலில் சொன்ன' என்பதனால் பழையதாய் ப்ரமாணத்தில் உயர்ந்ததான வேதத்தில் (ஸதேவ ஸோம்யேதம் அக்ர ஆஸீத்) சொல்லுகிற அறிவில் பொருள்களுக்கும் அதிற்காட்டில் நுண்ணிய அறிவுள் பொருள்களுக்கும் நிர்வாஹகன் எம்பெருமான் என்றபடி (7. 8. 10 - 36படி). பெரியவாச்சான் பிள்ளையும் மேற்கூறிய உபநிடதக் கருத்தில் பொருள் உரைப்பர். அதாவது 'ஸதேவ ஸோம்யேதம் அக்ர ஆஸீத்' என்கிறபடியே நாமரூபங்களை இழந்து தம: என்ற சொல்லுக்கு வாச்யமாய் 'தம: பரேதேவ ஏகீ பவதி' என்கிறபடியே அவன் தன்னைச் சொல்லுகிற சொல்லாலே சொல்லலாம்படியிருக்கை என்றவாறு (7. 8. 10-24 படி). இதனால் சிதசித்துக்கள் தனததீனம் என்றதாயிற்று.

இங்ஙனே சிதசித்துக்கள் பிரளய காலத்தில் தன்னோடு விட்டுப் பிரியாதபடி கலந்திருப்பதை,

'பிணக்கி யாவையும் யாவரும் பிழையாமல் பேதித்தும் பேதியாததோர்' (6. 2. 8) என்ற பாசுரத்தில் யாவையும் யாவரும் பிணக்கி என்று கொண்டு கூட்டி தன் பக்கல் பொருந்துகைக்கு நினைவில் இல்லாதவற்றையும், நினைவாலே பொருந்தாதவற்றையும் கூட்டி 'தம: பரேதேவ ஏகீ பவதி' என்று தன்னோடு பிரிக்கமுடியாதபடி கலசி என்று நம்பிள்ளை உரைப்பர் (6. 2. 8 - 36 படி). இப்படி தன்னோடு கலசியிருக்கும் நிலைமையில் எம்பெருமான் திருமேனியோடு விளங்கினான் என்பதை 'துடைத்த கோவிந்தனாரே உலகுயிர் தேவும் மற்றும்' (10. 2. 7 ) என்ற பாசுரத்தொடரில் காட்டுகிறார் ஆழ்வார். 'உலகங்களையும் மனிதர் முதலான பிராணிகளையும் தேவர்களையும் மற்றும் மஹத் முதலான பொருள்களையும் ஒன்றொழியாமல் படைத்து அழித்தவனாய் 'தம: பரேதேவ ஏகீ பவதி' என்கிறபடியே அந்தந்த நிலைமையில் விளங்குவதான திருமேனியோடு கூடியவனாகையாலே 'கோவிந்தன்' என்ற சொல்லுக்குப்

பொருளானவன்' என்பது வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் வாக்கு (10. 2. 7 - 12படி).

**எம்பெருமான் அளவிடற்கரியவன்:**

எம்பெருமான் எல்லார்க்கும் மேலான தலைவன்; தேவர்களுக்கெல்லாம் மேலான தேவன்; கருமத்துக்கு வசப்பட்ட உடலையும் உயிரையும் உடையவனல்லன்; தனக்கு ஒப்பாரையும் மிக்காரையுமுடையவனல்லன்; இயற்கையாகவே பலவகைப்பட்ட ஞானம், சக்தி, செயல்களையுடையவன். இது பற்றியே ச்வேதாச்வதர உபநிடதம் (6. 8)

'**न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते**' (ந தத்ஸ மச்சாப் யதிகச்ச த்ருச்யதே) என்று ஓதுகிறது. அதாவது எம்பெருமானுக்கு ஒப்பானவனும் மேம்பட்டவனும் காணப்படுகிவன்றி என்றவாறு. இது பற்றியே ஆழ்வாரும்

'மனனக மலமற மலர்மிசை யெழுதரும்
மனனுணர் வளவிலன் பொறியுணர் வவையிலன்
இனனுணர் முழுநலம் எதிர்நிகழ் கழிவினும்
இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே ' (1. 1. 2)

என்று பாசுரமிடுகிறார். இதில் 'மிகுநரையிலனே' என்பதனால் மிக்காரை உடையவனல்லன் என்றபடி (ந் - பெயரிடை நிலை). எம்பெருமானாகிய தான் ஆத்மாக்களைச் சரீரமாகக் கொண்டு தாரகனாய், எல்லோரையும் நியமிப்பவனாய் இருப்பது போல, தனக்கு மேம்பட்டாரை உடையவனல்லன் என்றவாறு, மேலும் இப் பாசுரத்தில் 'எதிர்நிகழ் கழிவினும் இனனிலன்' என்று அருளுகிறார். இதற்கு முக்காலத்திலும் இனன் இல்லாதவன் என்று உரையிடுவர் நம்பிள்ளை (1. 1 .2 -36 படி).

(இனன் - ஒப்பு). மேலும் 'இனனுணர் முழுநலம் இனனிலன்' என்கிற தொடருக்கு அரும்பத உரைகாரர் ச்ருதி ப்ரக்ரியையில் கருத்தை பின்வருமாறு தெரிவிக்கிறார். அதாவது,

**'ईद्रुशाय स्वाहा, कीद्रुशाय स्वाहा,ताद्रुशाय स्वाहा, विसद्रुशाय स्वाहा, सुसद्रुशाय स्वाहा |'** *(ஈத்ருசாய ஸ்வாஹா, கீத்ருசாய ஸ்வாஹா, தாத்ருசாய ஸ்வாஹா, விஸ்த்ருசாய ஸ்வாஹா, ஸுஸத்ருசாய ஸ்வாஹா) என்றபடி (யஜுர் வேதம் 7. 13. 17).*

'ஈத்ருசாய ஸ்வாஹா' என்பதனால் பிருஹதாரண்யக உபநிடதத்தில் (4. 4. 12) உப்புக் கட்டியானது உள்ளும் புறமும் உப்புச் சுவையுடன் இருப்பது போல எம்பெருமானுடைய திருமேனியும் உள்ளும் புறமும் ஞானமயமாகவே இருக்கும் என்று சொல்லுகிறபடியே. இப்படிப்பட்டவன் என்று நிரூபிக்கவேண்டுபவன்;

'கீத்ருசாய ஸ்வாஹா' என்பதனால் நேரே உபமானம் இல்லாமையினால் ஒன்றின்படியும் அல்லன் என்றபடி;

'தாத்ருசாய ஸ்வாஹா' என்பதனால் பின்னை ஒரு வடிவுக்கு மற்றொன்றைச் சொல்லி இப்படிப்பட்டவன் என்று நிரூபிக்கவேண்டுபவன்;

'விஸ்த்ருசாய் ஸ்வாஹா' என்பதனால் உபமானசூன்யன் என்றபடி;

'ஸுஸத்ருசாய ஸ்வாஹா' என்பதனால் வேறுபட்ட தர்மங்களையுடைய பொருள்களை எடுத்துக்காட்டாகக் கூறமுடியாதவன் என்றபடி.

இத்தகைய எம்பெருமான் மேன்மையோடு அவதாரத்தோடு வாசியற எல்லா நிலைமையிலும் ஒப்பில்லாதிருப்பதை,

'என்றும் ஒன்றாகி ஒத்தாரும் மிக்கார்களும்
தன்தனக்கு இன்றி நின்றானை' (4. 5. 7)

என்று குன்றமேந்தி குளிர் மழை காத்த கண்ணனாய் அவதரித்த நிலையில் இருந்தமையை அருளுகிறார் ஆழ்வார். இவ்விடத்தில் நம்பிள்ளை உரை இன்சுவையுடைத்தாயிருக்கும்.'எல்லாக் காலமும் எல்லாங்கூடின சமுதாயத்துக்கு ஒப்பில்லாமையேயன்றிக்கே ஓரோர் வகைக்கும் ஓர் ஒப்பின்றியே இருக்கும்; 'ந தத்ஸமச்ச' என்று மேற்கூறிய உபநிடதத் தொடரின்படியே ஒரு வகையில் ஒப்பில்லாமையும் மேலாயும் இருப்பான் எம்பெருமான்' (4. 5. 7-36படி). மேற்கூறிய உபநிடதத் தொடரின் கருத்தை 'ஒக்கார் மிக்காரை இலையாய மாமாயா' என்ற தொடராலும் அறியலாம் அதாவது 'ந தத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே' என்கிறபடியே ஸமாதிக தரித்ரனாய் இருக்கும் என்றபடி (2. 3. 2 - 36 படி). எனவே ஒப்பாரும் மேலாரையுமுடையையல்லையாய் அளவிற்கரிய வியப்பான குணங்கள் திருவிளையாடல்களையுடையவனே என்று சொல்லுகிறார்.

கேனோபநிடதத்தில் (2. 3) எம்பெருமானை முழுவதும் அளவிட்டு அறிய முடியாது என்று கீழ்வரும் மந்திரம் உணர்த்துகிறது:

**'यस्यामतं तस्यमतं, मतं यस्य नवेदसः |**
**अविज्ञातं विजानतां विज्ञातं अविज्ञानताम् ||'**

(யஸ்யாமதம் தஸ்ய மதம், மதம் யஸ்ய நவேதஸ: |
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதம் அவிஜ்ஞாநதாம் ||)

இதன் பொருள் வருமாறு:

'எவன் பரமாத்மாவை அளவிட்டு அறிய முடியாது என்று அறிகிறானோ அவனே பரமாத்மாவை அறிந்தவன்; எவன் பரமாத்மாவை அறிந்துவிட்டதாக நினைக்கிறானோ அவன் அறியாதவனே. பரம்பொருள், தன்னை அறிந்துவிட்டதாக நினைக்கிறவர்களுக்கு அறியப்படாததாகவும்,




அறிய முடியாது என்று நினைக்கிறவர்களுக்கு அறியப்பட்டதாகவும் ஆகிறது. இக்கருத்தை உட்கொண்டே ஆழ்வாரும் தான் மறக்கவும் மாட்டாதே நினைக்கவும் மாட்டாதே இருக்கிற நோயை எண்ணி, 'எண் பெரிய சிந்தை நோய் தீர்ப்பாரார்' (5. 4. 4) என்று கதறுகிறார். இவ்விடத்தில் நம்பிள்ளை உரை வருமாறு:

'யஸ்யாமதம் தஸ்யமதம்' என்கிறபடியே - வேதாந்தங்கள் நிலமன்று என்று மீண்ட பகவத் விஷயத்தை இத்தனை போதும் பேசினார்; நம்முடைய சிந்தை நோய் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஞானத்துக்கும் அவிஷயமாயிராநின்றது. 'எண் பெரிய - எண்ணுக்கு அகப்படாத என்னுமித்தனை - இவ்வளவு என்னப் போகாது' என்று உரைப்பர் (5. 4. 4 36 படி).

மேலும் 'என்றைக்குமென்னை' (7. 9. 1) என்ற பாசுரத்தில் 'என்னால் தன்னை' என்பதற்கு 'யதோ வாசோ நிவர்த்தந்தே' என்றும் 'யஸ்யாமதம் தஸ்யமதம் -அவிஜ்ஞாதம் விஜாநதாம்' என்றும் சொல்லுகிறபடியே பிரமாணங்களுக்கு அவ்விஷயமாயிருக்கிற தன்னை என்று உரைப்பர் நம்பிள்ளை (7. 9. 1 -36 படி).

'அறிந்தன வேதம்' என்ற பாசுரத்திலும் 'அறிந்தன கொள்க அரும் பொருளாதல்' என்பதற்கு அறியமுடியாதவன் என்னும் இவ்வளவு அறிந்தனவாகக் கொள்ள அமையும். ' யதோ வாசோ நிவர்த்தந்தே' என்றும் யஸ்யாமதம் தஸ்யமதம்' - என்றும் இவ்வளவு அறிந்தது என்று உரைத்தது காண்க (9. 3. 3 -36 படி).

பிருகதாரண்யக உபநிடதமும் 'இதை விட வேறு இல்லை இல்லை' என்று உபதேசம் செய்கிறது, '**अथात आदेशो नेतिनेति, न ह्येतस्मादिति नेत्यन्यत्परमस्ति इति**' (அதாத ஆதேஸோ நேதி நேதி நஹோத ஸ்மாதிதி நேத்யந்யத் பரமஸ்தி இதி) என்ற தொடரால். அதாவது பிரம்மத்துக்கு அளவில்லை என்ற கருத்து கூறப்படுகிறது. இதனை அடியொற்றியே ஆழ்வாரும், 'மனனக மலமற மலர்மிசை யெழுதரும் மனனுணர் வளவிலன்'

(1. 1. 2) என்று பாசுரமிடுகிறார். 'மனனுணர் வளவிலன்' என்பதனால் ம அறிவினால் அறிய முடியாதவன் என்றபடி, (மனன் உணர்வு என்பது ம அறிவு). ஆத்மாவானது மலர்ந்து கொழுந்து விட்டு மேன்மேல் எனக்கிள நின்றுள்ள மன அறிவினால் அறியப்பட்ட ஆத்மாவின் அளவை உடையவன் அல்லன் எம்பெருமான் என்றபடி. அதாவது ஒ இந்திரியத்தால் அறியப்படும் தன்மையன் அல்லன் என்பதாகு. பொன்னும் கரியும் முற்றிலும் வேறுபட்டிருந்தாலும் இவற்றை அறியு கருவியாகிய கண் ஒன்றாகவே இருக்கிறது. அவ்வாறு ஆத்மாவை அறியு மனத்தினால் பரமாத்மாவை அறிய முடியாது என்கை.

மேலும் 'மிக்கதூய மனத்தால் அறியப்படுகிறவன் எம்பெருமா என்று வேத வாக்யம் இருப்பினும் 'நேதிநேதி.....' என்று மேற்கூறியபடி 'இவ்வளவு மாத்திரமுமல்லன்; இப்படிப்பட்ட பொருள் வேறு இல்லை என்று அறிந்தால் அறியலாமேயன்றி இப்படிப்பட்டது; 'இன் அளவினையுடையது' என்று அளவிட்டு அறியமுடியாது என்று கூறுவ (1. 2. 2-36 படி). இது பற்றியே 'மனனுணர் வளவிலன்' என்கிறார்.

இங்ஙனே 'அடியேனுள்ளான்' (8. 8. 2) என்ற பாசுரத்தி 'பரம்பரன்' என்பதனால் 'மேலானவற்றுக்கெல்லாம் மேலானவன்' என்று 'நேதிநேதி' என்கிற்படியே இவ்வளவன்று என்னும் இத்தனை என் நம்பிள்ளை உரையிட்டது அறியற்பாலதாகும். (8. 8. 2 -36 படி).

**எம்பெருமான் எல்லா இனிமையோடு கூடியிருக்கும் தன்மையன்:**

சாந்தோக்ய உபநிடத சாண்டில்ய வித்யையில் மனோமய பிராணசரீரன் என்று போற்றும்படியான எல்லா குணங்களோடு கூடி எம்பெருமானை உபாஸித்தால் அவ்வுபாஸகன் கையிலிருப்பது அவ்வி ப்ரம்மத்தைப் பெறுவதாகிய மோக்ஷம் என்பர். அந்தக் குணங்களையுடை எம்பெருமானை,

**'मनोमयः प्राणशरीरः भारूपः सत्यसङ्कल्पः आकाशात्मा सर्वकर्मा सर्वकामः सर्वगन्धः सर्वरसः सर्वमित अभ्यात्तो अवाकी अनादरः ||'**

*(மநோமய: ப்ராணசரீர: பாரூப: ஸத்யஸங்கல்ப: ஆகாசாத்மா ஸர்வகர்மா ஸர்வகாமஸ் ஸர்வகந்தஸ் ஸர்வரஸஸ் ஸர்வமித மப்யாத்தோ அவாகீ அநாதர: ) (3.14. 2 ) என்று ஓதுகிறது. இம் மந்திரத்தில் ' ஸர்வகந்த: ஸர்வரஸ:' என்பதனால் இந்த உலகிலுள்ள நிலையற்ற வாசனைப் பொருள்களன்றியே அப்ராக்ருதமாய் அவனுக்கே உரியதாய் எக்குற்றமின்றி எல்லையற்ற நல்லனவும் தனக்கு அநுபவிக்கத்தக்கனவுமாய் எல்லாவித சுகமான வாசனை, சுவை ஆகியவற்றோடு கூடி இருக்கும் எம்பெருமானைச் சொன்னபடி.*

*இவ்வாறு எல்லாவித வாசனையையும் சுவையையுமுடைய எம்பெருமானை,*

*'மதுசூதன் எம்மான் தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம் தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதுமொத்தே' (2. 3. 1) என்று அருளுகிறார் ஆழ்வார். இவ்விடத்தில் எம்பெருமானார் நிர்வாகமாக ஈட்டில் காட்டியது குறிப்பிடத்தக்கதாகும். அதாவது 'தானும் நானுமான கலவிக்குள்ளே எல்லாச்சுவைகளும் பிறக்கும்படி கலக்கப் பெற்றோம் என்கிறார்' என்று. ஆனால் 'தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதும்' என்று ஒவ்வொரு வஸ்துவையும் உம்மை கொடுத்து பிரித்திருத்தலால் அவை ஒவ்வொன்றையும் தம்முள் ஒத்துக் கலந்தார் போலே என்று ஆளவந்தார் நிர்வகித்ததே பெரிதும் பொருத்தமுடைத்து. ஈண்டு ஒரு நுட்பமான விஷயம் குறிப்பிட விரும்புகிறேன். 'தேனும் நெய்யும் தம்முள் அளவு ஒத்து நஞ்சாதல் அறிக' என்றார் பரிமேலழகர் (உரை திருக்குறள் 4. அதிகாரம் 95 மருந்து). 'பாலோடு தேன் கலந்தற்றே' என்றார் வள்ளுவரும் (குறள் 1. 1113 சாதிதகாரம் காதற் சிறப்புரைத்தல்).*

அந்த எம்பெருமான் எப்படிப்பட்டவன் என்பதை உபநிடதங்கள் கொண்டு அரும்பத உரைகாரர் விளக்குகிறார் அதாவது எம்பெருமான் ஸர்வகந்த: ஸர்வரஸ: என்கிறபடியே எல்லாவித வாசனை சுவை நிரம்பப் பெற்றவன் என்றும்,

**'अथ यदिदमस्मिन् ब्रह्मपुरे दहरं पुण्डरीकं वेश्मदहरोऽस्मिन्नन्तर - आकाशः - तस्मिन् यदन्तस्तदन्वेष्टव्यम्'** (அத யதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம் வேச்மதஹரோஸ்மிந் அந்தராகாச: தஸ்மிந்யதந்தஸ் ததந்வேஷ்டவ்யம்) (சா.உ. 8.1.1) என்கிற வசனத்தின்படியே தஹர வித்யையில் சொல்லியபடியே இதய ஆகாசத்தில் இருப்பவன் என்றும் சொல்லுகிறது. அவ்வாறே 'யானும்' என்பதனால் சேதனனான ஆத்மா ஞானம் ஆனந்தம் ஆகியவற்றால் சிறப்புடையதாதலாலும் எம்பெருமான் ஒருவனையே 'அஹமந்நம் அஹமந்நம்' என்று அநுபவிப்பதாலும் எம்பெருமானோடு ஒப்பான எட்டு குணங்களை உடையவனாகையாலும், 'தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதமாகி' எல்லாவற்றின் சுவையும் உண்டாம்படி கலந்தோம் என்பர். மேலும் எம்பெருமான், சீரியரான வைகுந்தத்திலுள்ள தேவர்களும் முனிவர்களும் அநுபவிக்கும்படி கன்னல் சேர்ந்த கனி போல 'ஸர்வகந்த: ஸர்வரஸ:' என்கிறபடியே எல்லையற்ற இனிமையுடையவன் என்பதை, 'விழுமிய அமரர் முனிவர் விழுங்கும் கன்னற் கனியினை' (3. 6. 7) என்ற பாசுரத் தொடரில் அருளுவது காணலாம். இவர் கூற்றினைப் பின்பற்றித் திருமங்கையாழ்வாரும் 'விழுமிய முனிவர் வழங்கும் கோதிலின் கனியை' (பெ. தி 2. 3. 2) என்று அநுபவித்தார். எல்லா இனிமையோடு கூடியவன் எம்பெருமான் என்பதை மேலும் தெளிவாக விளக்கும் வகையில், 'தடங்கடல் சேர்ந்த பிரானை கனியைக் கரும்பினின் சாற்றைக் கட்டியைத் தேனையமுதை'

(3. 5. 6) என்ற பாசுரத் தொடர் மூலம் அருளுகிறார். இத்தொடருக்கு உரையிட்ட நம்பிள்ளை ஆழ்வார் திருவுள்ளத்தை நன்கு வெளிப்படுத்துகிறார்; அதாவது 'கனியை' என்பதனால் கடல் பழுத்தபடி; பாலிலே பழுத்தபடி; அங்குச் சாய்ந்து கிடக்கிற போதை வடிவழகால் வந்த இனிமையை 'ஸர்வ ரஸ:' என்று ஒரு சொல்லாலே சொல்லமாட்டார்; எல்லாம் சொல்லப்புக்கால் சொல்லித் தலைக்கட்டமாட்டார்; பலிதாம்சத்தில் சிலவற்றைச் சொல்லும் இத்தனை. ஆகையால் 'கனியை' என்கிறார் என்று உரைப்பர்; மேலும் அச்சுவையின் பல்வேறு நிலைமையைச் சொல்லும் போது 'கனி' என்று கண்ட போது நுகரலாம்படியாய், 'கரும்பினின் சாறு' என்று அதுதான் கோது கழிந்து சுவைப்பகுதியாய், 'கட்டி' என்று அது தன்னைத் திரட்டினதாய், 'தேன்' என்று அது தான் பருகலாம்படியாய், 'அமுது' என்று இனிமையே அன்றிக்கே சாவாமருந்தாயிருக்கை என்று தெளிவாகக் காட்டுவது அறியற்பாலதாகும். என்னே உரை நயம்! ஸர்வரஸமாயுள்ளது.

மேலும், 'முட்டில் பல் போகத்தொரு தனிநாயகன்' (3. 10. 3) என்ற பாசுரத்திலும் 'கட்டியைத் தேனையமுதை நன்பாலைக் கனியைக் கரும்புதன்னை' என்ற தொடருக்கு 'ஸர்வ ரஸ:' என்கிறபடியே கீழ்ச்சொன்னவையெல்லாம் உபமானமாகப் போராமையாலே அது தன்னையே சொல்லுகிறது. இவருடைய (ஆழ்வாருடைய) ஷட்ரஸம் (அறுசுவை) இருக்கிறபடி என்பது நம்பிள்ளை உரை (36 படி). இந்த நயம் பேச்சுக்கு நிலமன்று. இனி,

'கன்னலே அமுதே' (7. 1. 2) என்ற இடத்திலும் 'ஸர்வகந்த: ஸர்வரஸ:' என்கிறபடியே எல்லாவிதத்திலும் சுவையாய் அளவிறந்து கொள்ளமாளா இன்ப வெள்ளமாயிராநின்றதே என்பர் (7. 1. 2 - 36படி). 'உன்னை நான் அணுகாவகை செய்த போதி கண்டாய்' என்ற தொடரை

உட்கொண்டு அகலப்போனால் ஆற்றவொண்ணாத போக்யதை (இனிமை) இருக்கிறபடி எல்லாவிதமான ஸாரஸ்யம் என்பர் பெரியவாச்சான் பிள்ளை (7. 1. 2. - 24 படி).

இவ்வுபநிடதத் தொடரைப் பின்பற்றியே மற்றொரு பாசுரத்தில், 'தேனை நன்பாலைக் கன்னலை யமுதை' (8. 4. 11) என்று அநுபவிப்பர் ஆழ்வார். இதற்கு வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் உரை இன்சுவை யுடையதாகும். அதாவது எல்லாவித சுவையோடு கூடிய தேனாய், இயல்பான சுவையுடைய பாலாய், கணுத்தோறும் சுவையுடைய கரும்பாய், முடிந்த உயிரை பிழைப்பிக்கும் அமுதமாய் - இப்படி எல்லாவித சுவையுடையவன் எம்பெருமான் என்றபடி (8. 4. 11. - 12படி).

'வேதியர் முழுவேதத்தமுதத்தை' (3. 3. 5) என்ற இடத்திலும் 'அமுதம் - ஸ்வரூப போக்யதை. ரஸோவை ஸ:' என்னக்கடவதிறே என்பது நம்பிள்ளை வாக்கு (3. 3. 5. - 36படி).

மேலும் உருகுமால் நெஞ்சம் (9. 6. 1) என்ற பாசுரத்தில் தெருவெல்லாம் என்பதற்கு இரண்டாவது பொருளாக தெரு என்று புறம்பாய், எல்லாம் என்பதற்கு உள்ளாய் உள்ளோடு புறம்போடு வாசியற பரிமளம் அலையெறிகிறபடியைச் சொல்லுகிறார் நம்பிள்ளை. தெருவில் ஒரு பரிமளம், உள்ளு ஸர்வகந்த: என்று உபநிடதத் தொடரைக் காட்டி எம்பெருமானின் திருமேனி பரிமளத்தைச் சொன்னபடி (9. 6. 1. - 36படி).

**எம்பெருமானின் எல்லா உறவாயிருக்கும் தன்மை :**

**'माता पिता भ्राता निवासः शरणं सुहृत् गतिः नारायणः'**

(மாதா பிதா ப்ராதா நிவாஸ: சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:) என்று சுபாலோபநிடதம் (16) ஓதியபடியே நாராயணனே தாயாகவும் தந்தையாகவும் தன் உடன் பிறந்தவனாகவும் தங்குமிடமாகவும் வீடுபேறு

பெற உபாயமாகவும் நண்பனாகவும் வீடுபெற்று அடையப்படுபவனாகவும் இருக்கிறான். இது பற்றியே நம்மாழ்வாரும் உலகமக்களுக்குப் பக்தியோகத்தைப் பற்றி உபதேசிக்கும் போது,

'பற்றிலனீசனும் முற்றவும் நின்றனன்

பற்றிலையாய் அவன் முற்றிலடங்கே' (1. 2. 6)

என்று பாசுரமிடுகிறார். இப்பாசுரத்திற்கு மேற்கூறிய உபநிடதத் தொடரின்படி பட்டரின் பொருளாட்சியை எடுத்துக்காட்டி உரைப்பர் நம்பிள்ளை. அது வருமாறு: எம்பெருமான் எல்லாக் கல்யாண குணங்களோடு கூடியவன்; ஞானம் ஆனந்தம் குற்றமின்மை முதலானவற்றை இயல்பாகவுடையவன்; நித்ய ஸூரிகளுக்குத் தலைவன்; பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவன்; இவ்வாறு இருந்தும் அவர்கள் பக்கல் பற்று உடையவனல்லன்; அவர்கள் எல்லோராலும் வரும் ஏற்றமும் இன்று தன்னை அடைந்தவனாலேயாம்படி இருப்பவன்; எப்படியெனில், அன்று ஈன்ற கன்று பக்கல் தாயன்பாலே முன்பு அணைத்த கன்றையும் கொம்பாலே குத்துமாபோலே, இன்று கிட்டின ஒரு விலங்குக்கு (சுக்ரீவனுக்கு) வாட்டம் வந்தாலும் நித்யமாயிருக்கும் பிராட்டியாலும் கார்யமில்லை. ஆகையாலே 'மாதா பிதா ...நாராயண:' என்று மேற்கூறிய உபநிடதத்தின்படி எல்லாவித உறவாய் இருக்கும் எம்பெருமானையே எல்லாமாகப் பற்ற வேண்டும் என்றவாறு (1, 2. 6. - 36படி). மேலும்,

'என்னைப் பெற்ற அத்தாயாய்த் தந்தையாய்

அறியாதன அறிவித்த அத்தா' (2. 3. 2.)

என்ற பாசுரத்திலும் 'மாதா பிதா .....நாராயண:' என்கிறார் என்று பிரமாணம் காட்டி உரைப்பர் நம்பிள்ளை (2. 3. 2. - 36படி). அதாவது 'என்னைப் பெற்ற அத்தாயாய்' என்பதனால் தாயைப் போல

பரிவனானவனும் 'தந்தையாய்' என்பதனால் 'தந்தையைப் போல் நன்மையில் ஊற்றமுடையவனும்'; 'அறியாதன அறிவித்த அத்தா' என்பதனால் இவ்வாத்மாவுக்கு ஞான மலர்த்தியை உண்டாக்குகையாலே மிகவும் உதவியாளனான ஆசார்யனும் எம்பெருமானே என்றபடி. அவ்வாறே 'தஞ்சமாகிய தந்தை தாயொடு தானுமாய் அவையல்லனாய்' (3. 6. 9) என்று பாசுரமிடுகிறார் ஆழ்வார். அதாவது ஒரு நிலைமையில் பொகட்டுப்போம் தாயும் தந்தையும் போலல்லாமல் இவன் விடுமளவும் எம்பெருமான் தான் விடாத தஞ்சமாய் நன்மையைச் சொல்லுவதிலும் அன்பைக் காட்டுவதிலும் தந்தையுமாயும் தாயுமாயும் அவர்களோடு கூட தனக்கு அழிவன்றிக்கே தஞ்சமாய்த் தனக்கு நன்மையைப் பார்க்கும் தானுமாய் அது மட்டுமின்றி எல்லாவித உறவுமுடையவன் என்றபடி. இவ்விடத்தில் நம்பிள்ளை உரை இன்சுவையே வடிவெடுத்ததாய் இருக்கும்;

'தந்தையானவன் தாயாக மாட்டான்; தாயானவள் தந்தையாக மாட்டாள்; இவர்களிருவரும் இவன் தானாக மாட்டார்கள்; இவன்தான் இவர்கள் இருவரும் ஆகமாட்டான்; இவையெல்லாமாய், அதாவது தஞ்சமாகிய தந்தையாயும் தஞ்சமாகிய தாயாயும் தஞ்சமாகிய தானாயும் இருப்பன் எம்பெருமான்'. இது பற்றியே நம்பிள்ளையும், 'தந்தை தாய் தான்' என்னும் இவ்வளவன்றிக்கே 'அவையல்லனாய்' என்பதனால் 'மாதா பிதா .....நாராயண:' என்று சொல்கிறபடியே எல்லாவித உறவாய் இருப்பான் எம்பெருமான் அன்றோ என்று உரைப்பர் (3. 6. 9 36படி). மேலும் ஆயே இவ்வுலகத்து நிற்பனவும் திரிவனவும் நீயே (4. 9. 7) என்ற பாசுரத்தில் ஆயே என்பதனால் தாயே என்றபடியாய் 'மாதா பிதா' ...என்கிறபடியே எனக்கு எல்லாவித பந்துவர்க்கமும் ஆனவனே என்பது நம்பிள்ளை வாக்கு (4. 9. 7 - 36படி) 'மேலாத்தேவரும்' (5. 1. 8) என்ற பாசுரத்தில்

'சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய் தந்தையும் அவரே இனி யாவரே' என்ற தொடரால் இவ் விஷயம் வலியுறுத்தப்பட்டது காண்க (5. 1. 8. 36படி).

**எம்பெருமான் மிக்க ஒளியுடையவன்:**

எம்பெருமான் எல்லாக் காலத்திலும் எல்லா இடத்திலும் ஜீவாத்மாவின் உள்ளே புகுந்து தூண்டும் தன்மையாகிய ஆற்றலில் தளர்வில்லாது நிறைவோடே இருப்பவன்; இத்தகைய எம்பெருமான் மிக்க ஒளியையுடையவனாயிருக்கிறான் என்பதை,

**'द्वासुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते |**
**तमोरन्यः पिप्पलं स्वाद्वत्ति अनश्नन्नन्यो अभिचाकशीति ||'**

(த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே| தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வித்தி அநச்நந்நன்யோ அபிசாகசீதி) என்று முண்டகோபநிடதம் (3. 1. 1.) ஓதுகிறது. அதாவது ஜீவாத்மா பரமாத்மா இருவரும் சமமான குணமுடையவர்களாய், கூடியிருப்பவர்களாய், இரண்டு பறவைகள் போல் மரத்தைப் போலிருக்கிற ஒரு தேகத்தை அடைந்திருக்கிறார்கள். அவ்விருவருள் பரமாத்மாவைக் காட்டில் வேறுபட்ட ஜீவாத்மா புண்யபாபரூபமான கர்மத்தின் பயனை அநுபவிக்கிறான். பரமாத்மாவோவெனில் கர்மத்தின் சம்பந்தமற்றவனாய்ப் பிரகாசிக்கிறான் என்றபடி. இக்கருத்தை உட்கொண்டே ஒளிமிக்க எம்பெருமானை ஆழ்வாரும்,

'தளர்வின்றியேயென்றுமெங்கும் பரந்த தனிமுதல் ஞானமொன்றாய்
அளவுடையைம்புலன்களறியா வகையால் அருவாகிநிற்கும்
வளரொளி ஈசனை — (3.10.10) என்று போற்றுகிறார். இப்பாசுரத்தில்

'வளரொளி ஈசன்' என்பதனால் மேற்கூறிய சுருதியின் பொருளை உரைத்தபடி. இவ்விடத்தில் நம்பிள்ளை உரை இன்பம் பயக்கும். 'எம்பெருமான் எங்கும் பரந்தவனாய் தளர்வின்றிக்கே படைக்கும் போது தனக்கே உரிய ஸங்கல்பரூபத்தை உடையவனாய் இருக்கிறானாம். மேலும் ஒவ்வொரு பொருளிலும் குறைவுபடாதபடி எங்குமொக்க ஒரே மாதிரியாக எல்லாக் காலத்திலும் பரந்து, பொருள்களைப் படைக்கும் போது மூன்றுவித காரணமும் தானேயாய், பிரிதொன்றுக்கில்லாத சிறப்பை உடைய ஞானத்தை ஸ்வரூபமாகக் கொண்டு இருக்கிறானாம்; அப்படிப்பட்டவன் அளவுபட்ட விஷயங்களை அறிவிக்கிற ஐந்து இந்திரியங்களுக்கும் அறிய முடியாதபடி அருவானவன்; இப்படி சித்தான அறிவுள் பொருள் அசித்தான அறிவில் பொருள் ஆகியவற்றோடு கூடி அவற்றுக்கு உள்ளுறை ஆவியாய் நின்று,அவ்வவற்றின் குற்றங்கள் தனக்குத் தட்டாதபடி இருப்பவன்; மேலும் அந்தந்தப் பொருளை இயங்குவிப்பதால் வந்த மிக்க ஒளி உடையவன் ஈச்வரனாகையாலே மேற்கூறிய உபநிடதக் கருத்தின்படி வளரொளியாய் இருக்கிறான்' (3. 10. 10. - 36படி).

இவ்வாறு பிரமாண பிரசித்தமானதால் புலப்படும் பொருள்களோடு கலத்திருந்து ஒளிமிக்கவனாயிருப்பது மட்டுமின்றி, அவற்றின் தன்மைகளோடு தான் ஒட்டற்று நின்று ஒளியுடையவனாய் இருக்கிறான் என்பதை 'இலனது உடையனிது' (1. 1. 3) என்ற பாசுரத்தில் 'புலனலன்' என்ற இடத்திற்கு இவ்வுபநிடதத் தொடரைக் காட்டி உரைப்பர் நம்பிள்ளை (1. 1. 3. 36படி).

**'नारायण परं ब्रह्म तत्वं नारायणः परः |**

**नारायण परोज्योतिशत्मा नारायणः परः ||'**

(நாராயண பரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர: | நாராயணபரோஜ்யோதி: ஆத்மா நாராயண: பர: ||) என்று தைத்திரீய உபநிடத

நாராயணவல்லி (1. 11) ஓதுகிறது. அதாவது பரப்ரம்மமும் நாராயணனே; பரத்துவமும் நாராயணனே; உயர்ந்த சோதியும் நாராயணனே; உயர்ந்த ஆத்மாவும் (பரமாத்மாவும்) நாராயணனே; என்றவாறு. இவற்றில் உயர்ந்த சோதியை உடையவன் எம்பெருமான் என்பதை ஆழ்வாரும்

'தகும்சீர்த்தன்தனி முதலினுள்ளே
மிகும்தேவுமெப் பொருளும் படைக்க
தகும்கோலத்தாமரைக் கண்ணனெம்மான்
மிகும்சோதி மேலறிவார் யவரே' (2. 2. 5)

என்று பாசுரமிடுகிறார். இதில் 'மிகுஞ்சோதி' என்பதனால், பரஞ்ஜ்யோதிரூபஸம்பத்ய' என்று சாந்தோக்ய உபநிடத தஹ்ர வித்யை சொல்லியபடியும் 'நாராயண பரோஜ்யோதி' என்று மேற்கூறிய நாராயண அநுவாகத்தின்படியும் எம்பெருமானே உயர்ந்த சோதியாக விளங்குகிறான் என்று கூறுகிறார் (2. 2. 5. 36படி). மேலும் 'கட்டுரைக்கில் தாமரை' (3. 1. 2) என்ற பாசுரத்தில் 'பரஞ்சோதி' என்றதனாலும் இவ்விஷயம் கூறப்பட்டுள்ளது அறியற்பாலதாகும் (3. 1. 2. - 36படி).

**எம்பெருமான் உயர்ந்தோரைக் காட்டிலும் உயர்ந்தவன்:**

**'तमीश्वराणां परमं महेश्वरं तं देवतानां परमं च दैवतम् |'**

(தமீச்வராணாம் பரமம் மஹேச்வரம் தம் தேவதானாம் பரமம் ச தைவதம்) என்று சுவேதாச்வதரோபநிடதம் (6. 7) ஓதுகிறது. அதாவது ஈச்வரர்களுக்கும் மேலான மகாஈச்வரனும், தேவதைகளுக்கெல்லாம் மேலான பரதேவதையும் (முழுமுதற்கடவுளும்) எம்பெருமான் என்றபடி. ஆழ்வாரும் 'எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை' (3. 3. 2) என்று அருளுகிறார். 'எந்தை' என்பதனால் 'தானும் தந்தையுமாய்' என்றுசொல்லி, மற்ற ஐந்துமாக ஏழு தலைமுறைக்கும் தலைவனான எம்பெருமானைச் சொல்லுகிறார். ஒருவனுடைய உண்மை நிலையைச்

சொல்லும் போது 'அடியார் அடியார்' (3. 7. 10) என்று அடிமைத் தன்மைக்குக் கீழ் எல்லையில்லாதபடி சொல்லுமாபோலே தலைவனாம் தன்மைக்குத் தம்மோடு தம் தந்தை முதலானோர் தொடக்கமாக ஏழு தலைமுறையைக் காட்டி 'தமீச்வராணாம்......' என்று மேற்கூறியபடியே எம்பெருமான் எல்லாரைக்காட்டிலும் உயர்ந்தவனாவான் (3. 3. 2 - 36படி).

இத்தகைய எம்பெருமான் முதலில் அண்டத்தைப் படைத்து அவ்வண்டத்துள் பிரமனைப் படைத்தான்; அந்தப் பிரமனிடம் சிவன் பிறந்தான்; அண்டத்துக்கு உட்பட்ட பிரமன் முதலானோர் அண்டத்துக்கு முன்னே படைத்த மூலபிரகிருதி, மஹத், அஹங்காரம் என்று சொல்லும் தத்துவங்களை அறிய முடியாது. இவ்வாறு பிரமன் முதலானோரால் அறிய அரிதான நிலைமையையுடைய முதல் பிரகிருதியை ஆகாசம் என்ற சொல்லாலே பிருகதாரண்யக உபநிடதம் (5. 8. 6) கூறுகிறது.

**'यदूर्ध्वं गार्गि दिवो यदर्वाक् पृथिव्या, यदन्तरा द्यावा पृथिवी इमे यत् भूतंच भवंच भविष्यंचेत् यावक्षते, आकाश एव तदोतंच प्रोतंचति //'**

(யதூர்த்வம் கார்க்கி திவோ யதர்வாக் ப்ருதிவ்யா யதந்தராத்யாவா ப்ருதிவீ இமே யத் பூதஞ்ச பவஞ்ச பவிஷ்யஞ்சேத் யாசக்ஷதே, ஆகாச ஏவ ததோதஞ்ச ப்ரோதஞ்சேதி). இதன் பொருள் வருமாறு: கார்க்கீ! தேவலோகத்துக்கு மேலும் பூமிக்குக் கீழும் தேவலோக பூமிகளுக்கு இடையிலும் சென்ற காலம், நிகழ்காலம், வருங்காலம் என்னும் முக்காலங்களிலுள்ள எல்லாப் பொருள்களும் ஆகாசத்தை ஆச்ரயித்திருக்கின்றன. இதில் 'ஆகாசம்' என்றது எல்லாக் காரியப் பொருளுக்கும் ஆச்சர்யமாக இருக்க முடியாது ஆகையால் இங்கு ஆகாசம் என்றது சிறப்பாகச் சொல்லும் ஆகாசத்துக்கும் காரணமான மூலபிரகிருதியேயாகும் என்பர் ஸித்தாந்திகள் (ஸ்ரீ பாஷ்யம் அக்ஷராதிகரணம் 1. 3. 9).

ஆழ்வாரும், 'சுரரறிவருநிலை விண்முதல்' (1. 1. 8) என்ற பாசுரத்தில் 'விண்' என்ற சொல்லாலே ஆகாசத்துக்குக் காரணமான மூலபிரகிருதியைக் குறிப்பிடுகிறார் என்று நம்பிள்ளை உரைவழி மூலம் அறியலாம் (1. 1. 8. 36படி). அந்த மூலபிரகிருதி தொடக்கமான மேலுள்ள பொருள்கள் எல்லாவற்றுக்கும் ஆதாரமாகக் கூறப்படும் எம்பெருமான் சிறந்த காரணமாகத் திகழ்கிறான். இப்படிப்பட்ட எம்பெருமானை ஒருவரும் அறிய முடியாது என்று கடோபநிடதம் (1. 2. 25) ஓதுகிறது.

**'यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः| मृत्युर्यस्योपसेचनं कइत्था वेद यत्र सः ||'**

(யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரம் ச உபே பவத ஓதந:| ம்ருதயுந் யஸ்யோ பஸேசனம் கஇத்தா வேத யத்ர ஸ: ||). அதாவது எவனுக்குப் பிராமண க்ஷத்ரிய சாதிகள் இரண்டும் உட்கொள்ளக் கூடிய பொருள்களாக இருக்கின்றனவோ, எவனுக்கு யமன் ஊறுகாய் நிலையில் இருக்கிறானோ, அந்தப் பிரகாரத்தில் இருக்கிறவன் பெருமை (அதாவது எந்தப் பிரகாரத்துடன் கூடியவனாகயிருக்கிறான் என்பதை) எவன் அறிவான்? ஒருவனும் அறியமுடியாது என்றபடி. இதில் பிராமண அரச சாதிகள் என்று இரண்டு சாதிகளைச் சொன்னது எல்லா சேதனமான அறிவுள் பொருள், அசேதனமான அறிவில் பொருள் அடங்கிய உலகம் முழுவதும் சொன்னபடி, யமனை ஊறுகாய் நிலையில் சொல்லியது உணவுக்கு ருசியைக் கொடுத்துக் கொண்டு உணவை உண்ணும்படி செய்வித்துத் தானும் உண்ணப்படத்தக்கதாகையால், மேற்கூறிய உபநிடதக் கருத்தை உட்கொண்டே ஆழ்வாரும்

'சுரரறிவருநிலை விண்முதல்முழுவதும்
வரன்முதலாயவை முழுதுண்ட பரபரன்' (1. 1. 8)

என்று பாசுரமிடுகிறார். இதில் முதலடியினால் தேவர்களான பிரமன்

முதலானோர்க்கும் அறிய முடியாத நிலையையுடைத்தான ஆகாசம் முதலாயுள்ள எல்லா ஸமஷ்டிரூபமான பொருள்களைச் சொன்னபடி. 'வரன் முதலாய்' என்பதனால் எம்பெருமான் எல்லாவற்றுக்கும் காரணமான நிலையிருக்கும் போது கண்ணுக்குப் புலப்படாத உருவத்தோடு அவற்றில் பரந்திருந்து அவற்றைத் தன் மேல் ஏறிட்டுக் கொண்டு காத்தருள்கிறான் என்றும் எல்லாவற்றையும் காரியப் பொருள்களாகப் படைக்கும் போது அவற்றை அறிவிக்கின்ற கண் இந்திரியத்தால் அறியப்படாமல் இருப்பதாக அவ்யக்தம், மஹாந், அகங்காரம் என்கிற தத்துவங்களிலும் சூட்சுமரூபமாகப் பரந்து இருக்கிறான் என்றும் கூறுவர். இப்படி காரண பரம்பரையோடு காரிய பரம்பரையோடு வாசியறதானே நின்று நடத்திக் கொண்டு வருகையாலே எம்பெருமானின் சிறந்த காரணமாம் தன்மை சொல்லப்பட்டது.

மேற்கூறிய உபநிடதக் கருத்தின்படி அவற்றை மீதியில்லாமல் முழுதும் அழிக்கிறவனும் அவனேயாகையாலும் அப்படி இருக்கிறவன் பெருமை ஒருவராலும் அறியமாட்டாமையாலும் 'அவை முழுதுண்ட பரபரன்' என்கிறார் ஆழ்வார். பிரமன் முதலானோர் அதிகாரி புருஷர்களாக இருக்கையாலே நம்மைக் குறித்து அவர்கள் உயர்ந்தவர்கள்; அவர்களுக்கும் உயர்ந்தவனாய் இருக்கிறவன் எம்பெருமான் என்றபடி (1. 1. 8. 36படி).

இவ்வாறு எல்லாரைக்காட்டிலும் உயர்ந்தவன் எம்பெருமான் என்பதை,

'சென்று செல்லாதன முன்னிலாம் காலமே' (3. 8. 8.) என்ற இடத்திலும்,

'முனியே நான்முகனே முக்கண்ணப்பா' (10.10.1) என்ற இடத்திலும் மேற்கூறிய உபநிடதத் தொடர் கொண்டு உரைத்தது அறியற்பாலதாகும்.

*எம்பெருமானின் பரத்துவமும் ஸௌலப்யமும்:*

எம்பெருமானின் பரத்துவத்தை சுபாலோபநிடதம் பல அத்தியாயங்களில் விளக்கியுள்ளது.

எம்பெருமான் எல்லாபிராணிகளுக்கும் அந்தர்யாமியாயிருக்கிறான் என்றும், அப்படி இருப்பினும் அவற்றின் குற்றங்கள் தன்னிடம் தட்டாதபடி தோஷமற்றவன் என்றும், அப்பெருமான் பரமபதத்தை இருப்பிடமாகவுடையவன் என்றும், பிரகாசம் முதலான குணங்களோடு கூடியவன் என்றும் ஒப்பற்றவன் இப்படிப்பட்டவன் நாராயணன் ஒருவனே என்றும் கீழ்வரும் மந்திரம் மூலம் அறியப்படுகிறது. '**एष सर्व भूतान्तरात्मा अपहतपाप्मा दिव्यो देव एको नारायणः**' | (ஏஷ ஸர்வ பூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:) (சுபாலோபநிடதம் -7). இதில் 'பூத' சப்தத்தால் சிதசித்தாகிய இரண்டு தத்வங்கள் அடங்கிய விண்ணாட்டையும் மண்ணாட்டையும் சொன்னபடி; அவற்றுக்கு அந்தர்யாமியாயிருக்கிறான் எம்பெருமான் 'அபஹத பாப்மா' என்பதனால் எல்லாவற்றுக்கும் அந்தராத்மாவாயிருந்தும் அவற்றின் குற்றங்கள் தன்பக்கல் தட்டாதபடி இருக்குமவன் என்றபடி; 'திவ்ய:' என்பதனால் 'திவி-ஸ்தித:' என்று பரமபதநிலையன் என்றபடி; 'தேவ:' என்பதனால் பிரகாசம் முதலான குணங்களையுடையவன் என்றபடி; 'ஏக': என்றதனால் ஒப்பற்றவன் என்றபடி; இப்படிப்பட்டவன் ஒருவனே என்கிறது 'நாராயண:' என்ற சொல்.

இத்தகைய எம்பெருமானை ஆழ்வாரும் 'ஒன்றெனப்பலவென அறிவரும் வடிவினுள் நின்ற நன்றெழில் நாரணன்' (1. 3. 7) என்று அருளுகிறார். இதில் 'நன்றெழில் நாரணன்' என்பதனால் 'தன் வடிவைக் கண்டால் தானே ஈச்வரன் என்று தோற்றும்படி நல்ல எழிலை உடைய நாராயணன்' என்பர் நஞ்சீயர் (1. 3. 7 - 9படி). நம்பிள்ளை உரை இன்சுவையாய் இருக்கும்:

'நன்று' என்பதனால் அநந்யபரமான நாராயணாநுவாகாதிகளை நினைக்கிறார்; 'எழில்' என்றதனால் 'அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:' என்கிற புகரை நினைக்கிறார். ரூபஸ்ரீயைப் பார்த்தவாறே, 'கண்டவாற்றால் தனதே உலகென நின்றான்' (4. 5. 10) என்கிறபடியே எல்லாரையும் காப்பாற்றுபவன் இவனே என்னலாம். திருநாமத்தைப் பார்த்தவாறே தன்னை ஒழிந்தன அனைத்தும் பிரகாரமாய்க் கொண்டுதான் பிரகாரியாய் இருப்பான் ஒருவன் என்பது தோன்ற இருத்தலின் 'நாரணன்' என்றபடி (1. 3. 7 - 36படி).

மேலும் தைத்திரீய நாராயண உபநிடதத்தில் (11. 5)

**'नारायण परो ज्योतिरात्मा नारायणः परः|| यश्चकिंश्चिंजगत्यस्मिन् द्रश्यते श्रूयतेऽपिवा| अन्तर्बहिश्च तत् स्र्व व्याव्य नारायणः स्थितः ||'**

('நாராயண பரஜ்யோதிராத்மா நாராயண: பர: ||

யஸ்ச கிஞ்சித் ஜகத்ஸர்வம் த்ருச்யதே ச்ருயதேபிவா|

அந்தர் பஹிர்ச்ச தத்ஸர்வம் வ்யாவ்ய நாராயண: ஸ்தித: ||') என்று நாராயணனுடைய மேன்மைத் தன்மை ஓதப்பட்டுள்ளது. இதன் பொருள் வருமாறு: 'உயர்ந்த சோதியும் நாராயணனே;' உயர்ந்த ஆத்மாவும் நாராயணனே; இந்த உலகில் யாதொன்று காணப்படுகின்றதோ கேட்கவாவதுபடுகிறதோ அந்த எல்லாப்பொருளிலும் உள்ளிலும் வெளியிலும் நிறைந்து நாராயணானவன் இருக்கிறான். இக்கருத்தை உட்கொண்டே ஆழ்வாரும்,

'எண்பெருக்கந்நலத்து ஒண்பொருளீறில

வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே' (1. 2. 10) என்று பாசுரமிடுகிறார். இப்பாசுர அவதாரிகையில் நம்பிள்ளை மேலுள்ள உபநிடதத் தொடரைக் காட்டி உரையிடுகிறார். 'எண்பெருக்கு' என்பதனால்

எண்ணுக்கு அவ்வருகே பெருகியிருப்பதாயும் 'அந்நலம்' என்பதனால் அந்த ப்ரம்மாநந்தத்துக்குச் சமானமான ஆனந்தம் முதலான கல்யாண குணங்களையுடையதாயும் 'ஈறில' என்பதனால் நித்யமாயும் 'ஒண்பொருள்' என்பதனால் ஸ்வயம் பிரகாசமாயுள்ள ஆத்மவர்க்கத்தையும் 'ஈறில' என்பதனை 'வண்புகழோடும்' கூட்டி அதனால் எல்லையற்ற கல்யாண குணங்களையும் 'நாரணன்' என்பதனால் இப்படிப்பட்ட கல்யாண குணத்தைப் போல ஆத்மவர்க்கத்தையும் ஸ்வாதீனமாக உடையவனான நாரணனைச் சொன்னபடி (1. 2. 10.;12 36படிகள்). மேற்கூறிய உபநிடதத்தொடரில் 'நாராயண பரஜ்யோதிராத்மா நாராயண: பர:' என்பதனால் நாராயண பதத்தில் 'நாராணாம் அயநம் ய: ஸ: நாராயண:' என்கிற தத் புருஷ ஸித்தமான - வேற்றுமைத் தெரிகையாலான பரத்துவம் (மேன்மைத் தன்மை) சொல்லப்பட்டது. அதாவது தன்னைத் தவிர்த்த மற்ற பொருள்களுக்குத் தான் ஆதாரமாயிருக்கிற மேன்மைத் தன்மையைச் சொன்னபடி, 'அந்தர் பஹிர்ச்ச' என்பதனால் நாராயண பதத்தில் நாரா: அயநம் ய: ஸ: நாராயண: என்கிற பஹுவ்ரீஹி ஸித்தமான அன்மொழித் தொகையாலான ஸௌலப்யம் சொல்லப்பட்டது. அதாவது இப்படி மேன்மைத் தன்மையனான தான் எல்லாப் பொருள்களிலும் தன்னை அமைத்துக் கொண்டு உட்புகுந்திருக்கையாகிற ஸௌலப்யம் - எளிவந்த தன்மையைச் சொன்னபடி (1. 2. 10 36படி அரும்பத உரை).

**எம்பெருமானின் எங்கும் பரந்திருக்கும் தன்மை:**

சாந்தோக்கிய உபநிடத சாண்டில்ய வித்யையில் (3. 14. 3),

**'एष म आत्माऽन्तर्हृदये ज्यायन् पृथिव्याः ज्यायनन्तरिक्षाज्ज्यायान् दिवो ज्यायान् एभ्यो लोकेभ्यः ||'**

(ஏஷ ம ஆத்மா அந்தர்ஹிருதயே ஜ்யாயந்ப்ருத்வ்யா ஜ்யாயநந்தரிக்ஷாஜ்ஜயாயாந் திவோஜ்யாயாந் ஏப்யோ லோகேப்ய:)

என்கிறபடியே நாம் எம்பெருமானை உபாசிப்பதன் பொருட்டு அவன் மிக நுண்ணிய வடிவோடு இதயத்தில் இருப்பதாகவும், நமக்கு ப்ராப்யனாகும் போது அளவிறந்த பரிமாணத்தை உடையவனாகவும் இருப்பதாக அநுஸந்தானம் செய்ய வேணும் என்று கூறுகிறது. அதாவது காரணதசையோடு காரியதசையோடு வாசியற மிகவும் நுண்ணிதான சேதநாசேதங்களிலும் அளவிறந்து பரவியிருக்கும் என்றபடி. இது பற்றியே ஆழ்வாரும்,

'பரந்ததண்பரவையுள் நீர்தொறும்பரந்துளன்
பரந்தவண்டமிதென நிலவிசும்பொழிவறக்
கரந்தசிலிடந்தொறு மிடந்திகழ்பொருடொறும்
கரந்தெங்கும் பரந்துளனிவையுண்டகரனே' (1. 1. 10) என்று

பாசுரமிடுகிறார்.

இப்பாசுரத்தின் முதலடியினால் பரந்து குளிர்ந்திருக்கும் கடலில் நீரானது பரமாணுதோறும் எம்பெருமான் நிறைந்திருக்கிறான். 'ஜ்யாயநந்தரிக்ஷாந்' என்று மேற்கூறிய உபநிடதத்தில் ஆகாயத்திற் காட்டில் பெரியவன் எம்பெருமான் என்கிறது. அப்படிப்பட்டவன் பரமாணுதோறும் நெருக்குண்டு இருப்பானோ என்னில் ஆழ்வார், 'பரந்த அண்ட மீது எனப் பரந்துளன்' என்கிறார். அதாவது அந்த ஒவ்வொரு பரமாணுவும் பரந்த அண்டம் இது என்னும்படி அதற்குள் பரந்திருக்கிறானாம். ஓர் அண்டத்தை உண்டாக்கி அவ்வண்டத்தில் ஒருவனைத் தனியாக வைத்தது போன்று இருப்பன் என்றபடி (1. 1. 10 36படி). இதனால் எம்பெருமானின் எங்கும் பரந்திருக்கும் தன்மை சொல்லப்பட்டது.

ஜீவாத்மாவின் இதய குகையில் எம்பெருமான் பரந்து இருக்கிறான் என்பதை கீழே காணலாம். சாந்தோக்ய உபநிடத அந்தராதித்ய வித்யையில் (1. 6. 6) ஆதித்ய மண்டலத்தில் எம்பெருமான் இருக்கும் இருப்பை,

**'य एषो अन्तरादिध्ये हिरण्मयः पुरूषो दृश्यते | हिरण्यश्मश्रुहिरण्यकेशः आप्रणकात् सर्व एव सुवर्णः|तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी | तस-य उदिति नाम ||'**

( ய ஏஷோ அந்தராதித்யே ஹிரண்மய: புருஷோத்ருச்யதே| ஹிரண்யச்மச்ருர் ஹிரண்யகேச: ஆப்ரணகாத் ஸர்வஏவ ஸுவர்ண:| தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவமக்ஷிணீ| தஸ்ய உதிதிநாம||) என்று ஓதியுள்ளது. அதாவது சூரியனுக்கு நடுவில் பொன் போன்று அழகிய புருஷன் ஒருவன் காணப்படுகிறான்; ஒளியுடன் விரும்பத்தக்க மீசையும் மயிர்களையும் நகம் முதலிய எல்லா அவயவங்களையும் உடையவன் இந்த புருஷன்; அவனுக்கு சூரியகிரணங்களால் மலர்ந்த தாமரை போல் இரண்டு கண்கள் உள்; அவனுக்கு உத் என்று பெயர். இத்தகைய எம்பெருமான்,

**'स यच्चायम् पुरु षे | यच्चासावदिध्ये | स एक : |'** (ஸ யச்சாயம் புருஷே | யச்சாஸாவாதித்யே | ஸ ஏக: |) (தை. ஆ 8) என்கிறபடியே எவனொருவன் சூரியனுக்கு நடுவிலுள்ளானோ, எவனொருவன் இந்த ஜீவாத்மாவிடம் அந்தர்யாமியாக இருக்கிறானோ அவன் ஒருவனே என்று கூறுகிறது. அதாவது ஆதித்ய மண்டலத்தில் உள்ளபடியே இதய குகையிலும் இருக்கிறான் என்றபடி.

இத்தகைய எம்பெருமானே தம் நெஞ்சில் பொருந்தியிருக்கிறான் என்பதை ஆழ்வார் கீழ் வரும் பாசுரம் மூலம் உணர்த்துகிறார்.

'அந்தாமத்தன்பு செய்தென்னாவிசேரம்மானுக்கு
அந்தாமவாழ்முடி சங்காழிநூலாரமுள
செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாய் செங்கமலம்
செந்தாமரையடிக்கள் செம்பொன்திருவுடம்பே' (2. 5. 1)

இப்பாசுரத்தில் மேற்கூறிய அந்தராதித்யவித்யையில் சொன்ன ஹிரண்யமய விக்ரஹ யோகத்தை 'செம்பொன்திருவுடம்பு' என்பதனாலும்

புண்டரீகாக்ஷத்வாத்யவய சோபையை, 'செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் செந்தாமரையடிக்கண்' என்ற தொடராலும், கிரீடமகுடாத்யாபரண சோபையை 'அந்தாம வாழ்முடி' என்பதனாலும், த்ருதசங்க சக்ரத்வத்தை 'சங்காழி நூலாரமுள' என்பதனாலும் சொல்லியது காண்க. அப்படிப்பட்ட எம்பெருமான் மேற்கூறிய தைத்திரீய உபநிடதத்தின்படியே 'அந்தாமத்தன்பு செய் தென்னாவி சேரம்மான்' என்று ஆழ்வார் நெஞ்சில் பொருந்தியிருப்பதைக் காட்டுகிறார் வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் (2. 5. 1 - 12படி).

**எம்பெருமான் லீலாவிபூதிக்கும் (மண்ணாட்டுக்கும்) தலைவன்:**

லீலாவிபூதியாவது அரசர்கட்கு நாடெங்கும் தங்கள் ஆணை செல்லுமாயினும், தங்கள் தேவியரும் தாங்களுமாகச் சில பூந்தோட்டங்களுக்குத் தண்ணீர் வார்த்து அவற்றை உண்டாக்குவதும் அழிப்பதுமாக விளையாட்டு இன்பம் அநுபவிக்குமா போல எம்பெருமானும் பிராட்டியுமாகக் கண் குளிரப் பார்த்தால் உண்டாதலும், இல்லையாயின் இல்லையாதலுமாகி அவர்களுக்கு விளையாட்டின்பம் பயப்பதான உடைமையாகும். இந்த லீலாவிபூதிக்கு எம்பெருமான் தலைவனாயிருக்கிறான் என்பதை தைத்திரீயோபநிடத நாராயணாநுவாகம் (11) கூறுகிறது:

**'पतिं विश्वस्य आत्मेश्वरं शाश्वतं शिवमच्युदम् |'**

(பதிம் விச்வஸ்ய ஆத்மேச்வரம் சாச்வதம் சிவமச்யுதம்). 'பதி' என்பதனால் சேஷியானவன் தலைவன் என்றபடி; 'பா - ரக்ஷணே' என்ற தாது அடியாகக் காப்பாற்றுபவன் என்ற பொருளும் 'பதி' என்ற சொல்லால் சொல்லப்படுகிறது. ஆக எம்பெருமான் லீலாவிபூதிக்குத் தலைவனாகவும் காப்பாளனாகவும் இருக்கிறான் என்றபடி. இதுபற்றியே

ஆழ்வாரும், 'நிலனிடை விசும்பிடையுருவினன் அருவினன்' (1.1.3) என்று பாசுரமிடுகிறார். 'நிலனிடை' என்பதனால் கீழில் உண்டான உலகங்களையெல்லாம் குறிப்பதாகும். 'விசும்பிடை' என்பதனால் மேலுண்டான அதாவது 'பரமபதத்துக்கு இவ்வருகுள்ள உலகங்களையெல்லாம் குறிப்பதாகும். மேற்கூறிய உபநிடதத் தொடரின்படியே இவ்விரு உடைமைகளுக்கும் எம்பெருமான் தலைவன் என்றபடி; அதாவது கீழ்மேல் உண்டான சிதசித்துக்களையுடையவன் என்றவாறு, இத்தால் அந்தந்த தேசத்து அரசர்களுக்குள்ள அளவுபட்ட செல்வம் போலன்று இந்த லீலாவிபூதி என்றும், இது எல்லாருக்கும் தலைவனான எம்பெருமானது என்றும் கூறுவர் நம்பிள்ளை (1. 1. 3 - 36படி). இப்பாசுரத்தொடரில் 'உருவினன்' என்றது உருக்களான அசித்துக்களையுடையவன் என்றும் 'அருவினன்' என்பதனால் அருக்களான சித்துக்களையுடையவன் என்றும் சொன்னபடி. மேலும் 'அவரவர் தமதமதறிவறி வகைவகை' என்ற பாசுரத்தில் 'அவரவர் இறையவர் குறைவிலர்' என்று பொதுவிலே இறையவர் என்றார். அவர்களோடு அவர்கள் கிட்டுகிற தேவதைகளோடு தம்மோடு (ஆழ்வாரோடு) வாசியற எல்லார்க்கும் ஒக்க இறைவராகையாலே, மேற்கூறிய 'பதிம் விச்வஸ்ய' என்கிறபடியே எல்லார்க்கும் ஒக்க தலைவர் என்றபடி (1. 1. 5 - 36படி).

மேலும் மேற்கூறிய உபநிடதத் தொடரில் ஆத்மேச்வரம் என்பதனால் தனக்கு ஸ்வாமியானவன் என்றபடி அதாவது தனக்குத்தானே ஈச்வரனாக உள்ளவன். இவ்விடத்தில்,

**'आत्मा स्वमेव ईश्वरो यस्येति बहुव्रीहिः'**

(ஆத்மா ஸ்வமேவ ஈச்வரோ யஸ்யேதி பஹுவ்ரீஹி:) என்பது உரையாசிரியர் வசனம் (தை. உ. நா. ப. 104).

இது பற்றியே ஆழ்வாரும்,

'மூவராகிய மூர்த்தியை முதல் மூவர்க்கும் முதல்வன் தன்னை'

என்ற பாசுரத்தில் 'முதல்வன் தன்னை' என்பதனால் ஜகத் காரணபூதனாயிருந்துள்ள தன்னோடு கூடின மூவர்க்கும் காரணபூதனாய் உள்ளவன் என்றபடி. முதல் மூவரில் ஒருவனான தனக்குத்தான் முதல்வன் என்பது எங்ஙனேயென்னில் இவ்விடத்தில் நம்பிள்ளை உரை வருமாறு: 'தான் இவர்களுக்குக் காரணபூதனானவோபாதி, தனக்கு அவ்வருகு காரணாந்தரமின்றிக்கே இருக்கும்' என்றபடி (3. 6. 2 - 36படி). 'ஆத்மேச்வரம்' என்கிறபடியே என்று உபநிடதத் தொடர் காட்டி விளக்கியது காண்க.

எம்பெருமான் அந்தர்யாமியாயிருப்பவன்:

எம்பெருமான் பூமி முதலான எல்லா தேவதைகளுக்கும் எல்லாப் பிராணிகளுக்கும் எல்லா இந்திரியங்களுக்கும் எல்லா ஆத்மாக்களுக்கும் ஒன்றுவிடாமல் எல்லாவற்றுக்கும் உள்ளே புகுந்து நியமிக்கிறவன்; அத்தகைய எம்பெருமான் ஒருவனுடைய வாக்கு இந்திரியத்துக்கும் அந்தர்யாமியாயிருக்கிறான் என்பதைப் பிரகதாரண்யக உபநிடத அந்தர்யாமி பிராம்மணம் (5. 7. 21) இவ்வாறு ஓதுகிறது.

**'यो वाचि तिष्टन् वाचोऽन्तरो यं वाङ्न वेद,**
**यस्य वाक् शरीरम् ,**
**यो वाचमन्तरो यमयति,**
**एष त आत्माऽन्तर्याम्यमृतः || '**

(யோ வாசி திஷ்டந், வாசோந்தரோ யம் வாங்ன வேத, யஸ்யவாக் சரீரம், யோ வாசமந்தரோ யமயதி, ஏஷத ஆத்மாந்தர்யாம்யம்ருத:) இதன் பொருள் வருமாறு: 'எவனொருவன் வாக்கில் இருந்து கொண்டு வாக்குக்கு உள்ளே இருக்கிறானோ, எவனை வாக்கு தெரிந்து கொள்ளவில்லையோ, எவனுக்கு வாக்கு சரீரமாக இருக்கிறதோ, எவனொருவன் வாக்கை உள்ளிருந்து கொண்டு தூண்டுகிறானோ அந்த எம்பெருமான் உனக்கு ஆத்மா, அந்தர்யாமி, அழிவில்லாதவன்'

இப்படி வாக்குக்கு அந்தர்யாமியாயிருப்பவன் தன் நாவிலுள்ளான் என்று ஆழ்வார் கீழ் வரும் பாடலில் அநுபவிக்கிறார்.

'தோளிணைமேலும் முன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும்
தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்
கேளிணையொன்று மிலாதான்கிளரும் சுடரொளிமூர்த்தி
நாளணைந்தொன்று மகலானென்னுடை நாவினுளானே' (1. 9. 7)

இப்பாசுரத்தில் ஆழ்வார் உகந்தபடியே எம்பெருமான் தோளிணை, மார்பு, முடி, தாளிணைகளை அலங்கரித்துக் கொண்டு வந்து தம் நாவுக்கு விஷயமானானாம். இப்பாசுரத்தில் 'நாவினுளானே' என்பதனால் 'திவ்யாத்மத்ஸ்வரூபம் வாக் இந்திரியத்திலே இருக்குமாபோலே இவருடைய (ஆழ்வாருடைய) வாக் இந்திரியத்திலே விக்ரஹ விசிஷ்ட ஸ்வரூபம் இருக்கிறது' என்பர் அரும்பத உரைகாரர் (1. 9. 7).

மேலும் எம்பெருமான் மனம் முதலான இந்திரியங்களை நியமிப்பவனாயிருக்கிறான். இதனை கேனோபநிடதம் (1 2),

**'श्रोत्रस्य श्रोत्रं मनसो मनो यत् | वाचो ह वाचं स उ प्राणस्य प्राणः||'**

(ச்ரோத்ரஸ்ய ச்ரோத்ரம் மநஸோ மநோ யத் வாசோ ஹ வாசம் ஸ உ ப்ராணஸ்ய ப்ராண:) என்று ஓதுகிறது. 'ச்ரோத்ரஸ்ய ச்ரோத்ரம்' என்பதனால் எல்லாவற்றையும் கேட்பதற்கு உறுப்பான செவி

இந்திரியத்துக்குக் கேட்கும் தன்மை உடையவனாகி எம்பெருமான் இருக்கிறபடி; அவ்வாறே உள் இந்திரியமான மனதுக்கு 'மந அவபோதனே' என்ற அடியாக அறிதலைச் செய்பவனாக எம்பெருமான் திகழ்கிறபடியைச் சொல்லுகிறது. வாக் இந்திரியத்துக்கும் பேசும் தன்மையுடையவனாக எம்பெருமான் இருக்கிறபடி; 'ப்ராணஸ்ய ப்ராண:' என்பதனால் உடலைத் தரிக்கும்படியான செயலினால் உடல் முழுதும் பரவியிருக்கும் வாயுவான ப்ராணனுக்கு ப்ராணன் ஜீவனசக்தியைக் கொடுப்பவனான எம்பெருமான் என்றபடி. இவ்விடத்தில் எம்பெருமான் உட்புகுந்து ஜீவனசக்தி ஒன்றினாலேயே ஜீவனத்தைச் செய்கிறான். ஆகையால் 'ப்ராணஸ்ய ப்ராண:' என்றபடி.

இக்கருத்தை உட்கொண்டே ஆழ்வார் 'ஆருயிரேயோ' (8.1.5) என்று எம்பெருமானை விளித்துக் கூறுகிறார். இத்தொடருக்கு 'ப்ராணஸ்ய ப்ராண:' என்கிறபடியே தாரகமான ப்ராணன் முதலானவற்றுக்கு தாரகமாகையாலே பரிபூர்ண ப்ராணபூதன் என்று வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் உரை அமைத்தது குறிப்பிடத்தக்கதாகும் (8. 1. 5 -12படி).

**எம்பெருமான் எண்ணற்ற வடிவு திருநாமங்களை உடையவன்:**

எம்பெருமான் ஒத்தாரும் மிக்காருமில்லாத ஆதியஞ்சோதியானவன்; நாராயணன்,. விஷ்ணு, ஹரி, அனந்தன் என்று பல பெயர்களைக் கொண்டவன்; உண்மையில் உலகிலுள்ள எல்லாப் பொருள்களின் பெயர்களும் அவற்றுக்கு அந்தர்யாமியான இவனுடைய பெயர்களாகும். தன்னால் படைக்கப்பட்ட பொருள்களுக்குத் தன்னுடைய பெயர்களில் சிலவற்றைக் கொ்டுத்து இருக்கிறான் எம்பெருமான். ஆயினும் நாராயணன் முதலான ஆயிரக்கணக்கான பெயர்களைத் தன் பெயராகக் கொண்டு இருக்கிறான். உபநிடதங்களும் இக்கருத்தை நன்கு தெரிவிக்கின்றன.

சாந்தோக்கிய உபநிடதத்தில் (6. 3. 2)

**'अनेन जीवेनात्मना अनुप्रविश्य नामरुपे व्याकरवाणीति |'**

(அநேந ஜீவேநாத்மநா அநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணீதி) என்கிறபடியே எம்பெருமான் ஜீவசரீரகனாய் அந்தர்யாமியாய் அசித்தில் உட்புகுந்து நாமரூபங்களைப் பண்ணக்கடவோம் என்று 'ஸத்' சப்தத்தால் சொல்லப்படும் பரதேவதை சங்கல்பம் செய்ததாகக் கூறப்பட்டுள்ளது. இதனை உட்கொண்டே ஆழ்வாரும்,

'பேருமோராயிரம் பிறபலவுடைய வெம்பெருமான்' (1. 3. 4)

என்று பாசுரமிடுகிறார். இதனால் அநுபவிப்பவர்களுக்கு இழிந்த இடமெல்லாம் துறையாம்படி பல திருநாமங்களை உடையவன் எம்பெருமான் என்றும், குணத்துக்கு வாசகமாகவும் ஸ்வரூபத்துக்கு வாசகமாகவும் வரும் நாமங்களுக்கும் வடிவுக்கும் எல்லையில்லை என்றும் சொன்னபடி 'பிறபலவுடைய' என்பதனால் அந்த நாமமடியாக வரும் பல திருமேனிகளையுடையவன் என்பதை மேற்கூறிய உபநிடதத் தொடரைக் கொண்டு உரைப்பர் நம்பிள்ளை (1. 3. 4 36படி).

மேலும்,

'என்னை முற்றுமுயிருண்டு என் மாயவாக்கையிதனுள்

புக்கு...... அம்மான் திருவருளே' (10. 7. 3)

என்ற பாசுரத்தில் 'என் மாயவாக்கையிதனுள் புக்கு' என்பதற்கு 'அநாதி காலம் அசித்தோடேமுகம் பழகினவன் இவன் ஜீவன் என்றும் சேதனர் மூலமாக குந்தியடியிட்டு நிற்குமவனேயிறே அவன்; அத்தகைய எம்பெருமான் மேல் விழுகிறானாம். 'அநேந ஜீவேந.... என்கிறபடியே தனக்கு பிரகாரமான ஆத்மவஸ்துவுக்கு பிரகாரமாய்க் கொண்டு தனக்கு பிரகாரமாயிருக்கும் ஆழ்வாருடைய மாயவாக்கை' என்பர் நம்பிள்ளை (10. 7. 3 - 36படி).

'ஏகமூர்த்தி இருமூர்த்தி மூன்றுமூர்த்தி பல மூர்த்தியாகி.....அருவாகி' (4. 3. 3) என்ற பாசுரத்திலும் 'அருவாகி' என்பதற்கு 'அநேந ஜீவேந ஆத்மாநுப்ரவிச்ய' என்று ஜீவாந்தர்யாமிக்கு அநுப்ரவேசமாகையாலே, அதுவும் சொல்லிற்று என்பர் நம்பிள்ளை (4. 3. 3 36படி).

**எம்பெருமானின் திவ்யமங்கள திருமேனி முதலானவற்றின் அழகு:**

எம்பெருமான் எப்போதும் எவ்வித விகாரமற்றிருக்கும் வடிவையுடையவன்; அவனுக்கு திவ்யமங்கள திருமேனி உண்டு; அதுதான் நம்முடைய தியானத்துக்கு பற்றுக்கோடாக இருக்கிறது; அப்படிப்பட்ட வடிவில் மற்றெல்லா ஒளியையும் விஞ்சியிருக்கும் பேரொளியையுடையவன். இது பற்றியே,

**'न तत्र सूर्यो भाति न चन्द्र तारकम्,नेमा विद्युतो भान्ति, कुतोऽयमग्निः| तमेव भान्तमनुभाति, सर्वं , तस्य भासा सर्वमिदं विभाति |'**

(ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோயமக்நி:| தமேவ பாந்த மநுபாதி ஸர்வம் தஸ்யபாஸா ஸர்வம் இதம் விபாதி|) என்று கடோபநிடதம் (2. 2. 5) ஓதுகிறது. இதன் கருத்தாவது அங்கு எம்பெருமானுடைய ஒளியைக் காணும் போது சூரியன் பிரகாசிப்பதில்லை, சந்திரனும் நட்சத்திரங்களும் பிரகாசிப்பதில்லை; இந்த மின்னல்களும் பிரகாசிக்கமாட்டா; சூரியன் முதலானவை மங்கிப் போகும் போது நம்முடைய கண்ணுக்கு நெருப்பும் பிரகாசிக்கமாட்டா; அதாவது எம்பெருமானின் ஒளியால் இவையெல்லாம் மறைக்கப்படுகின்றன. எல்லாப் பொருள்களும் ஒளி மயமான எம்பெருமானைக் காரணமாகக் கொண்டே அவன் ஒளியைப்

பின்பற்றியே பிரகாசிக்கின்றன; எம்பெருமானது ஒளி மற்ற எல்லாஒளியுடைய பொருள்களுக்கும் காரணம்; உலகில் காரணம் முன்னும் காரியம் பின்னுமாய்க் காணப்படுவதால் இவ்விடத்தில் சூரியன் முதலானவை எம்பெருமானது ஒளி காரணமாகப் பின்னர் பிரகாசிக்கப்படுகின்றன; இவற்றின் ஒளி அதன் காரியமாகும். இவ்விடத்தில் உண்டான சூரிய ஒளி முதலான ஒளிகள் தங்கள் தங்களுக்குரிய ஒளிமயமான தொழிலைச் செய்வதற்கு வேண்டிய ஆற்றலை எம்பெருமானுடைய ஒளியிலிருந்தே பெறுகிறபடியால் அவனுடைய ஒளியால் இவையெல்லாம் பிரகாசிக்கின்றன என்பர்.

இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டே எல்லாரைக்காட்டிலும் உயர்ந்த எம்பெருமானை, 'பரஞ்சோதி நீ பரமாய்' (3. 1. 3) என்று அருளுகிறார். இவ்விடத்தில் நம்பிள்ளை 'பரமாய்ப் பரஞ்சோதிநீ' என்றுமுன்பின் மாற்றி உரை வகுக்கிறார். அது இன்சுவையே வடிவெடுத்ததாகும். வடிவழகினாலோ, செல்வத்தாலோ சற்று உயர்ந்தவனைக் கண்டால் உன்னைக் காட்டிலும் ஒளியுடையவனில்லை என்றும், 'உன்னைக் காட்டிலும் செல்வம் படைத்தவன் இல்லை' என்றும் கூறுவர். ஆனால் அப்படி ஒப்பின்மை காட்டிச் சொல்லாதபடியான நிறைவு எம்பெருமான் பக்கலிலே உள்ளதாதலால் அவனே உயர்ந்தவனாய் பரஞ்சோதியாய் இருக்கிறவன் என்று மேற்கூறிய உபநிடதக் கருத்தையே விரித்து உரைக்கிறார்.

இத்தகைய எம்பெருமானது திருமேனியோ அவன் தனக்கே இனியதாய், காலத்தால் வேறுபடாததாய், நினைத்தற்கரியதாய், குற்றமற்றதாய், ஒப்பற்ற ஒளியையுடைத்தாய், அவயவஅழகு மேனிஅழகுடன் நறுமணம் மென்மை முதலியவற்றோடு கூடியதாயிருக்கும். இவனது திருமேனி அழகை,

**'नीलतोयमध्यस्था विद्युल्लेखेव भास्वरा'** (நீலதோயத மத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா) என்று தைத்திரீயோபநிடத பிருகுவல்லி (11) ஓதுகிறது. அதாவது 'எம்பெருமான் கறுத்த மேகத்தின் நடுவிலுள்ள மின்னல் கொடி போல் ஒளியுடன் கூடியிருக்கிறான்' என்றபடி. நம்மாழ்வாரும்,

'சோதியாகி எல்லாவுலகும் தொழும் ஆதிமூர்த்தி' (3. 3. 5) என்ற பாசுரத்தில் எல்லையற்ற ஒளிமயமான திருமேனியுடையவனைச் 'சோதி' என்கிறார். மேலும் அவ்வுபநிடதத்தில் 'பீதாபா' என்பதனால் தானே பிரகாசமாயிருக்கும் என்றும் கூறுகிறது. இதனை 'சிரமத்தைப் போக்குவதான வடிவை ஒளியானது முட்டாக்கிட்டிருக்கும்' என்றும் அந்த ஒளி தன்னையே சிரமஹரமான வடிவுதான் விழுங்கும்படியிருக்கும் என்றும் உரைப்பர் நம்பிள்ளை (3. 3. 5 - 36படி). இத்தால் ஒன்றை ஒன்று விடாதே இரண்டும் எதையும் எதிர்பார்த்திருக்கை. பீதாபா என்றது தன் ஒளியைத் திருமேனி தான் பானம் பண்ணிக் கொண்டிருக்கும் என்றபடி. இந்த இடத்தில் சின்ன அரும்பத உரைகாரர் தெளிவாக விளக்கியுள்ளார். அதாவது, ஒளியாகில் சிவந்தன்றோ இருப்பது; கருமையான திருமேனியைச் சிவந்த சோதியாகச் சொல்லக் கூடுமோவென்னில் திருமேனிக்குக் கருமையும் உண்டு. ஒளியும் உண்டு. இரண்டும் ஒன்றை ஒன்று விட்டு இரா. இரண்டும் உண்டானாலும் 'நீலதோயத மத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா' என்று மேலே சொல்லியபடி ஒளியே விஞ்சியிருக்கும். திருவிருத்தத்தில் 'நல்முண்ட மின்னன்ன மேனி' (29) என்ற தொடருக்கு 'நீலதோயதத்தை விழுங்கின மின்னல் போல கருமையும் பொன்னான தன்மையும் கலந்த வடிவையுடைய ஸர்வேச்வரன்' என்று வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் உரை அருளியது ஒப்பு நோக்கத்தக்கது.

மேலும் நீலமேகம் உள்கொண்ட மின்னல் போன்றவளால் (பிராட்டியால்) குளிர்ந்த திருமேனியுள்ள பெருமையுடையவர் என்று அருளிய பெரியபரகால ஸ்வாமி உரையும் இவ்விடத்தில் ஒரு புடை ஒப்பு நோக்கத்தக்கது. எம்பெருமானாரும், **'सेयं दहरपुण्डरीक मध्यस्याकाशवर्तिनी शिखा स्वान्तर्निहित नीलतोयदा विद्युदिव भातीत्यर्थः'** (ஸேயம் தஹர புண்டரீக மத்யஸ்தாகாஸ வர்த்திநீ ஸிகா ஸ்வாந்த நிர்ஹித நீலதோயதர வித்யுதிவ பாதித்யர்த்த:) என்று வேதார்த்த ஸங்கிரஹ நூலில் அருளியமை காண்க.

மேலும்,

'நிறமுடைநால்தடந்தோள் செய்யவாய்செய்யதாமரைக்கண்
அறமுயலாழியங்கைக் கருமேனியம்மான்தன்னையே' (5. 1. 6)

என்று எம்பெருமானுடைய அழகிய திவ்யமங்கள திருமேனியை 'நீலதோயதமத்யஸ்த்தா' என்கிறபடியே இருதயத்திலிருக்கிறபடியைச் சொன்னபடி (5. 1. 6 - 36படி). 'தொண்டீர்வம்மின் நம் சுடரொளி ஒரு தனி முதல்வன்' (10. 1. 5) என்ற பாசுரத்திலும் 'நம் சுடரொளி' என்பதனால் 'நீலதோயதமத்யஸ்த்தா' என்கிறபடியே இருக்கிற எம்பெருமானது திவ்யமங்கள திருமேனி அழகு சொல்லப்பட்டது (10. 1. 5 - அரும்பதம்).

எம்பெருமானது திருமேனியானது மதுப்பெருக்காலே எல்லையற்ற அழகோடு கூடி இருப்பதை,

**'तदस्य प्रियमभिपाथो अश्यां नरोयत्र देवयवो मदन्ति|**
**उरुक्रमस्य स हि बन्धुरित्था विष्णोः परं परमे मध्व उत्सः ||'**

(ததஸ்ய ப்ரயமபிபாதோ அச்யாம் நரோ யத்ர தேவயவோ மதந்தி, உருக்ரமஸ்ய ஸ ஹி பந்துரித்தா விஷ்ணோ: பதே பரம மத்வ உத்ஸ:||) என்று யஜுர்வேதம் (2. 4) ஓதுகிறது. இது பற்றியே ஆழ்வாரும், 'நின்மாட்டாய மலர் புரையும் திருவுருவம்' (3.1. 4) என்று அநுபவிக்கிறார்.

அதாவது 'ப்ராப்தனான (அடையப்படுபவனான) உன்னுடைய ஸ்வரூபத்திலேயாய் புஷ்பம் போலே மென்மையான திருமேனி' என்பர் (3. 1. 4 - 12படி). உன் பக்கலிலே 'மத்வ உத்ஸ:' என்கிறபடியே மதுப் பெருக்காலே எல்லையற்ற அழகான திருமேனி என்பர் நம்பிள்ளை (3. 1. 4 - 36படி).

சூரிய மண்டலத்திலுள்ளிருக்கும் எம்பெருமானைப் பற்றி சாந்தோக்ய உபநிடதம் (1. 6. 6)

**'अथ य एषोऽन्तरादित्ये हिरण्मयपुरुषो दृश्यते |**

**हिरण्यश्मश्रुर्हिरण्यकेशः आ प्रणखात् सर्व एव सुवर्णः ||**

**तस्य यथा कप्यासं पुण्डरीकम्, एव मक्षिणीः |'** (அத ய ஏஷோ அந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே | ஹிரண்ய ச்மச்ருர் ஹிரண்யகேச ஆ ப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண: || தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவ மக்ஷிணீ:) இதன் பொருள் வருமாறு:

'சூரியனுக்கு நடுவில் பொன்மயனாய், பொன் மீசையை யுடையவனாய் பொன் போன்ற திருக்குழற்கற்றையை யுடையவனாய், நகம் வரையில் எல்லாமே பொன்னாயிருக்குமவனான யாவனொரு புருஷன் காணப்படுகிறானோ, அவனுக்கு சூரியனால் மலரும் தாமரை போன்ற இரு கண்கள் உள'.

இவ்வுபநிடத வாக்கியத்தில் 'தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவ மக்ஷிணீ:' என்ற தொடருக்கு அமைந்த ஆறு பொருள்களை மாமுனிகள் பிரமாணத்திரட்டு மூலம் அறியலாம்:

1. 'கப்யாஸம்' என்று சூரிய மண்டலமும், 'புண்டரீகம்' என்று இதயகமலமும் சொல்லப்படுகிறது. சூரிய மண்டலமும் இருதய புண்டரீகமும் எப்படி உபாஸனஸ்தானமோ அப்படியே உபாஸகனுடைய கண்களும் உபாஸனஸ்தானம்;

2. 'கப்யாஸம்' என்பதற்கு கொஞ்சம் மலர்ந்தது என்று பொருளாய் கொஞ்சம் மலர்ந்த தாமரைப் பூப் போலேயிருக்கும் சூரிய மண்டலத்தின் நடுவில் உள்ள புருஷனுடை கண்கள்;

3. 'கபி' என்றால் குரங்கு. 'ஆஸம்' என்பது ஆசனம். குரங்கின் ப்ருஷ்டம் (பின்புறம்). அது போன்ற தாமரை எப்படியோ அப்படி அந்தப் புருஷனது கண்கள்;

4. 'கம்' என்பது நீர், அதைக் குடிப்பதால் (உலர்த்துவதால்) கபி: என்று சூரியன். அதனால் மலர்கின்ற புண்டரீகம் தாமரைமலர் போன்று இருக்கும் அவனது கண்கள்;

5. 'கம்' என்பது நீர். அதைக் குடிப்பதால் 'கபி:' என்பது அதன் தண்டு. அதில் 'ஆஸம்'- இருப்பது. காம்பு கிள்ளி விட்ட மலரைக் காட்டிலும் காம்போடு கூடிய மலரின் அழகு வாடாமலிருக்கை அதிகமாகையால் தழைத்துத் தண்டோடு கூடிய தாமரை மலர் போன்றிருக்கும் அவனது கண்கள்;

6. 'கம்' என்பது நீர். 'ஆஸம்' என்பது இருப்பது. இதில் 'அபி' என்னும் உபஸர்க்கம் சேர்ந்து அகாரம் மறைந்து 'ப்யாஸம்' என்று இருக்கிறது. இருப்பது என்பது பொருள். ஆகவே ஆழமான நீரில் இருக்கிற தாமரை மலர் போல் இருக்கும் அவனது கண்கள்;

இந்த ஆறு அர்த்தங்களில் முதல் மூன்றும் பிற மதத்தவர் சொல்வன; பிந்தின மூன்றும் போதாயனருக்கு அபிமதமானவை என்பது விசிஷ்டாத்வைத மதக்கொள்கை. இதனை அடியொற்றியே இராமாநுசரும் வேதார்த்த ஸங்கிரஹத்தில்,

**'गम्भीराम्भस्समुद्भूत सुमृष्टनाल रविकर विकसित पुण्डरीक दलामलायतेक्षण:'**

(கம்பீராம்பஸ்ஸமுத்பூத - ஸும்ருஷ்டநாள - ரவிகர - விகஸித- புண்டரீக தளாமலாய தேக்ஷண:) என்று அருளியுள்ளார். அதாவது, ஆழமாகிய நீரில் உண்டாகியதும், பெருத்த தண்டோடு கூடியதும், சூரியகிரணங்களால் மலர்ந்ததுமான தாமரையிதழ் போன்று நிர்மலமாய் நீண்டுள்ளன அவனது கண்கள் என்றவாறு.

ஆழ்வாரும்,

'செய்யதாமரைக் கண்ணனாயுலகேழுமுண்ட அவன் கண்டீர்' (3. 6.1) என்ற பாசுரத்தில், 'செய்யதாமரைக் கண்ணனாய்' என்பதனால் (எல்லாவற்றைக் காட்டிலும் உயர்ந்த மேன்மைத் தன்மையால் வந்த ஐச்வர்யத்தைத் தெரிவிக்குமதான) சிவந்த தாமரை போலும் கண்ணழகு உடையவன் எம்பெருமான் என்று அருளுகிறார். இத்தொடருக்கு உரையிட்ட நம்பிள்ளை, 'தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவ மக்ஷிணீ:' என்றும் 'யஜ்ஞேசோ யஜ்ஞபுருஷ: புண்டரீகாக்ஷ ஸம்ஜ்ஞித:' என்றும் ச்ருதி ஸ்ம்ருதிமுதலானவற்றில் சொல்லப்படா நின்றுள்ள, அப்போது அலர்ந்த செவ்வித்தாமரை போல இருந்துள்ள திருக்கண்களையுடையவன் என்று மேற்கூறிய 4வது, 6வது பொருள்களைப் பின்பற்றி உரையிடுகிறார் (3. 6.1 - 36படி). மேலும்,

'வெஞ்சுடரில்தானடுமால் வீங்கிருளினுண்துளியாய்
அஞ்சுடரவெய்யோன் அணிநெடுந்தேர்தோன்றாதால்
செஞ்சுடர்த்தாமரைக்கண் செல்வனும்வாரானால்
நெஞ்சிடர்தீர்ப்பார் இனியார்? நின்றுருகுகின்றேனே' (5. 4. 9.)

என்ற பாசுரத்தில் 'செஞ்சுடர்த்தாமரைக்கண் செல்வன்' என்பதனால் 'தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவ மக்ஷிணீ:' என்று ஆதித்ய மண்டலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவந்த சுடரையுடைய தாமரை போன்ற கண்களையுடைய ஸ்ரீமான் என்று நம்பிள்ளை உரைப்பர் (5. 4. 9 - 36படி).

இவ்வுபநிடதத் தொடரைக் காட்டி 'கண்கள் சிவந்து' (8. 8. 1) என்ற இடத்தில் விவரித்துள்ளது அறியற்பாலதாகும் (8. 8. 1 - 36படி) இங்ஙனே பல இடங்கள் உள்ளன. எம்பெருமான் வடிவழகைப் பற்றி பிரகதாரண்யக உபநிடதம்,

**'तस्य है तस्य पुरुषस्य रुपं यथा माहारजनं वसो यथा पाण्ड्वाविक यथेन्द्रगोपो यथाग्न्यर्चि यथा पुण्डरीकं यथासकृद्विद्यत्तम् |'**

(தஸ்ய ஹை தஸ்ய புருஷஸ்ய ரூபம் யதா மாஹாரஜநம் வாஸோ யதா பாண்ட்வாவிகம் யதா இந்த்ரகோபோ யதா அக்ந்யர்ச்சி யதா புண்டரீகம் யதா ஸக்ருத் வித்யுத்தம்) என்று ஓதுகிறது. இதன் பொருள் வருமாறு: 'அந்தப் புருஷனுக்கு ரூபம் குஸும்ப வஸ்த்ரம் போலவும், வெள்ளைக் கம்பளி போலவும், பட்டுப்பூச்சி போலவும், அக்னிஜ்வாலை போலவும் தாமரைப்பூப் போலவும், மின்னல் போலவும் விளங்குகிறது'.

நம்மாழ்வார் 'கண்ணி எனதுயிர் காதல்கனகச்சோதி முடிமுதலா எண்ணில்பலகலன்களும் ஏலுமாடையும் அஃதே' (4. 3. 5) என்ற தொடர் மூலம் இனியனாய், தலைவனாய், உதவியாளனாய், சுலபனான கண்ணனுக்குத் தன்னுடைய ஆசைகள் ஆபரணம் ஆடை முதலானதாக நின்றன என்கிறார். இப்பாசுரத்தில் 'ஏலுமாடையுமஃதே' என்பதற்கு மேற்கூறிய ச்ருதியில் 'மஹாராஜநம் வாஸ:' என்று கூறியபடியே புருஷோத்தம லக்ஷணமான திருப்பீதாம்பரமும், அக்காதலே என்பர் நம்பிள்ளை (4. 3. 5 - 36படி). இதனால் அந்தப் பரம்பொருளுக்கு ரூபமானது குஸும்ப பீதாம்பரம் போலுள்ளது என்பதாகும்.

**எம்பெருமானின் கல்யாணகுண யோகம் :**

இறைவனாகிய ஸ்ரீமந் நாராயணன் தாழ்வுகள் அனைத்துக்கும் எதிர்த்தட்டானவன்; தன்னைக் காட்டிலும் வேறுபட்ட சிதசித்துக்கள் இரண்டையும் தன்னை விட்டுப் பிரியாத சரீரமாகக் கொண்டிருக்கையாலே எல்லாம் அவனே என்று சொல்லும்படி இருப்பவன்; கல்யாண குணங்கள்

அனைத்துக்கும் கொள்கலமானவன்; அவனது கல்யாண குணங்களில் ஒன்றான ஆனந்த குணத்தைத் தைத்திரீய உபநிடத ஆனந்தவல்லி (2. 8),

**'युवा स्यात् साधु युवाध्यायकः | आशिष्ठो द्रढिष्ठो बलिष्ठः | तस्येयं पृथिवी सर्वा वित्तस्य पूर्णास्यात् | सएको मानुष आनन्दः ||**

(யுவா ஸ்யாத் ஸாது யுவாத்யாயக:| ஆஸிஷ்டோத்ரடிஷ்டோ பலிஷ்ட:| தஸ்யேயம் ப்ரதிவீ ஸர்வாவித் தஸ்ய| பூர்ணாஸ்யாத்| ஸ ஏகோ மாநுஷ ஆநந்த:||) என்று ஒரு மனிதனின் ஆனந்த குணத்தைக் காட்டி அளவிட்டு அறியமுடியாமையைச் சொல்லிற்று. அதாவது - இளம் வயதுடையவன் - நல்ல யௌவனத்தை உடையவனாகவும், வேதங்களை ஓதியவனாகவும், தன் வயது பிள்ளைகளுக்கு நன்றாக ஓதுவிக்கும் திறமையுடையவனாகவும், விரைவில் கார்யம் செய்யும் திறமையுடையவனாகவும், வியாதி இல்லாதவனாயும், மனதில் தைர்யம் உள்ளவனாயும், உடலில் பலமுள்ளவனாகவும் இருந்தால், - அந்த மனிதனுக்கு இந்த பூமியெல்லாம் செல்வத்தால் நிறைந்ததாக இருந்தால், அது ஒரு மனிதனுடைய ஆனந்தம் என்றபடி. இதைப் போல் நூறு மடங்கு பெருகியுள்ளது மனுஷ்ய கந்தர்வர்களின் ஆனந்தம். இனி தேவ, கந்தர்வர், பித்ருக்கள், தேவலோகத்தில் பிறந்தவர்கள், தேவலோக முக்தி பெற்றவர்கள், தேவர்கள், இந்திரன், பிரகஸ்பதி, பிரமன் வரையிலுள்ள ஆனந்தத்தை நூறு மடங்குப் பெருக்கிச் சேர்த்து இவ்வண்ணமாக பிரமனின் ஆனந்தம் நூறு கொண்டது பரம்பொருளின் ஆனந்தமாகச் சொல்லிப் பார்த்தாலும் அதைவிட உயர்ந்தது பரம்பொருளின் ஆனந்தமாகும். இப்படிப்பட்ட ஆனந்தத்தின் அளவை மனத்தாலும் வாயாலும் நினைக்கவும் சொல்லவும் முடியாது என்பதை,

**'यतो वाचो निवर्तन्ते| अप्राप्य मनसा सह | आनन्दं ब्रह्मणो विध्वान् न पिभेति कदाचनेति |'**

(யதோ வாசோ நிவர்த்தந்தே| அப்ராப்ய மனஸா ஸஹ| ஆனந்தம்

ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி கதாசநேதி|) என்று இவ்வுபநிடதமே கூறியுள்ளது. அத்தகைய ஆனந்த குணத்தை அறிந்தவன் எவனிடமும் பயப்படமாட்டான் என்றும் கூறுகிறது.

இது பற்றியே நம்மாழ்வாரும் நான்முகனின் ஆனந்தத்தைக் காட்டிலும் சொல்ல முடியாததும் மனதால் நினைக்க முடியாததுமான ஆனந்த குணத்தோடு கூடிய எம்பெருமானை,

'உயர்வற உயர்நலமுடையவன்' (1. 1. 1)

என்று அருளுகிறார். 'உயர்வற' என்பதனால் எம்பெருமானுடைய ஆனந்தத்தை விட மற்றவர்களுடைய ஆனந்தத்தில் உயர்த்தி இல்லையாம்படி என்றவாறு. அதாவது இதற்கு மேலான ஆனந்தத்தின் உயர்த்தி எங்கும் எப்போதும் இல்லை என்றபடி. 'உயர்நலம்' என்பதனால் மிக உயர்ந்த ஆனந்தம் முதலான கல்யாண குணங்களைச் சொன்னபடி. எனவே, மேற்கூறிய உபநிடதத்தின் விரிவான பொருளைச் சுருக்கமாகத் திருவாய்மொழி தொடக்கத்தில் முதலடியிலேயே ஆழ்வார் அருளியது அறியற்பாலதாகும்.

மேலும் வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத சிறப்புடையவனாயிருந்தும் எம்பெருமான் ஆழ்வாரோடு கலந்த மகாகுணத்தைப் பற்றிப் பேச நிலமன்று என்று கீழ்வரும் பாசுரம் மூலமாக அறிவிக்கிறார்.

'பொன்முடியம் போரேற்றை யெம்மானை நால்தடந்தோள்
தன்முடிவொன்றில்லாத தண்துழாய் மாலையனை
என்முடிவுகாணாதே யென்னுள் கலந்தானை
சொல்முடிவு காணேன்நான் சொல்லுவதென்சொல்லீரே'

(2. 5. 8). இப்பாசுரத்தில் 'நாற்றடந்தோள் தன்முடிவொன்றில்லாத தண்துழாய் மாலையனை' என்பதனால் 'நாலாய் பிணைத்த தோள்களை உடையவனாய், தன்னைப் பேச புகுந்தால் வேதங்களும் எல்லை காண

முடியாதே 'யதோ வாசோ நிவர்த்தந்தே' என்கிறபடிே மீளும்படியிருப்பவனாய் இருக்கிற தண் துழாய் மாலையன்' என். இருப்பவன் ஆழ்வாரோடு கலந்த ஸௌசீல்ய குணத்தைச் சொன்னப (2. 5. 8 - 36படி).

இங்ஙனே மேற்கூறிய 'யதோ வாசோ நிவர்த்தந்தே' என்கி உபநிடதக் கருத்தை

'தாமரைக் கண்ணனை விண்ணோர்பரவும் தலைமகனை துழாய்விரைப்பூமருவுகண்ணி எம்பிரானைப் பொன்மலையை' 'நன்கேத் (2. 6. 3) என்ற இடத்திலும், 'கட்டுரைக்கில் தாமரை' (3. 1. 2) என்ற பாசுரத்தி 'ஒட்டு உரைத்து இவ்வுலகுன்னை' என்பதனாலும் 'வாய் கொண் மானிடம் பாடவந்த கவியனல்லேன் ஆய்கொண்டசீர்' (3. 9. 9) என் இடத்திலும், 'வாசகமாலை கொண்டு உன்னையே' (3. 8. 10) என் தொடரிலும், 'ஆம்வண்ணம் இன்னதொன்றென்று அறிவதரியஅரி (7. 8. 11) என்ற இடத்திலும், 'தன்னாக்கி என்னால்தன்னை' (7. 9. 1) என் இடத்திலும், 'என்னால்தன்னை உறப்பலவின்கவி' (7. 9. 9)என்ற இடத்திலு மற்றும் 'உரிய சொல் மாலை' (8. 1. 11) என்ற இடத்திலும் நம்பிள்ளை சுட்டிக் காட்டி உரைத்தது அநுபவிக்கத்தக்கதாகும்.

**எம்பெருமான் அருளின் பெருமை:**

அணுவைக் காட்டிலும் அணுவாய், பெரிய வஸ்துக்களை காட்டிலும் மிகப் பெரிய வஸ்துவாய் எல்லாவற்றிலும் நிறைந்திருக்கு பரமாத்மாவானவன் இந்தப் பிராணிகளின் இதயகுகையில் இருக்கிறா கர்மபந்தமற்றவனும், மகிமை பொருந்தியவனும், எல்லாவற்றையு தூண்டுபவனான பரமாத்மாவை ஜீவன் பார்க்கிறானோ அப்போ. அவனது அருளாலே துக்கம் நீங்கப் பெற்றவனாகிறான் என்று

தைத்திரீயோபநிடத நாராயணவல்லி (10) ஓதுகிறது.

**'अणोरणीयान् महतो महीयानात्मा गुहायां निहितोऽस्य जन्तोः |**
**तमक्रतुं पश्यति वीतशोको धातुः प्रसादात्महिमानं ईशम् ||'**

(அணோரணியாந் மஹதோ மஹீயாந் ஆத்மாகுஹாயாம் நிஹிதோஅஸ்ய ஜந்தோ: |தமக்ரதும் பச்யதி வீதசோகோ் தாது: ப்ரஸாதாந் மஹிமாநமீசம் ||) கடோபநிடதத்திலும் (2. 20) ச்வேதாச்வதர உபநிடதத்திலும் (3) இம்மந்திரம் சற்று வேறுபட்டு ஓதப்பட்டுள்ளது காண்க.

'அணோரணியாந்' என்பதனால் எல்லாவற்றைக் காட்டிலும் நுண்ணிய அணுவான ஆத்மாவிலும் நுண்ணிய அணுவாயிருக்கும் இருப்பைச் சொன்னபடி; 'மஹதோ மஹீயாந்' என்பதனால் பரந்த பூமியைக் காட்டிலும் மிகவும் பரந்ததாய் விபுவாயிருக்கும் இருப்பைச் சொன்னபடி; 'ஆத்மா' என்பதனால் அணுவைக் காட்டிலும் நுண்ணியதாய், பரந்து எல்லாப் பிராணிகளுக்கும் ஆத்மாவாயிருக்கும் தன்மை சொல்லப்பட்டது; 'அக்ரதும்' என்பதனால் இப்படிப்பட்ட இனத்தவன், இப்படிப்பட்ட குணமுடையவன், இப்படிப்பட்ட ஒழுக்கத்தையுடையவன் என்று காப்பாற்றுவதில் நியதியில்லாத - எல்லாரையும் காப்பாற்றுவேன் என்னும் ஸங்கல்பத்தை உடையவனாய் எல்லாவற்றையும் காப்பாற்றுவதிலேயே தீட்சதனானவன் என்றபடி; 'வீதசோக:' என்பதனால் பிறவியின் துக்கம் நீங்கப் பெற்றவனாகிறான் என்றபடி; 'ப்ரஸாதாத்' என்பதனால் 'யமேவைஷ வ்ருணுதே தேனலப்யஸ்தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூஸ்வாம்' என்று கடோபநிடதம் ஓதியபடியே யாதொருவனை இந்தப் பரமாத்மா வேண்டுகிறானோ அவனால் அடையத் தகுந்தவன்; அவனுக்கு இந்த பரமாத்மா தன் ஸ்வரூபத்தை காட்டுகிறான் என்றபடி; 'மஹிமாநம்' என்பதனால் 'தனக்கேவுரிய மகிமையோடு கூடியவன்' என்றபடி; 'ஈசம்'

என்பதனால் எல்லா ஆத்மாக்களுக்கும் தலைவனாம்படியைச் சொன்னவாறு. 'ஈசம் ஸர்வஸ்ய சேஷிபூதம் பரமாத்மானம் யதா பச்யதி ததாதாது: ஸர்வ ஸ்ரஷ்ட்டு: தஸ்ய பரமாத்மந: ப்ரஸாதாத் வீதஸோக: பவதி இத்யர்த்த:' என்பது உபநிடதவுரைகாரர் வாக்கு (தை. நா. ப. 92). இந்த மந்திரத்தினால் ஜகத் காரணனுடைய எல்லாவற்றிலும் பரந்திருக்கும் தன்மை (ஸர்வ வ்யாபித்வம்), எல்லாருக்கும் ஆத்மாவாம் தன்மை (ஸர்வாத்மத்வம்), எல்லாவற்றையும் தூண்டும் தன்மை (ஸர்வ நியந்த்ருத்வம்), நாராயணனாம் தன்மை (நாராயணத்வம்), அவன் அருள் ஒன்றினாலேயே அவனைப்பற்றி அறியமுடியும் என்ற திண்மை இவை என்று தெரிவிக்கப்பட்டுள்ளன. இத்தகைய எம்பெருமானுடைய அருளின் பெருமையை ஆழ்வார் திருவாய்மொழி முதல் பத்து முதல் பாசுரத்திலேயே காட்டியுள்ளார்.

'உயர்வற வுயர்நலமுடையவன் யவனவன்
மயர்வற மதிநலமருளினன் யவனவன்
அயர்வறு மமரர்களதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே' (1. 1. 1)

என்ற பாசுரத்தில் 'அருளினன்' என்பதனால் தனக்கு எம்பெருமான் ஒரு காரணமுமின்றி இயற்கை இன்னருளாலே அறிவையும் பக்தியையும் அருளினன் என்று காட்டினார். இவ்விடத்தில் நம்பிள்ளை உரை வருமாறு: 'அருளினன் - இத்தலை யாசிக்கையன்றிக்கே முலைக் கடுப்பாலே தரையில் பீச்சுவாரைப் போல அருளிக்கொண்டு நிற்கக்கண்ட வித்தனை; 'தாது: ப்ரஸாதாந் மஹிமாநமீசம்' என்கிறபடியே நிர்ஹேதுகமாக அருளிக்கொண்டு நிற்கக் கண்டவித்தனை' (1.1.1 - 36படி). இவ்விடத்தில் 'அருளினன்' என்று சொல்லாற்றலால் கிடைக்கும் நான்கு விதமான பொருள்களைச் சுட்டி உரைப்பர் அரும்பதவுரைகாரர். 'பக்த

வ்யாவிருத்தியும், ப்ரபந்ந வ்யாவிருத்தியும், அந்யயோக வ்யவச்சேதமும், அயோகவ்யவச்சேதமும்' (ப. 237). அது எவ்வாறு எனில் - பக்த வ்யாவிருத்தியாவது - கர்ம, ஞான, பக்தி யோகங்களாகிய காரணமின்றிக்கே இருக்க, மிகவும் உயர்ந்த மதியாகிய ஞானத்தையும் நலமாகிய பரம பக்தியையும் அருளினன் என்பதனால் பக்தர்களைக் காட்டிலும் வேறுபட்டவராயிற்று ஆழ்வார்; ப்ரபந்ந வ்யாவிருத்தியாவது - 'ரக்ஷோபேக்ஷாம்' என்கிறபடியே ஆழ்வார் ப்ரபந்நர்க்குப் போலே ரக்ஷாபேக்ஷையான ப்ரபத்தி என்ற காரணமின்றிக்கே 'அருளினன்' என்கையாலே ப்ரபந்நர்களைக் காட்டிலும் வேறுபட்டவராயிற்று இவர்; இப்படிப்பட்ட ஆழ்வாருக்கு அவன் நிர்ஹேதுகமாக - ஒரு காரணமுமின்றி இயற்கையாக - பக்தியை அருளினான் என்கையாலே கர்ம, ஞான, பக்தி காரணமாகப் பெற்ற பக்தியையுடைய உபாஸகனுடைய யோகம் (ஸம்பந்தம்) ஆழ்வார்க்கு அருளின பக்தியில் இல்லாமையாலே இந்தப் பக்தியில் அந்யயோக வ்யவச்சேதம் சொல்லப்பட்டது. கர்ம ஞானாதி காரணத்தாலல்லாமல் அழியாத பகவத் க்ருபையினால் மட்டும் ஆழ்வாருக்கு உண்டான பக்திக்கு ஆழ்வாரிடம் அயோகம் (ஸம்பந்தமின்மை) சொல்லப்பட்டது. இந்நாலும் பிள்ளையின் நிர்வாகம் என்பர் அரும்பதவுரைகாரர். யோகம் - ஸம்பந்தம்; அந்யயோகம் - பிறிதோடு ஸம்பந்தம்; அயோகம் - தன்னோடு ஸம்பந்தமில்லாமை; வ்யவச்சேதம் - நிஷேதம் - மறுத்தலென்றபடி.

*சரீராத்ம பாவம் :*

வேதத்தில் பேதச்ருதி என்றும், அபேதச்ருதி என்றும், கடகச்ருதி என்றும் மூன்று உண்டு. இவற்றில் பேதச்ருதியாவது சில வேத வாக்கியங்கள் சித்து, அசித்து, ஈச்வரன் ஆகிய தத்வத்ரயத்தின் உண்மையைத் தனித்தனியாகத் தெரிவிக்கும் வகையில் பேதத்தைக்

காட்டுவதாகும்; அபேதச்ருதியாவது சில வேத வாக்யங்கள் பலவகைப்பட்ட வஸ்துக்கள் இல்லாமையைத் தெரிவிக்கும் வகையில் எம்பெருமானையும் சிதசித்துக்களையும் ஒரே வேற்றுமையில் படித்து அபேதத்தைக் காட்டுவதாகும்; கடகச்ருதியாவது பேதத்தையும் அபேதத்தையும் சிறிதும் விரோதமின்றிக்கே பொருந்திக் காட்டவல்ல வாக்கியங்களாகும்.

*பிருகதாரண்யக உபநிடதத்தில் (5. 7. 7)*

(1) 'यः पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरो
यं पृथिवी न वेद यस्य पृथिवी
शरीरम् यः पृथिवीमन्तरो यमयति
एषत आत्माऽन्तर्थाम्यमृतः ||
य आत्मनि तिष्ठन् आत्मनोऽन्तरः
यमात्मा न वेद यस्यात्मा शरीरम्
य आत्मानमन्तरो यमयति सत
आत्माऽन्तर्थाम्यमृतः ||'

*(1) (ய ப்ருத்வ்யாம் திஷ்டந் ப்ருத்வ்யா அந்தர:*
*யம் ப்ருதிவீ ந வேத யஸ்ய ப்ருதிவீ சரீரம்*
*ய: ப்ருதிவீ மந்தரோ யமயதி,*
*ஏஷத ஆத்ம அந்தர்யாம்யம்ருதே) என்றும்*
*(2) (ய ஆத்மாநி திஷ்டந் ஆத்மநோந்தர:*
*யமாத்மாந வேத யஸ்யாத்மா சரீரம்*
*யஆத்மா நமந்தரா யமயதி ஸத*
*ஆத்மாந்தர்யாம்ருத:||) என்றும்*

ஓதப்பட்டுள்ளது. இவை கடகச்ருதிகளாகும்.

இதன் பொருள் வருமாறு:

(1) எவன் பூமியில் நிற்கிறானோ, பூமியில் உள்ளிருக்கிறானோ, எவனை பூமி அறியாதோ,எவனுக்கு பூமி சரீரமோ, எவன் பூமியை உள் நுழைந்து நியமிக்கிறானோ அவனே உனக்கு ஆத்மாவாயும் மரணம் அற்றவனாயும் இருக்கும் அந்தர்யாமி என்பதாகும்.

(2) எவன் ஆத்மாவில் நிற்கிறானோ, ஆத்மாவில் உள் இருக்கிறானோ, எவனை ஆத்மா அறியாதோ, எவனுக்கு ஆத்மா சரீரமோ, எவன் ஆத்மாவை உள் நுழைந்து நியமிக்கிறானோ அவனே உனக்கு ஆத்மாவாயும் மரணமற்றவனாயும் இருக்கும் அந்தர்யாமி என்பதாகும். மேற்கூறிய உபநிடத வாக்யங்களை உள்ளடக்கியே ஆழ்வாரும்,

'திடவிசும் பெரிவளி நீர்நிலமிவை மிசை
படர்பொருள் முழுவதுமாயவை யவைதொறும்
உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுளிவை யுண்ட சுரனே!' (1. 1. 7)

என்று பாசுரமிடுகிறார்.

இப்பாசுரத்தில், 'எம்பெருமான் சிதசித் வஸ்துக்களைத் தரித்துக் கொண்டு இருப்பவனாய், நியமிப்பவனாய், தன் விருப்பத்தின்படி விநியோகம் கொள்கிறவனாயிருக்கிறான் என்பதை 'நாமவன்' (1. 1. 4), 'நின்றனர்' (1. 1. 6) என்கிற பாசுரங்களிலே சொன்ன சாமாநாதி கரண்யத்தைப் பொருந்த விடுகின்ற கடகச்ருதியின் பொருளான சரீராத்ம பாவம் என்பர் நம்பிள்ளை (1. 1. 7 - 36படி). சாமாநாதிகரண்யமாவது **'भिन्न प्रवृत्ति निमित्तानां शब्दानां एकस्मिन् अर्थे वृत्तिः सामानाधिकरण्यम्'** (பிந்நப்ரப்ருத்தி நிமித்தாநாம் சப்தாநாம் ஏகஸ்மிந் அர்த்தே வ்ருத்தி: சாமாநாதிகரண்யம்) 'மகா பாஷ்யம்' - என்கிறபடியே வெவ்வேறு

தன்மைகளின் மூலம் வெவ்வேறு பொருளைக் குறிக்கும் சில அல்லது பல சொற்களை, அப்பொருள்களுக்குள்ள - பிரிக்கமுடியாத - சம்பந்தம் காரணமாக ஒரே வேற்றுமை உருபு உடையவனாகக் கூறி அப்பொருள்களின் ஒற்றுமையை நயம்பட உரைப்பதாகும்.

சரீராத்மபாவமாவது - 'எந்த இரண்டு பொருள்களுள் ஒன்று பிறிதொன்றை ஆச்ரயித்தே இருக்கிறதோ, மற்றொன்று முன்னதைத் தாங்கி அதன் இருப்பிடமாக இருக்கின்றதோ, இவ்விரண்டினுள் தாங்கப்படுவதான பொருள் தாங்குவதை விட்டு வாழ இயலாதோ அவ்விரண்டு பொருள்களுள் ஆதாரமாகி அதைத் தாங்கிக் கொண்டிருக்கும் சேதனன் ஆத்மா எனப்படுகிறான். அதன் மூலமாக எப்போதும் தரிக்கப்பட்டுள்ள பொருள் சேதனமாயினும் ஜடமாயினும் சரீரம் எனப்படுகிறது. இவ்விரண்டுக்கும் உள்ள தொடர்பே சரீராத்மபாவ ஸம்பந்தம் எனப்படும்' (வேதார்த்த ஸங்கிரஹம் தமிழாக்கம் ப. 238).

மேற்கூறிய பாசுரத்தில் படைத்தலைச் சொல்லி சரீராத்மபாவம் காட்டப்பட்டுள்ளது.

'திடவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை
படர்பொருள்முழுவதுமாய்' என்பதனால் வேறு பூதங்களைக் காட்டிலும் சில காலம் நிற்கையாகிற சிக்கனவையுடைய ஆகாசமும், தீயும், வாயுவும், நீரும், பூமியும். இவற்றை அடிப்படையாகக் கொண்டு மேல் பரந்த பொருள்களைப் படைத்ததைச் சொன்னபடி. சரீராத்மபாவம் சொல்லுகிற இப்பாசுரத்தில் இவ்வாறு படைத்தலைச் சொன்னதற்குக் காரணம், சாந்தோக்கிய உபநிடத ஸத்வித்யை ஸ்ருஷ்டி பிரகரணத்தில் (6. 3),

**'सेयं देवतैक्षत हन्ताहमिमास्तिस्तो देवता अनेन जीवेन आत्मनानुप्रविश्य नामरुपे व्याकरवाणीति तासां त्रिवृतं त्रिवृतमेकैकाम् करवाणि' ||**

(ஸேயம் தேவதை க்ஷத ஹந்தாஹமி மாஸ்திஸ்ரோ தேவதா அநேந ஜீவேந ஆத்மநாநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகாவாணீதி, தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருத மேகைகாம் கரவாணி) என்று ஓதியபடியால். அதாவது 'இந்த ஆத்மாவைச் சரீரமாகக் கொண்டிருக்கிற நான் இந்த நிலம், நீர் என்றிவற்றுள் இந்த ஆத்மா மூலமாகப் புகுந்து இவற்றுக்குப் பெயர்களையும் உருவங்களையும் உண்டு பண்ணுகிறேன்' என்று படைக்கும் போதும் சரீராத்மபாவ ஸம்பந்தம் உள்ளபடியால் என்க. ஐந்து பூதங்களான அசித்தில் ஜீவத்வாரா உட்புகுந்து இருக்கும் தன்மையைக் குறிப்பதாகும்.

'அவையவைதொறும்

பரந்துளன்' என்பதனால் அவ்வோப் பொருள்களிலும், சரீரத்தில் ஆத்மாவைப் போல தரித்துக் கொண்டு இருப்பவனாய் (தாரகனாய்), நியமிப்பவனாய் (நியாமகனாய்), தன் விருப்பப்படி அவற்றை விநியோகம் கொள்பவனாய் (சேஷியாய்), எம்பெருமான் அவ்வோப் பொருள்கள் அறியாவண்ணம் பரந்து இருக்கிறான். மேற்கூறிய பொருள்கள் 'தான்' என்னலாம்படி இருப்பினும், 'மண்ணேகுடம்' என்னும்படி காரணமாக மட்டும் இராமல்,

**'अन्त प्रविष्ठश्शास्ता जनानां सर्वात्मा'**

(அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா) என்கிறபடியே எல்லா ஆத்மாக்களிலும் பரந்து அவ்வாத்மாக்களைக் கட்டளையிடுபவனாய், எல்லா ஆத்மாக்களுக்கும் ஆத்மாவாயிருக்கும். இதனால் மேற்கூறிய கடகச்ருதியின் பொருளான சரீராத்மபாவம் சொல்லப்பட்டதாயிற்று.

உதாரணமாக மரத்திலே தேவதத்தன் நின்றான் என்றால் அங்குச்

சரீராத்மபாவம் இல்லை; சாதி குணங்கள் ஒரு வடிவிலே இருந்தன என்றால் அங்கும் சரீராத்மபாவம் இல்லை; எனவே சரீராத்மபாவமாவது - சிதசித்வஸ்துக்களைத் தானே தரித்துக் கொண்டிருக்கும் தன்மை (தாரகம்), ஓவுகின்ற தன்மை (நியாமகம்), தன் விருப்பப்படி விநியோகம் கொள்ளும் தன்மை (சேஷித்வம்) ஆகியவற்றோடு கூடியிருக்கும் எம்பெருமானாகிற பொருளிலே ஆத்மபாவத்தையும், சிதசித்வஸ்துக்களைத் தான் ஸ்வரூபத்தாலும், ஸங்கல்பத்தாலும் தரிக்கப்படும் தன்மை (தார்யம்), ஆத்மாக்களின் எல்லா கார்யமும் எம்பெருமான் அறிவுக்கு வசப்பட்டிருக்கும் தன்மை (நியாம்யம்), எம்பெருமான் தன் விருப்பப்படி விநியோகம் கொள்வதற்கு தகுதியாயிருக்கும் தன்மை (சேஷத்வம்) ஆகியவற்றோடு கூடிய பொருளாலே சரீரபாவத்தையும் ஒரு சேர நினைப்பதாகும்.

இதனை மேலும் விளக்கும் வகையில் எப்படி இந்த சரீரத்துக்கு இந்த ஜீவாத்மா தரித்துக் கொண்டிருப்பவனாய், நியமிப்பவனாய், தன் விருப்பப்படி விநியோகம் கொள்பவனாய் இருக்கிறானோ, அப்படியே சிதசித்துக்களுக்கும் எம்பெருமான் தரித்தும் நியமித்தும் விநியோகம் கொண்டும் சரீராத்மபாவ ஸம்பந்தத்தால் இருக்கிறான் என்பதை ஸ்வாமி எம்பெருமானார் அருளிய ஸ்ரீபாஷ்ய வாக்யத்தின் வாயிலாக (2. 1. 9) அரும்பத உரைகாரர் காட்டுவது அநுபவிக்கத்தக்கதாகும்.

**'यस्य चेतनस्य यद्द्रव्यं सर्वात्मना स्वार्थे नियन्तुं धारयितुं च शक्यं तच्छेषतैक स्वरुपञ्च, तत्तस्य शरीरम्'**

(யஸ்ய சேதநஸ்ய யத்த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்த்தே நியந்தும் தாரயிதுஞ்ச சக்யம், தத்சேஷதைக ஸ்வரூபஞ்ச, தத்தஸ்ய சரீரம்) என்பதேயாகும்.

இவ்வாக்யத்தில், 'யஸ்ய சேதநஸ்ய யத்த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்த்தே நியந்தும் சக்யம்' என்பதனால் யாதொரு வஸ்துவானது தானுள்ள காலமெல்லாம் அந்தந்த சரீரங்களினாலே சம்பாதிக்கவல்ல கார்யங்கள் யாதோரளவும் நியமிக்கைக்கு சக்தி விஷயமாய் இருக்கிறதோ, அது அந்த சேதனனுக்கு சரீரமாகும்;

அவ்வாறே, 'யஸ்ய....தாரயிதும் சக்யம்' என்பதனால் யாதொரு வஸ்துவானது தானுள்ள காலமெல்லாம் அந்தந்த சரீரங்களினாலே சம்பாதிக்கவல்ல கார்யங்கள் யாதோரளவும் தரிக்கைக்கு சக்தி விஷயமாய் இருக்கிறதோ, அது அந்த சேதனனுக்கு சரீரமாகும்;

இங்ஙனே 'யஸ்ய சேதநஸ்ய யத்த்ரவ்யம் ....... தத்சேஷைதைக ஸ்வரூபஞ்ச, தத்தஸ்ய சரீரம்' என்பதனால் யாதொரு வஸ்துவானது தானுள்ள காலமெல்லாம் அந்தந்த சரீரங்களினாலே சம்பாதிக்கவல்ல கார்யங்கள் யாதோரளவும் அடிமையை ஸ்வரூபமாக (இயல்பாக) உடையதோ, அது அந்த சேதனனுக்கு சரீரமாகும்.

இவ்வாறு இந்த சரீரத்துக்கு இந்த ஜீவாத்மா தாரகனாய், நியாமகனாய், சேஷியாயிருக்குமாபோலே, மேற்கூறிய கடகச்ருதியான 'யஸ்ய ப்ருதிவீ சரீரம்' என்பதனால் அசித்துக்கும் 'யஸ்ய ஆத்மா சரீரம்' என்பதனால் சித்துக்கும் எம்பெருமான் தாரகனாய், நியாமகனாய், சேஷியாயிருக்கும் இருப்பை 'உடல்மிசை உயிரென' என்ற தொடருக்குச் சேர காணலாம்.

இப்படி மூன்று வகையாலும் பரந்து இருப்பினும் 'யமாத்மாநவேத' என்று மேற்கூறியபடியே எம்பெருமான் தான் பரந்துள்ள பொருள்கட்கும் தெரியாமல் உள்ளும் புறமும் பரந்துள்ளதை 'கரந்தெங்கும் பரந்துளன்' என்ற தொடருக்குச் சேர அருளுகிறார்.

மேலும் 'உளனெனில் உளன் அவனுருவம் இவ்வுருவுகள்' (1. 1. 9) என்ற பாசுரத்தில் 'அவனுருவம் இவ்வுருவுகள்' என்பதற்கு 'எம்பெருமான் உளனாமிடத்தில் 'யஸ்ய ஆத்மா சரீரம்' 'யஸ்ய ப்ருதிவீ சரீரம்' என்கிறபடியே இவ்வுலகம் அவனுக்குச் சரீரமாய் இருப்பதனால் உரிமைப்பட்டதாய் உண்டாம்' என்று சரீராத்மபாவத்தால் உரைப்பர் நம்பிள்ளை (1. 1. 9 - 36படி).

இங்ஙனே 'வீடுமின் முற்றவும் வீடுசெய்து. உம்முயிர் வீடுடையானுடை வீடுசெய்ம்மினே' (1. 2. 1) என்ற பாசுரத்தில் 'உம்முயிர் வீடுடையானுடை' என்பதற்கு 'யஸ்ய ஆத்மா சரீரம் யஸ்ய ப்ருதிவீ சரீரம்' என்கிறபடியே உம்முயிரையும் அதினுடைய வீட்டையும் உடையவன் என்று பொருள் வழங்குவர் நம்பிள்ளை (1. 2. 1 - 36படி). அதினுடைய வீட்டையும் என்றது - சரீரத்தையும் என்றபடி.

மேற்கூறிய கடகச்ருதியின் பொருளான சரீராத்மபாவத்தின் அடிப்படையில் கீழ்வரும் பாசுரங்கள் அமைந்தது அறியற்பாலதாகும்.

1. பரஞ்சுடருடம்பாய் அழுக்குப்பதித்த உடம்பாய் கரந்து (6. 3. 7 - 36படி).
2. நீராய்.........சுடர்களிரண்டாய் (6. 9. 1 - 36படி).
3. நன்மைப்புனல் பண்ணி......தன்னுள்ளே (7. 5. 4 - 36படி).

## உயிர்நிலை

**ஜீவாத்மாவின் தனித்தன்மை:**

ஜீவாத்மா அணுவளவானது; ஒளிப்பொருளானது; அறிவே வடிவானது; அறிவு ஆனந்த குணங்களையுடையது; எம்பெருமானுக்கே அடிமையாயிருப்பது; எம்பெருமானுக்குத் தொண்டு செய்வதையே தனக்கு இன்பமாகக் கொள்ளக்கூடியது; நித்யமாயிருக்கையாலே காலத்தால் அளவிட முடியாதது; அறிவுப் பொருளாகையாலே அறிவில் பொருள்களாலும் ஞானத்தை ஆச்ரயமாகவுடைய தர்ம பூத ஞானத்தாலும்

அளவிட முடியாது; இவை இரண்டைக் காட்டிலும் உயர்ந்தது என்பது உட்பொருள். எம்பெருமானை விட்டுத் தனியே பிரிப்பதற்கும், தனியே குறிப்பாகக் காட்டுவதற்கும் முடியாதது என்று பலபடியாக உபநிடதங்கள் சொல்லுகின்றன (ஈடு அவதாரிகை முதல் ச்ரிய: பதி ப. 173 - 174).

இப்படிப்பட்ட ஆத்மாக்கள் தன்னை அடைந்து உய்வு பெற, எம்பெருமான் உடல் உறுப்புக்களைக் கொடுத்து சாஸ்திரங்களைக் காட்டிக் கொடுத்தும் அநாதி காலம் எம்பெருமானைப் பற்றிய விஷய ஞானம் இல்லாமையாலே அஸத்தாக - இருந்தும் இல்லாததாகச் சொல்லப்பட்டது. அந்த ஆத்மா எம்பெருமானைப் பற்றி அறிந்த போது ஸத்தாக - உள்ளானாகச் சொல்லப்பட்டது. இது பற்றியே தைத்திரீயோபநிடத ஆனந்தவல்லி (6),

**'असन्नेव स भवति | असत् ब्रह्मेति वेद चेत् | अस्तिब्रम्हेति चेत् वेद| सन्तमेनं ततो विदुः ||'**

(அஸந்நேவ ஸபவதி| அஸத் ப்ரஹ்மேதி வேதசேத்| அஸ்திப்ரஹ்மேதி சேத்வேத:| ஸந்தமேனம் ததோவிது:) என்று ஓதுகிறது. இங்குள்ள 'ப்ரஹ்ம' என்ற சொல்லால் ஆனந்தமயமான எம்பெருமானைச் சொன்னபடி; அந்த ஆனந்தமயனுடைய 'ஸத்' ஞானத்தால் - அதாவது 'ஆனந்தமயன் இருக்கிறான்' என்ற ஞானத்தால் வீடுபேறும் 'அஸத்' ஞானத்தால் - அவனில்லை என்ற ஞானத்தால் பிறவியும் உண்டாகின்றது என்பர். 'ஆனந்த மயஸத ஸத்வ ஞானாத் மோக்ஷ ஸம்ஸாரௌ பவத இத்யர்த்த:' என்பது உபநிடத உரைகாரர் வாக்கு (தை. உ. ஆ. ப. 33). இத்தகைய ஜீவாத்மாவின் தன்மைகளை உள்ளபடி அறிவாருள் தலைவரான நம்மாழ்வாரும்,

'மாறிமாறிப்பலபிறப்பும் பிறந்தடியையடைந்துள்ளந்தேறி
ஈறிலின்பத்திருவெள்ளம் யான்மூழ்கினன்' (2. 6. 8)

என்று பாசுரமிடுகிறார். அதாவது தான் தேவர், விலங்கு, மனிதர், தாவரம் முதலான பலபல பிறவிகளிலும்,ஒரு கால் பிறந்ததிலே மீண்டும் மீண்டும் பிறந்து வரச் செய்தே எம்பெருமானுடைய திருவடிகளைக் கிட்டி தான் அவனுக்கு அடியவன் என்றும், அவனே உபாயமானவன் என்றும் அறிந்து அவ்வநுபவத்தால் உண்டான முடிவில்லாத ஆனந்தமாகிற பெருவெள்ளத்தில் தான் மூழ்கினதைச் சொன்னபடி (2. 6. 8. - 12படி).

இவ்வாறு எம்பெருமானை அறியாதபோது அஸத்தாயும், அறிந்தபோது ஸத்தாயும் தாம் ஆனதைப் பல பாசுரங்களில் மேற்கூறிய உபநிடதக் கருத்தை உட்கொண்டு உரைத்தது காண்போமாக:

'விடுவேனோ? என் விளக்கை யென்னாவியை
நடுவே வந்துய்யக் கொள்கின்ற நாதனை
தொடுவே செய்திள வாய்ச்சியர் கண்ணினுள்
விடவே செய்து விழிக்கும் பிரானையே' (1. 7. 5)

என்ற பாசுரத்தில் ஆழ்வார் தன் விஷயமான அறிவின்மையைப் போக்கி எம்பெருமான் தன் இயற்கை இன்னருளாலே தன்னுடைய ஸ்வரூபம், வடிவு, குணம், திருவிளையாடல்கள் ஆகியவற்றைப் பிரகாசிப்பித்தான் என்று அருளுகிறார்.

இப் பாசுரத்தில் 'என் ஆவியை' என்பதனால் 'அஸந்நேவ ஸபவதி' என்று மேற்கூறிய உபநிடதத்தின்படியே உருமாய்ந்து போன ஆழ்வாருடைய ஆத்மாவைச் சொன்னபடி;

'நடுவே வந்து' என்பதனால் ஆழ்வாருக்கு வேறு விஷயத்திலிருந்த ஊற்றத்தைப் போக்கி தன் இயற்கை இன்னருளாலே ஆழ்வார் இருந்த இடத்தே தான் வந்தான் எம்பெருமான் என்றபடி; அத்தகைய எம்பெருமான் 'உய்யக் கொள்கின்ற நாதனாய்த் திகழ்ந்தானாம். அதாவது அஸத்தான தன்னை ஸந்தமேநம் ததோவிது:' என்று மேற்கூறியபடியே ஸத்தாக ஆக்கின உபகாரங்களை நினைக்கிறபடி.

மேலும் 'முடிச்சோதியாய்' (3. 1) என்ற பதிகத்தைக் கற்பதனால் மேற்கூறிய உபநிடதத்தின்படியே அஸத்தானவர்களை ஸத்தானவர்களாக ஆக்கி உய்விப்பான் எம்பெருமான் - என்று கீழ்வரும் பாசுரம் மூலம் உணர்த்துகிறார் ஆழ்வார்.

'வியப்பாய வியப்பில்லா மெய்ஞானவேதியனை
சயப்புகழார் பலர்வாழும் தடங்குருகூர்ச் சடகோபன்
துயக்கின்றித் தொழுதுரைத்த வாயிரத்து ளிப்பத்தும்
உயக்கொண்டு பிறப்பறுக்கும் ஒலிமுந்நீர் ஞாலத்தே' (3. 1. 11)

இதில் 'ஒலிமுந்நீர் ஞாலத்தே - உயக்கொண்டு பிறப்பறுக்கும்' என்ற தொடருக்கு 'ஒலியையுடைத்தான முந்நீரையுடைய (கடல்) பூமியிலே 'அஸந்நேவ' என்று அஸத்கல்பமானவர்களை 'ஸந்தமேநம் ததோவிது:' என்று உஜ்ஜீவிப்பித்து விரோதங்களையும் போக்கும் என்று அருளியது காண்க (3. 1. 11 - 36படி).

இங்ஙனே 'பொருளல்லாதவென்னைப் பொருளாக்கி' (5. 7. 3), 'ஒப்பிலாத்தீவினையேனை உய்யக்கொண்டு' (7. 9. 4) 'இவற்றால் உய்யலாந்தொண்டீர் நங்கட்கே' (8. 1. 11) 'அடியேனைப் பொருளாக்கி' (9. 8. 8) ஆகிய இடங்களிலும் மேற்கூறிய உபநிடதக் கருத்து 36படியில் வலியுறுத்தப்பட்டுள்ளது.

**முக்தர்களின் நிலை:**

எந்த மனிதன் தூயமனதையும் அடங்கின இந்திரியங்களையும் உடையவனாய் இருக்கிறானோ, அவன் இவ்வுலகுக்குத் திரும்பி வருதலில்லாத உத்தம ஸ்தானத்தை அடைகிறான் என்று கடோபநிடதம் (1. 3. 9) ஓதுகிறது:

**'विज्ञानसारथिर्यस्तु मनः प्रग्रहवान्नरः |**
**सोऽध्वनः पारमाप्नोति तत् विष्णोः परमं पदम् ||'**

(விக்ஞான ஸாரதிர்யஸ்து மந: ப்ரக்ரஹவாந்தர:|
ஸோத்வந: பாரமாப்நோதி தத் விஷ்ணோ: பரமம் பதம்||) இவ்வாறு உத்தமமான பரமாத்மாவின் இருப்பிடமான பரமபதத்தை தூயமனத்தையும் அடங்கிய இந்திரியங்களையும் உடையவர்கள் ஆகிறார்கள். இது பற்றியே ஆழ்வார், 'கரை கண்டோர்' (8. 3. 10) என்று அவர்களைக் குறிப்பிடுகிறார். இவ்விடத்தில் 'ஸோத்வந: பாரமாப்நோதி' என்கிறபடியே ஸம்ஸார அத்வாவைக் கரை கண்ட முக்தர்' என்பர் வாதிகேசரி சீயர் (8. 3. 10- 12படி).

**முக்தனுக்கு ஸ்வாதந்த்ரியமின்மை:**

முக்தனாவான் ஆசார்யன் மூலமாக இறை அருள் பெற்று, பிறவித்துயர் நீங்கப் பெற்று, பரப்ரம்மத்தை அடைந்து (இது வரையில் பிறவியில் தீவினைகளால் மறைந்திருந்த) தனதேயான எட்டுவகை உண்மைத் தன்மைகள் வெளிப்படப் பெறுபவனாவான். இது பற்றியே சாந்தோக்கிய உபநிடத பரவித்யைக்கு அங்கமான ப்ரஜாபதி வித்யை (8. 12. 2)

**'एष सम्प्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परं |**
**ज्योतिरुपसम्पद्य स्वेन रुपेणाभिनिष्पद्यते ||'**

(ஏஷ ஸம்ப்ரஸாதோஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம்ஜோதி ரூபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபி நிஷ்பத்யதே) என்று ஓதுகிறது.

இதனை அடியொற்றியே ஆழ்வார் எம்பெருமான் தனக்குச் செய்த உபகாரத்துக்கு கைம்மாறு காணாதே அலமருவதைக் கீழ்வரும் பாடல் மூலம் உணர்த்துகிறார்.

'உதவிக்கைம்மாறு என்னுயிரன்ன வுற்றெண்ணில்
அதுவு மற்றாங்கவன் தன்னது என்னால் தன்னை
பதவிய இன்கவி பாடிய வப்பனுக்கு
எதுவு மொன்றுமில்லை செய்வதிங் குமங்கே!' (7. 9. 10)

இப்பாசுரத்தில் ஆழ்வார் எம்பெருமான் கவி பாடின உதவிக்கு ஏதேனும் கைம்மாறு செய்ய எண்ணுகிறார். சாதாரணமாக ஒரு உடலிருக்கும் ஜீவாத்மா இங்கிருக்கும் நாள் வரை அளவுபட்ட அறிவினாலே செய்யலாவது என்றில்லையாகிலும் இறையருளால் முக்தனான பின்பு அறிவின் மலர்ச்சியினால் பரமபதத்துக்குப் போய் கைம்மாறு செய்யலாமெனில் அது ஆத்மாவின் இயல்பான தன்மைக்கு விரோதமாகும். இவ்விடத்தில் நம்பிள்ளை உரை பின்வருமாறு: இங்கேயானால் தேகமே ஆத்மா என்ற அபிமானத்தால் 'நான் என்னது' என்ற அகங்கார மமகாரத்தாலே பொய்க்கால் கட்டித் திரிகையில் செய்ய முடியுமா என்ற பிரமம் ஏற்படும். அதுவுமன்றிக்கே உண்மையான அறிவு பெற்ற போது தானே ஸ்வதந்த்ரமாகச் செய்யலாவதொன்றில்லை என்னுமிடம் சொல்ல வேண்டாவிறே. 'ஸ்வேந ரூபேணோபி நிஷ்பத்யதே' என்று ஸ்வரூப ஞானம் பிறந்தவிடத்தில் ஸ்வரூப விரோதியாக ஸ்வதந்த்ரமாக மூளப்போகாதன்றோ (7. 9. 10 - 36படி). ஆக முக்தனுக்கு ஸ்வாதந்த்ர மில்லாமை சொல்லப்பட்டதாயிற்று. 'இங்கு' என்பதனால் இந்த உலகத்தில், 'அங்கு' என்பதனால் அந்த உலகமான பரமபதம் என்றபடி.

**எம்பெருமானை அறிய இச்சையும் தகுதியும்:**

எம்பெருமான் எல்லாரையும் நியமிப்பவன்; எல்லாப் பிராணிகளுக்கும் அதிபதி சேஷி; பிராணிகளைக் காப்பாற்றுபவன்; இவ்வுலகங்களை எல்லாம் ஒன்றோடொன்று மோதியழியாதபடி நிலையில் நிறுத்துபவன்; இப்படிப்பட்ட எம்பெருமானை வேதாத்யயனம், வேள்வி, தானம், தவம் என்ற தர்மங்களைச் செய்து அந்தணர்கள் அறிய விரும்புகின்றனர். இது பற்றியே பிருகதாரண்யக உபநிடதம் (6. 4. 22)

**'तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेनतपसऽनाशकेन |'** (தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யக்ஞேனதாநேந தபஸா அநாசகேன) என்று ஓதுகிறது. இம் மந்திரத்தில், 'ப்ராஹ்மணா விவிதிஷந்தி' என்பதனால் அந்தணர்கள் உபாஸனம் செய்ய விரும்புவதைச் சொன்னபடி; அதாவது இச்சை; 'யக்ஞேனதாநேந தபஸா அநாசகேன' என்பதனால் அந்த இச்சைக்குக் காரணமான த்குதியைச் சொன்னவாறு.

இத்தகைய இச்சையும் அவ்விச்சைக்குக் காரணமான தகுதியும் தன்னிடம் இல்லாத போது எம்பெருமான் தன்னைப் பாடுவித்துக் கொண்டான் என்பதை ஆழ்வார் கீழ்வரும் பாசுரம் மூலம் உணர்த்துகிறார்:

'ஆர்வனோ ஆழியங்கை எம்பிரான் புகழ்
பார்விண் நீர்முற்றுங் கலந்து பருகிலும்
ஏர்விலா வென்னைத் தன்னாக்கிஎன்னால் தன்னைச்
சீர்பெற இன்கவி சொன்ன திறத்துக்கே' (7. 9. 8)

இப் பாசுரத்தில் 'ஏர்விலாவென்னைத் தன்னாக்கி' என்ற தொடருக்கு மேற்கூறிய உபநிடதத் தொடரைக் காட்டி பொருள் உரைப்பர் நம்பிள்ளை. 'ஏர்விலா' என்பதனால் நன்மை இல்லாமையைச் சொன்னபடி; நன்மையாவது தகுதி. அதாவது யோக்யதை. இதற்கு முன்பு எம்பெருமானைக் கவி பாடுகைக்கு இடமான ஏர்வு இச்சை இல்லை என்று சொன்ன ஆழ்வார், இப் பாசுரத்தில் அவ்விச்சைக்கு அடியான ஏர்வு யோக்யதையுமில்லை என்கிறார். 'ப்ராஹ்மணா விவிதிஷந்தி' என்னா நிற்கச் செய்தேயும், 'யக்ஞேன தாநேந தபஸா அநாசகேன' என்று யோக்யதையைச் சொல்லிற்றிறே; அதுவுமின்றிக்கே இருக்கிற என்னையென்கை என்பது நம்பிள்ளை வாக்கு (7. 9. 8 - 36படி). இவ் வாக்யத்தை விரித்துரைப்பர் அரும்பதவுரைகாரர். அதுவருமாறு:

மேற்கூறிய உபநிடத தொடருக்கு ஸ்ரீபாஷ்ய ச்ருத ப்ரகாசிகையில் இச்சையைப் பயனாகச் சொல்லி, வேள்வி தானம் முதலானவற்றை ஸாதனமாகச் சொன்னால் ஒன்றுக்கொன்று உள்ள தோஷம் (அந்யோந்யாச்ரய தோஷம்) வருமாகையால் அது சேராது என்றார். ஒன்றுக்கொன்று உள்ள தோஷமாவது இச்சையுண்டாகிய வேள்வி, தானம் முதலானவை செய்ய வேணும். வேள்வி முதலானவற்றைப் பண்ணினாலொழிய இச்சை இல்லை. ஆகவே, 'விவிதிஷந்தி' என்று அறிதலைப் பயனாகக் கொண்டு அதுக்குக் கருவி வேள்வி முதலானவை என்று நிர்வகித்தார். அறிதலைப் பயனாகக் கொண்டு அதுக்கு ஸாதனமாக வேள்வியைச் சொல்லுவது எவ்வாறெனில் 'அஸிநாஜிகாம்ஸதி' என்கிறபடியே அஸியான கத்தியானது இச்சை என்ற ஸாதனமன்றிக்கே கொலைக்கு ஸாதனமானாற் போல் இங்கும் வேள்வி முதலானவை அறிவதற்கு ஸாதனமாயிற்று.

## தக்க நெறி

**எம்பெருமானை அடையும் உபாயம்:**

எம்பெருமான் தன் உடைமையான ஆத்மாக்களை அடைந்து தான் இன்புற எண்ணி, அதற்காக அவன் படைத்தல், அவதரித்தல் முதலான பல முயற்சிகளை அநாதி காலமாகச் செய்து கொண்டே இருக்கிறான். ஆத்மாக்களோ அநாதி காலமாக பிறவி தோறும் செய்து வரும் பாபத்தினால் தமக்கும் எம்பெருமானுக்கும் உரிய உறவை உணராமல் இவ்வுலக இன்பங்களைத் தேடி ஓடுகின்றனர். எம்பெருமானும் பல சமய நெறிகளைக் காட்டி உலக மக்களைத் திருத்தி இறுதியில் தன்னை அடைவதே நல்வீடு என உணர வைக்கிறான். அதற்கேற்ப, ஆத்மாக்கள்,

நல்வீடு பெறுவதற்கான வேறு உபாயங்களைக் கைக்கொள்ளாமல் அவனையே அடைவிக்கும் வழியான உபாயமாகவும், அவனையே அடையத் தக்க பொருளான உபேயமாகவும் கொண்டு அவனுக்கேயாக இங்கு வாழ்ந்து விண்ணுலகில் அவனுக்கே கைங்கர்யம் செய்ய எண்ணுகிறார்கள். இத்தகையவர்களே பிரபந்நர்கள் ஆவர். இவர்களுக்கு எம்பெருமானே தன் இயற்கை இன்னருளால் உதவி புரிந்து அவர்கள் தியானம் செய்வதற்கும் இலக்காகிறான். இக் கருத்தையே உபநிடதங்கள் உணர்த்துகின்றன.

**'नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन | यमेवैषवृणुते तेनलभ्यः तस्यैव अत्मा विवृणुते तनूम् स्वाम् '**

*(நாயமாத்மா ப்ரவசனேன லப்யோ ந மேதயா ந பஹுூநாச்ருதேந| யமேவைஷ வ்ருணுதே தேநலப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநும்ஸ்வாம்) என்று முண்டகோபநிடதமும் (1. 2. 23) கடோபநிடதமும் (3. 2. 3) ஓதுகின்றன. அதாவது இந்த பரமாத்மா கேவலம் மனனத்தால் அடையத் தகாதவன்; கேவலம் தியானத்தாலும் அடையக் கூடியவனல்லன்; கேவலம் அளவற்ற கேள்வி ஞானத்தாலும் அடையக் கூடியவனல்லன்; இந்த பரமாத்மா தானே எவனை வரிக்கிறானோ அவனாலேயே அடையத் தகுந்தவன்; அவனுக்கு இந்த பரமாத்மா தன்னுடைய ஸ்வரூபத்தைப் பிரகாசிப்பிக்கிறான் என்றவாறு. ஆக இம் மந்திரமாவது மூன்று விஷயங்களைக் கூறுகிறது.*

*1. பரமாத்மா மனனம், தியானம், கேள்வி ஞானம் ஆகியவற்றால் அடையப்படுகிறவனல்லன்;*

*2. பரமாத்மா எவனை வரிக்கிறானோ அவனே அவனை அடையத் தகுந்தவன்;*

3. அப்படி அடையத் தகுந்தவனுக்கே பரமாத்மா தன் திவ்யமங்கள ஸ்வரூபத்தையும் கல்யாண குணயோகத்தையும் பிரகாசிப்பிக்கிறான்.

இதில் 'நாயமாத்மா ப்ரவசனேன லப்யோ ந மேதயா ந பஹுநா ச்ருதேந' என்ற அடியினால் பரமாத்மாவானவன் கேள்வி அறிவால் தெளிந்து, மனனத்தினால் நிலைநிற்கும்படி நினைத்து, இடைவிடாத தியானத்தினால் உறுதியாக எண்ணுவதாலும் அடைய முடியாதவன் என்று சொல்லப்படுகிறது. இக்கருத்தையை ஆழ்வாரும்,

'தெரிதல் நினைதல் எண்ணலாகாத் திருமாலுக்கு' (6. 9. 11) என்ற தொடரால் 'திருமகள் கேள்வனான எம்பெருமான் கேவலம் கேள்வி அறிவாலும் நினைதலாலும் இடைவிடாத தியானத்தாலும் அளவிட்டு அறியும்படியல்லன்' என்று கூறுகிறார். இதனால் பக்தியில்லாதவன் மேற்கூறிய மூன்று முறையால் எம்பெருமானை அடையத் தகுந்தவன் அல்லன் என்று தேறுகிறது.

எனவே, எம்பெருமானிடத்தில் எந்த பக்தன் அளவற்ற பக்தி கொள்கிறானோ, அந்த பக்தன் எம்பெருமானுடைய அளவற்ற ப்ரீதிக்கு இலக்காகிறான். அவ்வாறு ப்ரீதிக்கு இலக்கான பக்தனையே எம்பெருமானும் வரிக்கிறான். அந்த பக்தனால் எம்பெருமான் அடையத்தகுந்தவனாகிறான். இதனையே 'யமேவைஷ வ்ருணுதே தேநலப்ய:' என்ற அடி காட்டுகிறது.

இந்த வகையில் எம்பெருமான் தன்னை வரிப்பதற்காக ஆழ்வாரும் அவனைக் காண ஆசைப்படுவதை முந்துறமுன்னம்,

'வாணுதல் இம்மடவால் உம்மைக்
காணும் ஆசையுள் நைகின்றாள் விறல்
வாணன் ஆயிரம் தோள்துணித்தீர்! உம்மைக்
காணநீர் இரக்கமிலீரே' (2. 4. 2)

என்று பாசுரமிடுகிறார். அதாவது பராங்குசநாயகியின் இரக்கம் பேற்றுக்கு உபாயமல்ல. 'உம்மைக்காணநீர் இரக்கமிலீரே' என்பதனால் 'அவன் இரக்கம் பேற்றுக்கு ஸாதனம் அல்ல' என்று நம்பிள்ளை உரை (2. 4. 2 - 36படி). மேலும் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவராகையால் எம்பெருமான் இரக்கம் ஒன்றே ஸாதனம் என்று 'யமேவைஷ வ்ருணுதே தேநலப்ய:' என்கிறபடியே எம்பெருமானே காட்ட - வரிக்க காணும்படி ஆழ்வார் இருப்பதாக அநுபவிப்பர்.

மேலும்,

'வந்தாய்போலே வந்தும்என்மனத்தினைநீ
சிந்தாமல் செய்யாய் இதுவே இதுவாகில்
கொந்தார் காயாவின் கொழுமலர்த் திருநிறத்த
எந்தாய்! யானுன்னை யெங்குவந்துஅணுகிற்பனே?' (3. 2. 5)

என்ற பாசுரத்தில் ஆழ்வார் - எம்பெருமானே வந்து தன்னைத் தன் அருளுக்கு இலக்காக்கித் தரிப்பிக்கவில்லையாகில் தான் தன் ஆற்றலாலே அவனை அடையும் உபாயமில்லை என்பதைக் காட்டுகிறார்.

இப்பாசுரத்தில், 'யானுன்னை யெங்கு வந்து அணுகிற்பனே' என்ற தொடருக்கு, 'தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம்ஸ்வாம்' என்கிறபடியே நீயே அநுபவிக்கும் உன்னை என்ன ஸாதநாநுஷ்டத்தைப் பண்ணி எங்கே வந்து கிட்டக் கடவேன்? நான் உன்னைக் கிட்டுகை என்றொரு பொருளுண்டோ? என்று நம்பிள்ளை உரையிட்டது காண்க (3. 2. 5 -36 படி).

எம்பெருமானைக் காணமாட்டாமையால் ஏற்பட்ட ஆழ்வாரின் அலமாப்பு திருத்தாயார் கேட்கும் பாசுரத்தால் வெளியிடப்படுகிறது.

'வட்கிலள் இறையும் மணிவண்ணா! வென்னும்
வானமே நோக்கும் மையாக்கும்
உட்குடை யசுரர் உயிரெல்லாமுண்ட
ஒருவனே என்னும் உள்ளுருகும்' (7. 2. 3)

என்று சொன்ன திருத்தாயார், உடனே 'கட்கிலீ உன்னைக் காணுமாறு அருளாய்' என்று எம்பெருமானிடம் பராங்குச நாயகியின் அலமாப்பைச் சொல்லுகிறாள். இவ்விடத்தில் 'தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநும்ஸ்வாம்' என்கிறபடியே அவன் தானே காட்டுமன்று அவ்வருமையில்லை என்று நம்பிள்ளை உரையிடுவதும் சுவைக்கத்தக்கதாகும் (7. 2. 3 - 36படி).

மேற்கூறிய உபநிடதத் தொடரின்படியே 'மாயக் கூத்தா வாமனா' (8. 5. 1) என்ற பாசுரத்தில் 'ஒரு நாள் காண வாராயே' என்பதனால் அவன் வரக்காண ஆழ்வார் இருப்பதாகவும், தான் கிட்டிக் காண்பது தன் ஸ்வரூபமான அவன் இட்ட வழக்காம் தன்மைக்கு (பாரதந்த்ரியத்துக்கு) விரோதம் என்று இருப்பதாகவும் கூறுவர் (8. 5. 1 - 36படி).

இவ்வாறு ஆற்றாமை மிக்க ஆழ்வாருடைய நெஞ்சில்,

'வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித்
தாமரைக்கண்ணன்என்னெஞ்சினூடே
புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீர்......' (7. 3. 1)

என்கிறபடியே திவ்யமங்கள திருமேனியைப் பிரகாசிப்பித்தான். இவ்விடத்தில் மேற்கூறிய உபநிடதத் தொடரின்படியே பரமாத்மா எவனை வரிக்கிறானோ அவன் அவனாலேயே அடையத் தகுந்தவன் என்பதும் விளங்கும். இது பற்றியே நம்பிள்ளையும் 'தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்' என்கிறபடியே அவ்வடிவேயாயிற்று த்யேயமாக (த்யானிக்கத்தக்கதாகச்) சொல்லிற்று என்பர் (7. 3. 1 - 36படி). இவ்வாறு எம்பெருமானாலே வரிக்கப்பட்ட ஆழ்வார் தம் நெஞ்சில் எம்பெருமான்

தன் ஸ்வரூபத்தை எவ்வாறு காட்டினான் என்பதை ஒரு பாசுரம் மூலம் அறியலாம்.

'மாய மயக்கு மயக்கானென்னை வஞ்சித்து
ஆயன் அமரர்க்கரியேறு எனதம்மான்
தூய சுடர்ச்சோதி தனதென்னுள் வைத்தான்
தேசம் திகழும் தன்திருவருள் செய்தே' (8. 7. 4)

அதாவது ஈற்றிரண்டியால் குற்றங்களைப் போக்கக் கூடியதாய், உலகில் கண்டறியாத ஒளியாய், தமோகுணம் ரஜோ குணங்கள் கலவாமல் சத்வகுணமே உடையதாய், தனக்கே உரிய வடிவை ஆழ்வார் மனதில் வைத்தான் என்றபடி.

இறுதியாக, எம்பெருமான் தன் பேறாக ஆழ்வார் மனதில் கலந்து தன் திவ்யமங்கள திருமேனியைக் காட்டியதற்கு மேற்கூறிய உபநிடதத் தொடரின்படியே கேவலம் அவன் முயற்சியே காரணம் என்பதை, 'என்னையாளும் பிரானார், வெறிதே அருள் செய்வர் செய்வார்கட்கு உகந்து' (8. 7. 8) என்ற அடிகளால் ஆழ்வார் உணர்த்துகிறார். அதாவது, நிர்ஹேதுகமாக க்ருபை பண்ணுவார் ஆருக்கு என்னில் 'யமேவைஷ விவ்ருணுதே' என்று தாம் விஷயீகரிக்க நினைத்தார்க்கு என்று நம்பிள்ளை ஈடு (8. 7. 8. - 36படி).

இவ்வாறு எம்பெருமானே தன் இயற்கை இன்னருளால் ஆழ்வாருக்குத் தன் திவ்ய மங்கள வடிவைப் பிரகாசிப்பித்ததைக் கருத்தில் கொண்டே இராமாநுசர் ஸ்ரீபாஷ்ய முதல் பிரகரணத்தில் (1. 1. 1)

**'प्रियतम एव हि वरणीयो भवति |**
**यस्यामं निरतिशय प्रियः स एवास्य**
**प्रियतमो भवति| यताऽयं प्रियतमः**
**आत्मानं प्राप्नोति तथास्वयमेव**
**भगवान् प्रयतते ||'**

(ப்ரியதம ஏவஹி வரிணீயோ பவதி| யஸ்யாயம் நிரதிசயப்ரிய: ஸ ஏவாஸ்ய ப்ரியதமோ பவதி|| யதாயம் ப்ரியதம: ஆத்மாநம் ப்ராப்நோதி ததாஸ்வயமேவ பகவாந் ப்ரியததே||) என்று அருளுகிறார். அதாவது, 'எவன் (என்னை அடைவதில்) மிகுதியான ஆசையுடையவனோ அவனே வரிக்கத் தகுந்தவனாகிறான்; எந்த பக்தனுக்கு இந்த பரமாத்மா மிகவும் பிரியனோ அவனே அவனுக்கு அதிகப் பிரியனாவான்; அப்படிப்பட்ட அதிகப் பிரியன் எப்படித் தன்னை அடைவானோ, அப்படி அந்தப் பரமாத்மா தானாகவே முயலுகிறான்' என்றபடி. எம்பெருமானாலே வரிக்கப்படும் தன்மை எம்பெருமானிடத்தில் அளவற்ற பக்தியை யுடையவனுக்கே என்பது கருத்து. இக் கருத்தைக் கீதாசார்யனும்,

**'तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् |**
**ददामि बुद्धि योगं तं येन मामुपयान्ति ते ||'**

(தேஷாம் ஸததயுக்தானாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் |
ததாமி புத்தி யோகம் தம் யேந மாமுபயாந்தி தே ||)

என்று பகவத்கீதையில் (10. 2) அருளியது ஒப்புநோக்கத்தக்கது.

**எம்பெருமானை வணங்குவதால் வரும் பேறு**

சாந்தோக்கிய உபநிடத தஹரவித்யை (8. 15. 1)

**'सखल्वेवं वर्तयन् यावदायुषं ब्रह्मलोकंअभि |**
**संपद्यते, न च पुनरावर्तते न च पुनरावर्तते ||'**

(ஸகல்வேவம் வத்த்யந் யாவதாயுஹம் ப்ரஹ்மலோகமபி |

ஸம்பத்யதே, ந ச புநராவர்த்ததே ந ச புநராவர்த்ததே||)

என்ற மந்திரம் எம்பெருமானை வணங்குவதால் வரும் பேற்றைச் சொல்லுகிறது. சாந்தோக்கிய உபநிடதத்தில் ஓதப் பெற்ற வித்யையெல்லாம் பிரமன் பிரஜாபதிக்கும் பிரஜாபதி மனுவுக்கும் மனு உலகமக்களுக்கும் உபதேசிக்க விளங்கி வருபவையாகும். மேற்கூறிய மந்திரத்தின் பொருள் வருமாறு:

'ஆசார்யன் இருப்பிடம் சென்று ஆசார்யனுக்குப் பணிவிடை செய்து, வேதத்தை ஓதி, ஆசார்யனை உபதேசித்து, குடும்பம் சேர்ந்து, தூய இடத்தில் வசித்து, வேதத்தைக் கற்க வேண்டும் என்று தன்னைச் சேர்ந்தவர்களையும் பின்பற்றி, எல்லா வைதீக கர்மங்களையும் செய்து கொண்டு வேறு ஒரு பிராணியையும் துன்புறுத்தாமல் இங்ஙனம் ஆயுள் காலம் வரை நடத்திவருபவன் பிரம்மலோகம் அடைவான் என்றும் திரும்பி இந்தப் பிறவியாகிற ஸம்ஸாரத்தில் புகுந்து தவிப்பதில்லை என்றும் கூறுகிறது'. இக்கருத்தை உட்கொண்டே ஆழ்வாரும்,

'கழிமின் தொண்டீர்கள் கழித்துத்
தொழுமின் அவனைத் தொழுதால்
வழிநின்ற வல்வினைமாள் வித்து
அழிவின்றி ஆக்கம் தருமே' (1. 6. 8)

என்ற பாசுரத்தால், 'பகவத் விஷயத்தில் ஆசையுடையீர்! மற்ற விஷயங்களில் ஆசையை விடுங்கோள்! ஒரு தடவை அவனைத் தொழுதால் ஆதி தெரியாததாய் அநுபவித்துக் கழிக்க அரிதானதாய் அவனை அடையவொட்டாது தடை செய்யும் பாபங்களை இல்லையாக்கி மேற்கூறிய உபநிடதத்தின்படியே மீட்சியில்லாததாய் நித்யமாய் அவனை

அடைவதாகிய எல்லையற்ற செல்வத்தைப் பெறுவீர். இதனை அவன் தருவது உறுதி' என்று உபதேசிக்கிறார் (1. 6. 8. - 36 படி).

மேலும், ஆழ்வார் மானிடரைக் குறித்துக் கவிபாடுவது கூடாது என்பதை,

'ஒழிவொன்றில்லாத பல்லூழி தோறூழி நிலாவப்போம்
வழியைத்தரும் நங்கள் வானவரீசனை நிற்கப்போய்
கழிய மிகநல்ல வான்கவி கொண்டு புலவீர்காள்
இழியக்கருதி ஓர் மானிடம் பாடலென்னாவதே'

என்ற பாடல் மூலம் உணர்த்துகிறார். இப்பாடலில் 'ஒழிவொன்றி ல்லாத பல்லூழி தோறூழி நிலாவப்போம் வழியைத்தரும்' என்பதற்கு நம்பிள்ளை இன்சுவைப் பொருள் வழங்குவர்.அதாவது காலமுள்ள அளவும் இடைவிடாதே இருக்கைக்கு 'ந ச புநராவர்த்ததே' என்கிறபடியே ஆழ்மா உள்ளவரை இந்த பிரக்ருதி சம்பந்தமற்று வழுவிலா அடிமை செய்வதற்குக் காலம் என்ற பொருள் நடையாடாத தேசமான பரமபதத்தில் அநுபவத்தைத் சொல்லா நிற்கச் செய்தேயும் காலம் நடையாடும் இத்தேசத்தில் இருப்பாராகையாலே அத்தை இட்டுச் சொல்லுகிறார் என்றபடி (3. 9. 3 - 36 படி).

மேலும் 'பணங்கொள் அரவணையான் திருநாமம் படிமினோ' (4. 1. 8) என்பதனால் எம்பெருமானின் சம்பந்தத்தால் விரிகிற பணங்களை உடைய திருவனந்தாழ்வானைத் தனக்கு அடையாளமாக உடைய எம்பெருமானின் திருநாமங்கள் சொல்லுங்கோள் என்றும். அதனால் 'மீள்வில்லை' (4. 1. 8) என்கிறார். அதாவது 'ந ச புநராவர்த்ததே' என்கிறபடியே திரும்பிவருதலில்லாத பேற்றைப் பெற அமையும் என்கிறார்.

இவ்வாறு மேற்கூறிய உபநிடதத் தொடரின்படியே திரும்பி வருதலில்லாத பேற்றைப் பெறுவதைக் கீழ்வரும் பாசுர உரையில் வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் அருளுகிறார்:

'வார்த்தை அறிபவர் மாயவற்காளன்றி யாவரோ
போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை
பேர்த்துப் பெருந்துன்பம் வேரற நீக்கித் தன் தாளின்கீழ்ச்
சேர்த்து அவன் செய்யும் சேமத்தை எண்ணித் தெளிவுற்றே' (7. 5. 10)

இப்பாசுரத்தில், 'போர்த்த......சேர்த்து' என்பதனால் எம்பெருமான் தன்னை அடைந்தாரின் பிறப்பு நோய் மூப்பு இறப்பு ஆகிய துக்கங்களைப் போக்கி, கைவல்யாநுபவத்திலும் புகாதவாறு தன்தாளிணைக் கீழ் சேர்த்துக் கொள்கிறான் என்றும் 'அவன் செய்யும் சேமத்தை' என்பதனால் 'ந ச புநராவர்த்ததே' என்கிறபடியே திரும்புதலில்லாதபடி பண்ணிக் காப்பாற்றுகிறான் என்றும் உரையிடுவர் (7. 5. 10 - 12 படி).

மேலும் திருவனந்தபுரத்து எம்பெருமானைக் காண அவ்வூர் சென்று சேர்ந்தால் மேற்கூறிய உபநிடதக் கருத்துப்படியே இவ்வுலகுக்குத் திரும்புதலில்லாத பேறு கிட்டும் என்று கீழ்வரும் பாசுரம் மூலமாக அறிவிக்கிறார் ஆழ்வார்.

'ஊரும் புட்கொடியும் அஃதே உலகெல்லாம் உண்டுமிழ்ந்தான்
சேரும் தண்ணனந்தபுரம் சிக்கெனப் புகுதிராகில்
தீரும் நோய் வினைகளெல்லாந் திண்ணம் நாம் அறியச் சொன்னோம்
பேருமோராயிரத்துள் ஒன்று நீர் பேசுமினே' (10. 2. 3)

அதாவது, நம்மைக் காப்பாற்றுவதற்காகப் பெரிய திருவடியை நடத்தாநிற்கும்; காப்புக்காகக் கட்டிய கொடியும் பெரிய திருவடி, சென்று

காப்பாற்ற முடியாத பிரளயத்தில் உலகையெல்லாம் அமுது செய்து வயிற்றிலே காத்துப் பிரளயம் முடிந்த பிறகு உமிழ்ந்த எம்பெருமான் பிற்பாடர்க்கு முகம் கொடுப்பதற்காகக் குளிர்ந்த திருவனந்தபுரத்தில் பள்ளி கொண்டு இருக்கிறானாம். அத்தகைய திருவனந்தபுரத்தை 'ந ச புநராவர்த்ததே' என்கிறபடியே மீளாத ருசியை உடையீர்களாய்க் கொண்டு அடைந்தால் வினைகளெல்லாம் தீரும். இது திண்ணம் என்றபடி

## தடை அல்லது ஊழ்வினை

**ஜீவாத்மா பாபங்களைப் போக்க வழி:**

தைத்திரீயோபநிடத நாராயணவல்லி ப்ரம்மவித்யை - சத்தியம், தவம், தர்மம், தமம், தானம் முதலான பன்னிரண்டு சாதனங்களைப் புகழ்ந்து சொல்லுகிறது. இதில் உயர்ந்த தர்மத்தைச் சாதனமாகக் கொண்டு ஜீவாத்மா தன் பாபங்களைப் போக்கிக் கொள்வதற்காகக் கீழ் வரும் மந்திரம் கூறுகிறது.

**'धर्मे विश्वस्य जगतः प्रतिष्टा,**
**लोके धर्मिष्टम् प्रजा उपसर्पन्ति**
**धर्मेण पापमपनुतति धर्मेसर्व प्रतिष्ठितम्**
**तस्मात् धर्मे परमं वधन्ति ||'**

(தர்மே விச்வஸ்ய ஜகத: ப்ரதிஷ்டா,
லோகே தர்மிஷ்டம் ப்ரஜா உபஸர்ப்பந்தி,
தர்மேண பாபமபநுததி, தர்மே ஸர்வம்
ப்ரதிஷ்டிதம், தஸ்மாத் தர்மம் பரமம் வதந்தி).

இதன் பொருள் வருமாறு: எல்லா உலகும் தருமத்தில் நிலை பெற்று இருப்பதால் உலகுக்குத் தர்மமானது பெருமை; உலகத்தில் தர்மம் செய்பவனை மக்கள் கிட்டுகிறார்கள்; தர்மத்தால் பாபத்தைப்

போக்குகிறான்;தர்மத்தில் எல்லாம் இருக்கின்றன; ஆகையால் தர்மத்தை உயர்ந்ததாகச் சொல்லுகிறார்கள்.

இம்மந்திரத்தில் 'தர்மேண பாபமபநுததி' என்பதனால் - தர்மத்தால் பாபத்தைப் போக்குகிறான் என்று சொன்னபடி. இவ்வாறு விதித்த கர்மாநுட்டானத்தைச் செய்து தன் பாபத்தைப் போக்கிற்றிலேன் என்று வருந்துகிறார் ஆழ்வார். 'மேவுதுன்பவினைகளை விடுத்துமிலேன் (3. 2. 8) என்ற பாசுரத் தொடரால், ஜீவாத்மாவானது சரீர சம்பந்தத்தால், பிரிக்க முடியாததாய் துக்கத்தை விளைவிக்குமதான பாபங்களோடு கூடியிருக்கிறது. அதாவது 'திலதைலவத் ருதாவஹ்நிவத்' (கத்யம்) என்கிறபடியே எள்ளுள் எண்ணெய் போலவும், மரக்கட்டையில் நெருப்பு போலவும் இவ்வாத்மோவோடு பிரிக்கமுடியாததாய்,துக்கத்தை விளைவிக்கக்கூடியதானவை பாபங்கள் என்றபடி. இவற்றை மேற்கூறிய உபநிடதத் தொடரின்படி, விதித்த கர்மாநுட்டானத்தாலே போக்கவில்லை என ஆழ்வார் வருந்துவதாக உரைப்பர் நம்பிள்ளை (3. 2. 8 - 36 படி). பாபங்களாவன - காம்யமான கர்மங்கள்; விதித்த கர்மாநுட்டமானது - பயனை எதிர்பாராத கர்மாநுட்டானம்.

**எம்பெருமானைப் பற்றுவதால் வினைகள் அறுதல்:**

பிராமணன் பிறக்கும் போது மூன்று வகையான கடன்களோடு பிறக்கிறான் என்று வேதம் ஓதுகின்றது. யஜுர் வேதத்தில் ஆறாவது காண்டத்தில் மூன்றாவது ப்ரச்நத்தில்,

**'जायमानो ह वै त्रिभि कृणवा जायते**
**ब्रह्मचर्येण ऋषिभ्यो यज्ञेन देवेभ्यः**
**प्रजयापितृभ्यः एष वा अनृणः|'**

ஜாயமாநோ ஹ வை ..... த்ரிமிர்க்ருணவா
ஜாயதே ப்ரஹ்மசர்யேண ருஷிப்யோ யஜ்ஜேன
தேவேப்ய: ப்ரஜயா பித்ருப்ய: ஏஷ வா
அந்ருண:) என்று அந்தணன் பிறந்த போதே மூன்று கடன்களோடு பிறப்பதாக ஓதுகிறது. அதாவது ருஷிகளுக்கும், தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும் கடன்பட்டவனாகியே பிறக்கிறான் என்றும், வேதாத்யயனம் முதலியவற்றால் ருஷிகள் கடனையும், யாகத்தால் தேவர்களின் கடனையும் பிள்ளைகளைப் பெற்று பித்ருக்களின் கடனையும் தீர்ப்பது என்றவாறு. நம்மாழ்வார்,

'வேங்கடங்கள் மெய்ம்மேல்வினைமுற்றவும்
தாங்கள்தங்கட்கு நல்லனவே செய்வார்
வேங்கடத்துறைவார்க்கு நமவென்ன
லாம்கடமை அதுசுமந்தார்கட்கே'

என்று பாசுரமிடுகிறார். இதில் கடங்கள் என்பதனால் மேலே காட்டிய யஜுர் வேதத் தொடரின்படியே மூன்று கடன்களைச் சொன்னபடி. 'வேங்கடத்துறைவார்க்கு நம:' என்று சொல்லுவதால் இம்மூன்று கடன்களும் தீர்க்கப்பட்டனவாகவே ஆய்விடும் என்பர்.

மேலும் இப்பாசுரத்தில் 'வேங்கடங்கள் மெய்ம்மேல் வினை முற்றவும்' என்ற தொடருக்கு வேதாந்தத்தில் சொல்லுகிற கட்டளையில் எம்பெருமானார் பொருளாட்சி அமைந்துள்ளதைக் காட்டுகிறார் நம்பிள்ளை (3. 3. 6 - 36 படி). எம்பெருமானார் பொருளாட்சியில் 'கடங்கள்' என்பதனால் பூர்வபாபங்கள் என்றபடி. பாபங்களானவை பூர்வாகங்கள், உத்தராகங்கள் என்றும் இரு வகைப்படும். எம்பெருமானைப் பற்றுவதற்கு முன்பு புத்தி பூர்வகமாகச் செய்யும் பாபங்கள் பூர்வாகங்கள் என்றும் பின்னர் இவ்வுலகில் கர்மத்துக்கு வசப்பட்டு ப்ராமாதிகமாக வரும்

பாபங்கள் உத்தராகங்கள் என்றும் சொல்லப்படுகின்றன. இவ்விரண் பாபங்களும் தீர்க்கப்படுவதை,

**'तदधिगम उत्तरपूर्वाघयोः अश्लेषविनाशौ तत् व्यपदेशात् |'**

*(தததிகமே உத்தர பூர்வாகயோரச்லேஷ விநாசௌ தத்வ்யபதேசாத்) என் ப்ரம்ம சூத்ரம் (4.1.13) காட்டுகிறது. அதாவது எம்பெருமானை உபாஸித் பிறகு இனி வரப் போகும் பாபங்களின் ஒட்டாமையும் முன்பே செய் பாபங்களின் அழிவும் (உபாஸனத்தின் மகிமையால் விளைகின்றன) வே வாக்யங்கள் அப்படி ஓதுகையால் என்றபடி. ஆக எம்பெருமான பொருளாட்சியின்படி 'கடங்கள்' என்பதனால் பூர்வாகங்களையு 'மேல்வினை' என்பதனால் உத்தராகங்களையும் சொன்னபடி. இ இரண்டும் 'முற்றவும் வேம்' என்கையால் பூர்வாகத்துக்கு அழிவையு உத்தராகத்துக்கு ஒட்டற்றமையையும் சொன்னபடி. 'கடங்க மெய்ம்மேல்வினைமுற்றவும் வேம்' என்று கொண்டு கூட்டி உரைத் 'மெய்' என்பதனால் 'இதுசத்தியம்' என்றபடி. இதுசத்தியம் என்று எப்ப அறியலாம் எனில்,*

*'தத்யதா இஷீக தூலம் அக்ரௌ பரோதம் ப்ரதுயேத*
*ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே'*

*என்று சாந்தோக்ய உபநிடதம் (5. 14. 3) ஓதுகிறது. அதாவது ஈர்க் எனப்படும் (துடைப்பத்திலுள்ள) புல்லின் நுனியில் உள்ள பஞ்சு போன் பகுதியை நெருப்பிலிட்டால் அழிவது போல இந்த உபாஸகனுடை எல்லாப் பாபங்களும் அழிகின்றன என்றவாறு.*

*மேலும்,*

**'तद्यथा पुष्करपलाशे आपो न श्लिष्यन्ते**
**एवं एवंविदि पापं कर्म न श्लिष्यते |'**

*(தத்யதா புஷ்கர பலாசே ஆபோ ந ச்லிஷ்யந்தே ஏவம் ஏவம் விதி பாப*

கர்ம ந ச்லிஷ்யதே) என்கிற சாந்தோக்ய உபநிடத வசனத்தின்படியே (4.14. 3) தாமரையிலையிலுள்ள ஜலம் அதில் எப்படி ஒட்டுகிறதில்லையோ அவ்வாறே பரமாத்மாவை உபாஸனம் செய்பவனிடம் பாப கர்மம் ஒட்டாது என்று ஓதியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாறு வேதாந்த கட்டளைப்படி அமைந்த கருத்துக்கள் ஆழ்வார் பாசுரங்கள் மூலம் தெளிவாக்கப் பெறலாயிற்று.

'நாளும்நின்றடுநம்பழமை அங்கொடுவினையுடனே
மாளும் ஓர்குறைவில்லை மனனகமலமறக்கழுவி
நாளும்நம்திருவுடையடிகள்தம் நலங்கழல்வணங்கி
மாளும்ஓரிடத்திலும் வணக்கொடுமாள்வதுவலமே'

என்ற பாசுரத்தின் முதலடியினால் நாடோறும் விடாதே நின்று பரிதபிப்பதாய் நாம் புத்தி பூர்வகமாக நமக்குத் தேடின பழமையானதும் மிகவும் கொடியதுமான செய்யத்தகாத பாபங்கள் எல்லாம் மேற்கூறிய உபநிடதத்தின்படியே எம்பெருமானை அடைகிற காலத்திலே அழியும் என்கிறார் (1. 3. 8 - 36 படி).

மற்றும்,

'ஆற்றநல்லவகைகாட்டும் அம்மானை அமரர்தம்
ஏற்றை எல்லாப்பொருளும்விரித்தானைஎம்மான்தன்னை
மாற்றமாலைபுனைந்தேத்தி நாளும்மகிழ்வெய்தினேன்
காற்றின்முன்னம்கடுகி வினைநோய்கள்கரியவே'

என்ற பாசுரத்தில் 'மாற்றமாலைபுனைந்தேத்தி நாளும்மகிழ்வெய்தினேன்' என்பதனால் சொற் சேர்த்தி கொண்டு எம்பெருமானை ஸ்தோத்திரம் செய்து எல்லா காலமும் மகிழ்ச்சி பெற்றேன் என்று சொல்லி, அதனால் 'காற்றின்முன்னம்கடுகி வினைநோய்கள்கரியவே' என்கிறபடியே வினைகளும் வினைப் பயனான பிறவிகளும் காற்றைக் காட்டிலும்

விரைவாக அழிந்து போயின என்று கருதுவது காண்க.

இப்படி எம்பெருமானைத் துதி செய்வதால் நம்முடைய பாபங்கள் அகலும் என்பதை மேலும் ஒரு பாசுரத்தில் காணலாம்:

'ஒன்றுநில்லா கெடும் முற்றவும் தீவினை உள்ளித்தொழுமின் தொண்டீர்
அன்றங்கமர்வென்று உருப்பிணிநங்கை அணிநெடுந்தோள் புணர்ந்தான்
என்றுமெப்போது மென்நெஞ்சம் துதிப்ப உள்ளேயிருக்கின்ற பிரான்
நின்றஅணிதிருவாறன்விளையென்னும் நீள்நகரமதுவே' (7. 10. 6)

இப்பாசுரத்தின் முதலடியினால் திருவாறன்விளை எம்பெருமானைத் தொழுதால் நம் பாவங்கள் போம் என்று அருளுகிறார் ஆழ்வார். இவ்விடத்தில் நம்பிள்ளை உரை இன்சுவையே வடிவெடுத்ததாயிருக்கும். அது வருமாறு:

'ஸர்வ சக்தியானவன் போக்குமன்று வாசனையோடே போமிறே, மேருவையும் அதன் மேலே மந்தரத்தையும் வைத்தாற் போலே இருக்கிற கனத்தபாபங்கள்; சரதமாக மருந்தைக் கிட்டின துர்வியாதி நசிக்குமாபோலே. மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணனைக் கிட்டின பாபங்களானவை ரசிக்கும். 'ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே' என்னா நின்றதிறே' (7. 10. 6 - 36 படி).

மேலும்,

'நெடுமாற்கடிமை செய்வேன்போல் அவனைக் கருதவஞ்சித்து
தடுமாற்றற்ற தீக்கதிகள் முற்றும் தவிர்ந்த சதி நிறைந்தால்
கொடுமாவினையேன் அவனடியாரடியே கூடும் இதுவல்லால்
விடுமாறென்பதென்? அந்தோ! வியன்மூவுலகுபெறினுமே '

(8. 10. 1)

என்ற பாசுரத்தில் 'முற்றும் தவிர்ந்த' என்பதனால் 'நாம் போக்கிக் கொள்ளும்படியாகில் கிரமமாகப் போகவேண்டியது. 'ஸர்வேபாப் மாந: ப்ரதூயந்தே' என்றன்றோ அவன் போக்கும் போது இருப்பது' என்று உரைப்பர் நம்பிள்ளை (8. 10. 1 - 36 படி). 'துக்கத்துக்குக் காரணமான அவித்யா, கர்மரூபமாயுள்ள பொல்லாவழிகள் எல்லாம் நான் அறியாதபடி வஞ்சித்து 'கானோ வொருங்கிற்றுங்கண்டிலமால்' என்கிறபடியே விட்டுப்போயிற்றின' என்று உரை (8. 10. 1 - 12 படி). அவ்வாறே

'அறுக்கும் வினையாயின ஆகத்துஅவனை
நிறுத்தும் மனத்து ஒன்றிய சிந்தையினார்க்கு
வெறித்தண்மலர்ச் சோலைகள் சூழ் திருநாவாய்
குறுக்கும் வகை உண்டு கொலோ? கொடியேற்கே'

என்ற பாசுரத்தில் 'அறுக்கும் வினையாயின' என்பதனால் வினையென்று பேர் பெற்றவையெல்லாம் போக்கும் என்றபடி. அதாவது ருசி விரோதி, உபாய விரோதி, ப்ராப்தி விரோதி. இந்த உடல் கொண்டு செய்யும் பாபமன்றிக்கே பழையதாய் வருமவை எல்லாம் ஒரு காலே போக்கும். ருசி விரோதியாவது எம்பெருமானைப் பற்றிய விஷயத்தில் ஆசை பிறக்கவொட்டாத படி வருகிற விரோதி. அதாவது வேறு பயனில் முயற்சி; உபாய விரோதியாவது தனக்குப் பயன் எம்பெருமானே என்னும் ருசி பிறந்தாலும் அவனே உபாயம் என்று நம்பிக்கை வர வொட்டாதபடி தடுக்கிற விரோதி. அதாவது வேறு உபாயத்தில் விருப்பம். ப்ராப்தி விரோதியாவது - அவனே உபாயம் என்ற நம்பிக்கை பிறந்தாலும் அவன் திருவடிகளை அடையும் போது அவித்யை, கர்மம், வாசனை ருசிகள், பாகவத அபசாரம் என்று வரும் விரோதிகள்.(9. 8. 1. அரும்பதவுரை). இப்படிப்பட்ட வினைகளெல்லாம் க்ரமத்திலே போக்க வேண்டாது அவன் போக்கும் போது 'ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே' என்று

மேற்கூறியபடியே ஆகக்கடவதிறே என்பர் பெரியவாச்சான் பிள்ளை. (9. 8. 1 - 24 படி).

மேலும் தைத்திரீயோபநிடத ஆனந்தவல்லி (6)

**'अथ सोऽभयं गतो भवति '**

(அத ஸோபயம் கதோ பவதி)

என்று ஓதுகிறது. அதாவது எவனொருவன் ஸம்ஸார பயமில்லாமைக்காக பரமாத்மாவை த்யானம் செய்து அடைகிறானோ அப்போது அவன் ஸம்ஸாரபயமற்றவனாக ஆகிறான் என்றபடி. நம்மாழ்வாரும்,

'மற்றிலம் அரண்' (10. 1. 7) என்ற பாசுரத்தில் 'சுற்றி நாம் வலம் செய்ய நம் துயர் கெடும் கடிதே' என்று திருமோகூர் எம்பெருமானை ப்ரதக்ஷிணம் முதலானவை செய்தால் 'வழித் துணையில்லை' என்று நாம் படுகிற துக்கமெல்லாம் சடக்கெனபோம் என்று கூறுகிறார். இவ்விடத்தில் நம்பிள்ளை 'அதஸோபயம் கதோ பவதி' என்கைக் கடவதிறே, ஆன பின்பு மற்றிலம் அரண் என்று இவ்வுபநிடதத் தொடரைக் காட்டி அரும்பதகாரர் உரையிடுவது காணலாம். (10. 1. 7 - 36 படி).

இவ்விடத்தில் அரும்பதவுரை பின் வருமாறு:

அவனை அடைந்தால் துக்கம் போமோவென்ன அத ஸோபயம்கத: இத்யாதி யாதொரு போது ப்ரஹ்ம த்யானத்தை அடைகிறான் அநந்தரம் அபயங்கதனாவன் என்று.

# வாழ்வு

*ஜீவாத்மாவின் தேச விசேஷ (பரமபத) அநுபவம்:*

பிரம்மத்தைத் தியானம் செய்பவன் உயர்ந்த பிரம்மத்தை அடைகிறான். பிரம்மமானது எப்போதும் ஒரே வடிவாக உள்ளது. எப்போதும் சுருங்குதலில்லாத அறிவையே வடிவமாக உடையது;முடிவில்லாதது; அந்தப் பிரம்மமான விஷ்ணுவை இதயகுகையில் வைக்கப்பட்டவனாக எவன் கூறுகிறானோ அவன் பரமபதத்தில் எல்லாம் உணர்ந்த பிரம்மத்தோடுகூட அந்தப் பிரம்மத்தின் எல்லாக் கல்யாண குணங்களையும் அநுபவிக்கிறான் என்று தைத்திரீயோபநிடதம் (1. 2. 1) ஆனந்தவல்லி கீழ்வரும் மந்திரம் மூலமாகத் தெரிவிக்கின்றது:

**'ब्रह्मविदाप्नोति परम् | तदेषभ्युक्ता |**
**सत्यंज्ञानमनन्तं ब्रह्म| यो वेद निहितं**
**गुहायं परमे व्योमन् | सोऽश्नुते सर्वान्**
**कामान् सह | ब्रह्मणा विपश्चितेति |'**

*(ப்ரஹ்ம விதாப்நோதி பரம் ததேஷாப்யுக்தா |*
*ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம | யோ வேத*
*நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந் | யோ*
*அச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ | ப்ரஹ்மணோ*
*விபச்சிதேதி|).*

இவ்வாறு பரமபதத்தில் போய் ஜீவாத்மா பெறும் அநுபவத்தை ஆழ்வார் கீழ் வரும் பாசுரத்தின் மூலமாகத் தன் துக்கங்களெல்லாம் போம்படி எம்பெருமானை இங்கேயே அநுபவித்தாகக் கூறுகிறார்.

'கடிவார் தண்ணந்துழாய்க்கண்ணன் விண்ணவர் பெருமான்
படிவானமிறந்த பரமன் பவித்திரன்சீர்
செடியார் நோய்கள் கெடப்படிந்து குடைந்தாடி
அடியேன் வாய்மடுத்துப் பருகிக் களித்தேனே' (2. 3. 9)

இப்பாசுர அவதாரிகையில் 'ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதேதி' என்று மேற்கூறியபடியே ஆழ்வார் தன்னுடைய எல்லா துக்கங்களும் போம்படி எம்பெருமானை அநுபவிக்கப்பெற்று மகிழ்ச்சியடைந்ததாகக் கூறுவர் நம்பிள்ளை (2. 3. 9 - 36 படி).

ஆழ்வாருக்குத் துக்கமாவது 'செடியார் நோய்கள்'. அதாவது ஒன்றோடொன்று மிடைந்து தூறு மண்டினாற் போலேயிருக்கிற விஷயருசி தொடக்கமான பெரிய நோய்கள் என்றபடி. மேற்கூறிய உபநிடதத் தொடரில் 'ஸர்வாந் காமாந்' என்பதனால் எல்லாக் கல்யாண குணங்களைச் சொன்னபடி. இதனைச் 'சீர்' என்ற சொல்லால் ஆழ்வார் காட்டியது அறியற்பாலதாகும். கல்யாண குணங்களாவன: மேன்மைத் தன்மை, எளிமைத் தன்மை, இனிமை, தூய்மை என்ற நான்கு. இப்பாசுரத்தில் 'விண்ணவர் பெருமான் படிவானமிறந்த பரமன்' என்பதனால் நித்யசூரிகளுக்குப் பெருமானாய் வானத்திலுள்ளார்க்கு ஒப்பாகாதபடியிருக்கிற பரமன் என்று மேன்மைத்தன்மையைச் சொன்னபடி. 'கடிவார் தண்ணந்துழாய்' என்பதனால் அந்த மேன்மைத் தன்மைக்கு அடையாளமான பரிமளம் நிறைந்த திருத்துழாய்மாலையின் இனிமையைச் சொன்னபடி.

'கண்ணன்' என்பதனால் அடியார்க்கு பவ்யனான எளிவந்த தன்மையைச் சொன்னபடி. 'பவித்திரன்' என்பதனால் மேற்கூறிய

பெருமைகளை அறியாதார் அறிவுக்கேட்டையும் போக்கி அநுபவிக்கும் தூய்மையுடையவன் என்று சொன்னபடி. ஆக இப்படிப்பட்ட கல்யாண குணங்களையுடையவனை மேற்கூறிய உபநிடதத் தொடரில் கூறியபடியே வாய்மடுத்துப் பருகிக்களித்தேனே என்கிறார் ஆழ்வார். அதாவது மேற்கூறிய கல்யாண குணங்களை அநுபவிக்கைக்கு உபகரணமான அதிக ஆசையாகிற வாயை மடுத்துப் பெருவிடாயன் தண்ணீர் குடிக்குமாபோலே நிரம்ப அநுபவித்து எல்லையற்ற ஆனந்தத்தை இங்கேயே பெற்றதாகக் கூறுகிறார் ஆழ்வார்.

இவ்வாறு உபநிடதத்தில் 'ஸர்வாந் காமாந்' என்பதற்குப் பொதுவாகக் கல்யாண குணங்கள் என்று காட்டியதை விரிவாக ஆழ்வார் எம்பெருமானின் நான்கு கல்யாண குணங்களை இப்பாசுரத்தில் காட்டியது அறியற்பாலதாகும். மேலும்,

'சன்மம் பலபல செய்து வெளிப்பட்டுச் சங்கொடு சக்கரம் வில்
ஒண்மையுடைய உலக்கையொள் வாள்தண்டு கொண்டு
புள்ளூர்ந்து உலகில்
வன்மையுடைய அரக்கர் அசுரரை மாளப் படைபொருத
நன்மையுடையவன் சீர் பரவப்பெற்ற நானோர் குறைவிலனே.'

என்ற (3. 10. 1) பாசுரத்தினால் 'ஸோச்நுதே ஸர்வாந் காமாந்' என்று ஒரு தேச விசேஷத்தில் அனுபவிக்கக்கடவ குறை அநுபவத்தை இங்கே அனுபவிக்கப் பெற்ற எனக்குப் பரமபதத்தில் போகப் பெற்றிலன் என்கிற குறையுண்டோ என்று மேற்கூறிய உபநிடதத் தொடரைக் காட்டி விளக்குகிறார். இவ்விடத்தில் 'சீர்' என்ற சொல்லுக்குக் சில கல்யாண குணங்களைக் காட்டி உரைப்பர் பெரியவாச்சான் பிள்ளை. அதாவது 'வீரகுணம்' அதுக்கு அடியான ஆச்ரித வாத்ஸல்யம். அதுக்கு அடியான ஸ்வாமித்வம், இவை முதலான கல்யாண குணங்கள் என்பர்.

இப்பாசுரத்தில் 'சங்கொடு சக்கரம் வில் ஒண்மையுடைய உலக்கையொள் வாள் தண்டு' கொண்டு என்பதனால் வீரகுணமும், 'புள்ளூர்ந்து' என்பதனால் அடியார்க்கு காட்சி கொடுத்ததற்காக கருடாரூடனாய் வந்த ஆச்ரித வாத்ஸல்யம் குணமும், அதுக்கு அடியான தலைவனாம் தன்மையை 'சன்மம் பலபல செய்து வெளிப்பட்டு' என்பதனாலும் சொன்னபடி (3. 10. 1 - 24 படி).

மேலும் 'ஆமின் சுவையவை' (4. 1. 7) என்ற பாசுரத்தில் 'கோமின் துழாய்முடி ஆதியஞ்சோதி குணங்களே' என்ற தொடருக்கு திருத் துழாயாலே அலங்கரிக்கப்பட்ட திரு முடியை உடையவனாகையாலே எல்லையற்ற இனியனாய் எல்லாவற்றுக்கும் காரணமானவனாய் அழகிய தாய் தேஜோமயமான திவ்ய விக்ரகத்தையுடையனான ஸர்வேச்வரனுடைய குணங்களை 'ஸர்வாந் காமாந் ஸ: அஸ்நுதே' என்கிறபடியே சேர்த்து புஜியுங்கோள் என்று வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் உரை அமைத்தது காணலாம் (4. 1. 7 -12 படி).

சாந்தோக்ய உபநிடத காயத்ரீ ப்ரஹ்ம வித்யையில் 24 எழுத்துக்கள் கொண்ட காயத்ரீ போல உள்ளதாக ப்ரம்மத்தை நினைத்து உபாஸித்தால் வீடு பேறு கிடைக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அந்த வீடு பேற்றுக்கு இடமான பரமபதமானது,

'விச்வத: ப்ருஷ்ட்டேஷு ஸர்வத: ப்ருஷ்ட்டேஷு

அநுத்தமேஷு உத்தமேஷு லோகேஷு' (3 . 13)

என்கிறபடியே தனித்தனியாகப் படைத்த பொருள்களுக்கு (வ்யஷ்டி ஸ்ருஷ்டி). மேலும் சமூகமாய்ப் படைத்த பொருள்களுக்கு மேலும் (ஸமஷ்டி ஸ்ருஷ்டி) சிறப்பானதாய் எல்லா வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத தாயிருக்கும். மேலும் தைத்திரீயோபநிடத நாராயணாநுவாகம்

'அம்பஸ்ய பாரே புவனஸ்ய மத்யே நாகஸ்யப்ருஷ்டே ...... '(1) என்கிறபடியே எம்பெருமான் கரையில்லாத கடலிலும், சூர்ய மண்டலத்திலும், பரமபதத்திலும் எழுந்தருளி இருக்கிறான் என்று ஓதியுள்ளது. இதில் 'நாக:' என்பதனால் துக்கஸம்பந்தம் இல்லாததாய் அசாதாரண தேச விசேஷமான பரமபதத்தைச் சொன்னபடி. மேற்கூறிய பரமபதத்தை ஆள்வர் என்பதை நம்மாழ்வார் கீழ்வரும் பாசுரம் மூலம் உணர்த்துகிறார்.

'கண்டலங்கள் செய்ய கருமேனியம்மானே
வண்டலம்பும் சோலை வழுதிவளநாடன்
பண்டலையிற் சொன்ன தமிழாயிரத்திப்பத்தும் வல்லார்
விண்தலையில் வீற்றிருந்தாள்வர் எம்மாவீடே' (2. 8. 11)

இப்பாசுரத்தில் 'இப்பத்தும்' என்பதனால் ஆழ்வார் தாம் பெற்ற பேற்றை எல்லோரும் பெறும்படி பண்ண ஸம்ஸாரிகளுக்கு 'எம்பெருமானே வீடுபேறு தருபவன்' என்று 'அரவணை' முதலாக இப்பாசுரங்களைச் சொன்னவாறு. இதனைக் கற்க வல்லார்கள் 'நாகஸ்யப்ருஷ்டே' என்று மேற்கூறியபடியே பரமபதத்தில் தங்கள் வேறுபாடு தோற்ற இருந்து எல்லாவகையாலும் சிறந்த மோக்ஷத்தைத்தங்களுக்கு இட்ட வழக்காக செய்வர் என்றவாறு. அப்பரமபதத்தில் அடங்கிய பொருள்களையும் தன்மையையும் அழகாக எடுத்து உரைப்பர் நம்பிள்ளை.

பரமபதமானது பிராட்டி, திருவடி, திருவனந்தாழ்வான் தொடக்கமானாரை பரிகரமாகவுடைய எம்பெருமானை விஷயமாக உடையது; எத்தனையேனும் அறிவுடையரான பிரமன் முதலானோர்க்கும்

தங்கள் முயற்சியானால் அடைய அரிதானது; எம்பெருமானாலே பெறப் பார்ப்பார்க்கு வருத்தமறப் பெறலாவது; பிறவியில் போகம் (அநுபவம்) போல நிலையற்றதாயிருக்கையன்றிக்கே நித்யமானது; சுருங்கி யிருக்கையன்றிக்கே மிகவும் விரிவானது; துக்கம் கலசியிருக்கையன்றிக்கே சுகம் ஒன்றையே கொடுப்பது; மங்களமானது; உத்தமமானது; அளவிடற்கரியது. இப்படிப்பட்ட பரமபதத்தை எம்பெருமான் முக்தர்களுக்குக் கொடுக்கிறான் என்றபடி (2. 8. 11. 36 படி).

இப்படி மேற்கூறிய பரமபதத்தில் அடங்கிய வஸ்துக்களை ஆழ்வார் அருளிய இப்பத்துப் பாசுரத்தில் பொருந்திக் காட்டுவர் அரும்பதவுரைகாரர்.

அதாவது 'அணைவது அரவணை மேல் பூம்பாவையாகம் புணர்வது' (2. 8. 1) என்ற தொடரால் எம்பெருமான், பிராட்டி, திருவனந்தாழ்வான்களைப் பரிகரமாகக் கொண்டதைச் சொன்னபடி; யானை இடர்கடிந்த' (2. 8. 2) என்பதனால் திருவடியை வாகனமாகக் கொண்டு சென்றது என்றபடி; 'கிடந்திருந்து நின்றளந்து' (2. 8. 7) என்பதனால் 'எத்தனையேனும் அறிவுடையார்க்கும் அறிய முடியாமையைச் சொன்னவாறு'; 'யானை இடர்கடிந்த' (2. 8. 2) புணைவன்' (2. 8. 1) ஆகியவற்றால் அவனாலே பேறு என்று சொன்னபடி, துயரில்லா வீடு' (2. 8. 2), 'நலமந்தமில்லதோர் வீடு' (2. 8. 4) என்பனவற்றால் நித்யமான பரமபதத்தைச் சொன்னபடி; 'நாடு புகுவீர்' (2. 8. 4) என்பதனால் உபதேசம் செய்தபடி; 'ஆள்வீர் எம்மாவீடே' (2. 8. 11) என்பதனால் அவன் பரமபதம் கொடுப்பானாகப் பாரித்தபடியைச் சொன்னபடி.

இப்படிப்பட்ட பரமபதத்தில் முக்தன் கர்மத்துக்கு வசப் படாதவனாய் பிரிதொன்றுக்கில்லாத தன் சிறப்பு தோற்ற

எழுந்தருளியிருக்கிறான் என்பதை 'ஸஸ்வராட் பவதி' (3. 25) என்று சாந்தோக்ய உபநிடதம் ஓதியது. இது பற்றியே இப் பாசுரத்தில் 'வீற்றிருந்து' என்ற சொல்லுக்கு 'ஸஸ்வராட் பவதி' என்கிறபடியே 'வேறுபாடு தோற்ற இருந்து' என்று வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் பொருள் உரைத்தது காணலாம் (2. 8. 11 - 12 படி).

எம்பெருமான் தன்னை உபாஸித்தவனுக்கு எல்லா நன்மைகளை – சுகங்களைத் தருபவன் என்பதை 'ஏஷ ஹி ஸர்வாணி வாமாநி நயதி' என்று சாந்தோக்ய உபநிடத உபகோஸல வித்யை ஓதுகிறது. எம்பெருமானுக்கு வாமனீத்வமாவது தன்னை அடைந்தவர்களுக்கு சுகத்தைக் கொடுக்கும் தன்மையாகும். 'வாமனீத்வம் ஸ்வாச்ரிதேஷு சோபந ப்ராபகத்வம்' என்பது உபநிடத உரைகாரர் வாக்கு (சா. உ.ப. 192). இவ்வாறு எம்பெருமான் நன்மைகளைத் தருபவன் என்பதை நம்பிள்ளை 'வாமனன் என் மரகத வண்ணன்'(2. 7. 8) என்ற பாசுரத்தில் 'வாமனன்' என்ற சொல்லால் குறிப்பிடுவதை மாமுனிகள் பிரமாணத்திரட்டில் மேற்கூறிய உபநிடதத் தொடரைக் காட்டி உரைப்பர். மேலும் விஷ்ணு ஸஹஸ்ரநாத்தில் வரும் 'வாமந' என்ற சொல்லுக்கும் பட்டர் 'த்ரஷ்ட்ரூந் ஸ்வகாந்த்யா வாமாநி -சுகாநி நயதி இதி வாமந:' என்று வாம சப்தத்திற்கு நன்மைளை- சுகங்களை என்று பொருள் கூறியது அறியற்பாலதாகும்.

எம்பெருமானை உபாஸிப்பவர்களை பரமபதத்திலுள்ள மதிமுக மடந்தையர்கள் பிரம்மாலங்காரம் செய்கின்றனர் என்று கௌஷீதகி உபநிடதம் ஓதுகிறது (1. 3. 4)

'तं पञ्च शतान्यप्सरसं प्रतिधावन्ति शतं मालाहस्ताः
शतमञ्चनहस्ताः, शतं चूर्णहस्ताः, शतं वासोहस्ताः
शतंफणहस्ताः तं ब्रह्मालङ्कारेणालंकुर्वन्ति ।'

(தம் பஞ்ச சதாந்யப்ஸரஸாம் ப்ரதிதாவந்தி;,
சதம் மாலாஹஸ்தா:, சத மஞ்ஜந ஹஸ்தா:,
சதம் சூர்ணஹஸ்தா:, சதம் வாஸோஹஸ்தா:,
சதம் பணஹஸ்தா:, தம் ப்ரஹ்மாலங்காரேண
அலங்குர்வந்தி).

அதாவது ஐந்நூறு திவ்ய அப்ஸரஸ்ஸுக்கள் எதிர் கொள்ள ஓடி வருகின்றனர். கையில் மாலையைக் கொண்டு வருபவர் நூறு. மை கொண்டு வருபவர் நூறு, கந்தப் பொடி, பட்டு வஸ்திரம், ஆபரணம் இவற்றில் ஓவ்வொரு வகைக்கு ஓவ்வொரு நூறு பேர் வந்து பிரம்மாலங்காரத்தாலே அலங்காரம் செய்கின்றனர் என்றபடி சாந்தோக்ய உபநிடத பர்யங்க வித்யையிலும் (4. 15. 5). இங்கிருந்து சென்ற முக்தனை அங்குள்ள மடந்தையர்கள் பிரம்மலங்காரம் செய்யதர்கக் கூறப்பட்டுள்ளது.

அவ்வாறே நம்மாழ்வாரும் திருவனந்தபுரத்து எம்பெருமான் விஷயமாக அருளிய 'கெடுமிடர்' (10. 2) என்ற திருவாய்மொழியைக் கற்றவர்கள் பரமபதத்தில் மதிமுக மடந்தையர்களால் நன்கு ஆராதிக்கப்படுவர் என்பதை கீழ் வரும் பாசுரம் மூலம் அருளுகிறார்

'அந்தமில் புகழ் அனந்தபுரநகராதிதன்னை
கொந்தலற் பொழிற் குருகூர் மாறன் சொல்லாயிரத்துள்
ஐந்தினோடைந்தும் வல்லார் அணைவர் போய்
அமருலகில்
பைந்தொடி மடந்தையர் தம் வேய் மரு தோளிணையே'
(10. 2. 11).

இப்பாசுரத்தின் ஈற்றிரண்டுஅடியால், பரமபதத்தில் 'சதம் மாலா ஹஸ்தா:' என்று மேற்கூறிய உபநிடதம் சொல்லியபடியே அங்குள்ள அப்ஸரஸ்ஸுக்களுடைய ஆதரத்துக்கு இலக்காவார்கள் என்று சொல்லப்படுகிறது (10. 2. 11 36 - படி).

**எம்பெருமானை பாடுவதாகிய பேறு**

பிறவித் துயர் நீங்கி முக்தரான ஜீவாத்மாக்கள் பரமபதம் சென்று எம்பெருமானுடைய கல்யாண குணங்களை அநுபவிக்கிறார்கள் என்று தைத்திரீயோபநிடதம் ப்ருகுவல்லி ஓதுகிறது.

**'इमान् लोकान् कामान्नी कामरुप्यनु सञ्चरन् |**
**एतत् सामगायन् आस्ते हावु, हावु, हावु ||'**

(இமான் லோகான் காமாந்நி காம ரூப்யநுஸந் சாந்
ஏதத் ஸாம காயந் நாஸ்தே ஹாவு ஹாவு ஹாவு)

அதாவது இந்த உலகங்களை இச்சித்தவுடனே கிடைக்கும் அன்னத்தோடு கூடியவனாகவும் இச்சித்தவுடனே கிடைக்கும் உருவத்தோடு கூடியவனாகவும் அநுபவித்துக் கொண்டு முக்தனானவன் இந்த எல்லா இடங்களிலும் சமமாய் நிறைந்திருக்கிற பிரம்மத்தை ஸாம கானம் பாடிக் கொண்டிருக்கிறான் ஆச்சர்யம் ஆச்சர்யம் ஆச்சர்யம் என்றபடி. இக்கருத்தை உட் கொண்டே ஆழ்வாரும் 'பரிவதிலீசனைப் பாடி விரிவது மேவலுறுவீர்' (1. 6. 1) என்று பாசுரமிடுகிறார். எம்பெருமானைக் கிட்டினால் எல்லை அளவுயன்றிக்கே மகிழ்ச்சிக்குப் போக்குவீடாக 'ஏதத் ஸாம காயந் நாஸ்தே' என்கிறபடியே ஸாமகானம் பண்ணவேண்டும் என்று கூறுகிறார்.

மேலும், திருக்கண்ணபுரத்தின் வளப்பத்தைச் சொல்லும் போது அங்குள்ள வண்டுகள் எல்லாம் மதுபானம் செய்வதன் பொருட்டு முக்தர்கள் மேற்கூறிய உபநிடதத்தொடரின்படி ஸாமகானம் செய்வது போல இருக்கும் என்பதை,

'வண்டு பாடும் பொழில் சூழ் திருக்கண்ணபுரத்து' (9. 10. 3) என்ற அடியினால் அநுபவிக்கிறார் (9. 10. 3 -36 படி).

அவ்வாறே திருவனந்தபுரத்து எழிலைச் சொல்லும் போது,

'விரும்பினான் சுரும்பலற்றும், தடமுடைவயல்
அனந்தபுரநகர் புகுதுமின்றே' (10. 2. 1)

என்ற அடிகளால் வண்டுகள் 'ஏதத் ஸாம காயந்நாஸ்தே' என்கிறபடியே முக்தர்கள் செய்யுமத்தைச் செய்வதாகக் கூறுவர் (10. 2. 1 -36 படி).

'நாடீர் நாடொறும்
வாடமலர் கொண்டு
பாடீர் அவன் நாமம்
வீடே பெறலாமே' (10. 5. 5)

என்ற பாசுரத்தில் 'பாடீர் அவன் நாமம்' என்பதனால் 'ஏதத் ஸாம காயந் நாஸ்தே' என்கிறபடியே முக்தர்கள் ஸாமகானம் பண்ணுமாபோலே அவனுடைய திருநாமங்களைப் பக்தியுடன் பாடுகோள் என்று சொல்லுகிறார் (10. 5. 5 - 36 படி).

**எம்பெருமானோடு மேல் எல்லையான ஒற்றுமையை (பரமம்ஸாம்யம்) அடைதல்:**

எம்பெருமானை உபாஸனம் செய்பவனுக்கு எல்லையற்ற மேன்மையையுடைய ப்ரஹ்மாநுபவம் பயனாகக் கிடைக்கும் என்று உபநிடதங்கள் ஓதுகின்றன. முண்டகோபநிடதத்தில், (3. 1. 3)

**'यदा पश्यः पश्यते रुक्मवर्णं कर्तारमीशं पुरुषं ब्रह्मयोनिम् |**
**तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति|'**

(யதாபச்ய: பச்யதேருக்மவர்ணம் கர்த்தாரமீசம்
புருஷம் ப்ரஹ்மயோநிம் | ததாவித்வாந்புண்ய
பாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்ய முபைதி)

என்கிற மந்திரத்தினால், 'பிறவித்துயர் நீங்கின முக்தனாவான், பொன் போன்று அழகிய திருமேனி உடையவனாய், உலகுக்குக் கருத்தாவாய்,

நியமிப்பவனாய், புருஷன் எனப்படுமவனாய், உலகுக்கு உபாதாந காரணமாயிருக்கும் பரமாத்மாவை எப்போது காண்கிறானோ, அப்போது அவன் புண்ய பாபங்களை விட்டு எந்தத் தோஷமும் இல்லாதவனாய் அபஹதபாப்மத்வம் (பாபமின்மை) முதலான எட்டு குணங்கள் தோன்றப் பெற்று ப்ரம்மத்தோடு மேல் எல்லையான ஒற்றுமையை அடைகிறான்' என்று சொல்லப்படுகிறது. மேலும் அதே உபநிடதத்தில்,

**'सयो ह वै तत् परमं ब्रह्मवेद ब्रह्मैव भवति |'**

*(ஸயோ ஹ வை தத் பரமம் ப்ரஹ்மவேத ப்ரஹ்மை பவதி)*

என்ற தொடரால் எவன் ஒருவன் அந்தப் பரப்ரம்மத்தை அறிகிறானோ அவன் ப்ரம்மமேயாகிறான் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது ப்ரம்மத்தை அறிந்து தியானித்து நிச்சல நினைவினால் கண்ணால் காண்பது போல, பக்தியைச் செய்தவன் தப்பாமல் ப்ரம்மம் போலவே ஆகிறான் என்றபடி.

மேற்கூறிய உபநிடதத் தொடர்களின் கருத்தை உட் கொண்டு, ஆழ்வார் பாசுரங்கள் அமைந்தமை காணலாம்

'சுமந்து மாமலர் நீர் சுடர் தூபங்கொண்டு
அமர்ந்து வானவர் வானவர் கோனொடும்
நமன்றெழுந்திருவேங்கடம் நங்கட்குச்
சமன் கொள் வீடு தரும் தடங்குன்றமே' (3. 3. 7)

இப்பாசுரத்தால் ஆழ்வார் எதிர்பார்த்த அடிமையைத் திருமலை தானே தரும் என்கிறார். 'நித்யசூரிகளும், சேனைமுதலியாரும் உயர்ந்தமலர், தூயநீர், தூபம், தீபம் ஆகியவற்றை சுமந்து பொருந்தி வந்து வணங்கிக் கொண்டு எழும்படியான விசாலமான திருவேங்கடமானது, கைங்கர்யருசியுடைய நமக்கு 'ப்ரஹ்மவேத ப்ரஹ்மை பவதி' என்றும் 'நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி' என்றும் மேற்கூறியபடியே

எம்பெருமானுக்கு அடியவனான இனிமையால் - வந்த அவனோடு மேல் எல்லையான ஒற்றுமையாகிய - வீடுபேறு அடைவிக்கும்' என்பர் நம்பிள்ளை (3. 3. 7 - 36 படி).

சாந்தோக்ய உபநிடத பரவித்யைக்கு அங்கமான ப்ரஜாபதி வித்யையில், இந்த ஜீவனானவன் தோஷங்கள் நிறைந்த இந்த உடலிலிருந்து கிளம்பி பரஞ்சோதி என்ற பரப்ரம்மத்தை அடைந்து (இதுவரையில் பிறவியில் தீவினைகளினால் மறைந்திருந்த தனதேயான உண்மைத் தன்மைகள் வெளியிடப் பெறுகிறான் என்பஃத,

**'एष सम्प्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परं |**
**ज्योतिरुपसम्पद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते ||'**

*(ஏஷ ஸம்ப்ரஸாதோஸ் மாச்சரீராத் ஸமுத்தாய*
*பரம் ஜ்யோதி ரூபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபி*
*நிஷ்பத்யதே) (8. 12. 2)*

என்று ஓதிற்று. இது பற்றியே, 'சமன் கொள் வீடுதரும்' என்ற ஆழ்வார் வாக்குக்கு 'ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே' என்கிறபடியே இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபாநுரூபமான (அடிமைத் தன்மைக்குத்தக்க) மோக்ஷத்தைத் தரும் என்று நம்பிள்ளை உரைப்பர் (3. 3. 7 - 36 படி).

மேலும் சாந்தோக்ய உபநிடத பஞ்சாக்நியில் கூறியபடியே சுவர்க்கம், மேகம், பூமி, புருஷன், ஸ்திரீ ஆகியவற்றால் வருகிற ஜன்ம பரம்பரைகளை வேர்பற்றோடே அறுத்து,

'ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே' என்கிறபடியே தன் தாளின் கீழ்

சேர்த்துக் கொள்கிறான் என்பதை,

'சன்ம சன்மாந்திரம் காத்து அடியார்களைக் கொண்டு போய்த் தன் தாளின் கீழ்க் கொள்ளும் அப்பன்' (3. 7. 7) என்று போற்றி உரைப்பர் ஆழ்வார். இவ்விடத்து நம்பிள்ளை உரை இன்சுவையாயிருக்கும் (3. 7. 7 - 36 படி).

மேற்கூறிய 'யதாபஸ்ய....' என்ற முண்டகோபநிடத மந்தரத்தில் எவனொருவன் பரமாத்மாவைப் பார்க்கிறானோ அப்போது அவன் புண்யபாபங்களிலிருந்து விடுபடுகிறான் என்பதை 'புண்யபாபேவிதூய' என்ற தொடர் உணர்த்துகிறது. எனவே புண்யபாபங்களுக்கு எம்பெருமான் நிர்வாககன் என்றதாயிற்று. இது பற்றியே ஆழ்வாரும்.

'துயரமே தருதுன்ப வின்ப வினைகளாய்' (3. 6. 8)

என்று பாசுரமிடுகிறார்.

அதாவது எம்பெருமான் துக்கத்தையே தரக்கடவதான புண்யபாபரூபமான கர்மங்களுக்கு நியாமகன் என்றபடி. இப்படி புண்யபாபமிரண்டும் துக்கத்தையே தரக்கடவதால் இவை எம்பெருமானின் அடிமைத்தன்மைக்கு விரோதியாகும். அதனால் 'புண்யபாபேவிதூய' என்றது (3. 6. 8 - 36 படி).

மேலும்,

'என்னாவது? எத்தனை நாளைக்குப் போதும்? புலவீர்காள்
மன்னா மனிசரைப் பாடிப் படைக்கும் பெரும் பொருள்
மின்னார் மணிமுடி விண்ணவர் தாதையைப் பாடினால்
தன்னாகவே கொண்டு சன்மஞ் செய்யாமையுங் கொள்ளுமே'

என்ற (3. 9. 4) பாசுரத்தில் நித்யசூரிகளுக்குத் தலைவனான எம்பெருமானைப் பாடினால் அவன் நம்மைத் தனக்கே அடியனாகப் பண்ணுவிப்பான்

என்பதை 'தன்னாகவே கொண்டு' என்ற தொடரால் உரைப்பர். அதாவது 'பரமம் ஸாம்ய முபைதி' என்றும் 'தம்மையே ஒக்க அருள் செய்வர்' (பெரிய திருமொழி 11. 3. 5) என்றும் அருளியபடியே தன்னோடு ஒக்கப் பண்ணி என்று இரண்டாவது பொருள் உரைப்பர் நம்பிள்ளை ( 3. 9. 4 - 36 படி).

அவ்வாறே.

'கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றுங் கேட்பரோ?
கேட்பார்செவிசுடு கீழ்மைவசுவுகளேவையும்
சேட்பால்பழம் பகைவன் சிசுபாலன் திருவடி
தாட்பாலடைந்த தன்மை அறிவாரை அறிந்துமே' (7. 5. 3)

என்ற பாசுரத்தில் 'திருவடிதாட்பாலடைந்த' என்பதற்கு நம்பிள்ளை மேற்கூறிய உபநிடதக் கருத்தை சுட்டி உரைப்பர். அது வருமாறு 'திருவடிதாட்பாலடைந்த - ஸர்வஸ்வாமியுடைய பாத பார்ச்வத்தைக் கிட்டின. ஸாயுஜ்ய லக்ஷண மோக்ஷமாகிறது தான் இன்னதென்கிறது அதாவது இடையீடின்றிக்கே (விச்சேதமின்றிக்கே) கிட்டி நின்று நித்ய கைங்கர்யம் பண்ணப் பெறுகை. 'ப்ரஹ்மவேத ப்ரஹ்மை பவதி' என்றும் 'ப்ரஹ்மம் ஸாம்ய முபைதி' என்றும் சொல்லுகிறவற்றால் வஸ்த்வைக்யம் (பொருளில் ஒற்றுமை) சொல்லுகிறதன்று; பேற்றில் வந்தால் அவனோடு இவனுக்கு ஸர்வதா ஸாம்யமுண்டு என்கிறது' என்பர் (7. 5. 3 - 36 படி) மேலும் இவ்விஷயம்,

'தன் திருமேனி ஒளி அகற்றித்தெளிவிசும்பு கடியுமே' (9. 7. 4)

என்ற பகுதியிலும் வலியுறுத்துவது காணலாம்.

## முடிவுரை

இந்திய தத்துவ ஞானத்தின் அடிப்படை வேதங்களாகும். அவ்வேதங்களில் பிரம்ம காண்டமான உபநிடதங்களே பல்வேறு தத்துவ சிந்தனைகளுக்கு அடிப்படையாக அமைந்துள்ளன. அந்த உபநிடதங்கள் எல்லா காலத்து மக்களுக்கும் உரிய பாடங்களாகும். அவை வடமொழியில் அமைந்திருப்பினும் அதன் கருத்துக்களை உலகோர் எளிதில் அறியும் வண்ணம் நம்மாழ்வார் முதன்முதலாக தமிழ் மொழியில் பாசுரங்களாக இயற்றி, வேதம் தமிழ் செய்த மாறன் எனச் சிறப்புப் பெயர் பெற்றார். இவ்வாறு ஆழ்வார் உபநிடதங்களின் திரண்ட கருத்தான அர்த்தபஞ்சகத்தை தாம் அருளிய திருவாய்மொழியில் உணர்த்தியுள்ளார். இதனை வைணவ உரையாசிரியர்களும் உபநிடதத் தொடர்களோடு ஒப்பீடு செய்து திருவாய்மொழியின் வேதமாம் தன்மையை எடுத்து நிறுவியுள்ளனர். அவ்வாறு நிறுவியதை ஐம்பெரும்பொருளான அர்த்தபஞ்சக அடிப்படையில் ஆய்வு செய்யும் போது இறைநிலையின் கீழ் எம்பெருமானது ஸ்வரூபம், அழகு, காரணத்வம், குணம், அருள், விபூதி (செல்வம்), சரீராத்மபாவம் ஆகிய தன்மைகள் வெளியிடப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும்.

**இறைநிலை:**

**(அ) எம்பெருமானது ஸ்வரூபம்:**

எம்பெருமானது சிறப்பான ஸ்வரூபம் தைத்திரீயோபநிடதம் காட்டியபடியே 'இல்லதுமுள்ளதும் அல்லது அவனுரு' என்ற திருவாய்மொழித் தொடர் மூலம் விளக்கம் பெற்றது. சாந்தோக்கிய சுபால உபநிடதங்கள் கூறியபடியே சிதசித்வஸ்துக்கள் எம்பெருமானதீனம் என்று நிறுவப்பட்டது.

கேன, பிருகதாரண்யக உபநிடதங்கள் காட்டியபடியே எம்பெருமானின் அந்தர்யாமித்வம் விளக்கப்பட்டது.

**(ஆ) எம்பெருமானின் திருமேனி அழகு:**

கட, தைத்திரீய, சாந்தோக்ய, பிருகதாரண்யக உபநிடத தொடர்கள் மூலம் எம்பெருமான் எண்ணற்ற திருநாமம், திருமேனி கொண்டவன் என்றும், அழகுடையவன் என்றும் நிறுவப்பட்டது.

**(இ) எம்பெருமானின் காரணத்வம்:**

தைத்திரீய, சாந்தோக்ய, அதர்வசிக உபநிடதங்கள் வாயிலாக எம்பெருமான் எல்லா பொருள்களுக்கும் காரணமானவன் என்றும் தைத்திரீயோபநிடதம் மூலமாக பிரமன், சிவன் முதலானோர்க்குக் காரணம் தான் என்றும், தைத்திரீய, சுவேதாச்வதர உபநிடதங்கள் வாயிலாக பிரமனுக்கு வேதத்தை உபதேசித்தவன் என்பதும் வெளிப்பட்டது.

**(ஈ) எம்பெருமானின் குணங்கள்:**

கேன, சுவேதாச்வதர உபநிடதங்கள் மூலம் எம்பெருமான் அளவிடற்கரியவன். சாந்தோக்யத் தொடர் வாயிலாக எல்லா இனிமையோடு கூடியிருப்பவன்.

சுபாலோபநிடதம் வாக்யம் கொண்டு எல்லா உறவாயிருக்கும் தன்மையன்;

தைத்திரீய, முண்டக, சாந்தோக்ய மகோபநிடதங்கள் பகர்கிறபடியே எம்பெருமான் மிக்க ஒளியுடையவன்.

கட, சாந்தோக்ய, பிருகதாரண்யக உபநிடதங்கள் மூலமாக உயர்ந்தோரைக் காட்டிலும் உயர்ந்தவன் எம்பெருமான்;

தைத்திரீய, சுபாலோபநிடதத்தின்படியே எம்பெருமானின் பரத்துவமும், சௌலப்யமும் சொல்லப்பட்டது.

தைத்திரீய உபநிடத ஆனந்தவல்லி காட்டியபடியே கல்யாண குணமுடையவன் எம்பெருமான் என்றும் நிறுவப்பட்டதாயிற்று.

**(உ) எம்பெருமானின் அருள்:**

கட, தைத்திரீய, சுவேதாச்வர உபநிடதங்களில் கூறியபடியே ஆழ்வாருக்கு எம்பெருமான் ஒரு காரணமின்றி இன்னருளை வழங்கியமை நிறுவப்பட்டது.

**(ஊ) எம்பெருமானின் விபூதி (செல்வம்):**

தைத்திரீயோபநிடதம் மூலமாக எம்பெருமான் லீலா விபூதி(மண்ணாடு)க்குத் தலைவன் என்பது வெளியிடலாயிற்று.

**(எ) சரீராத்மபாவம்:**

சாந்தோக்ய, பிருகதாரண்யக உபநிடதங்கள் மூலமாக விசிஷ்டாத்வைதத்துக்குரிய சரீராத்மபாவம் என்ற கோட்பாடு நிறுவியது அறியற்பாலபாகும்.

**உயிர்நிலை**

உயிர்நிலைகளின் கீழ் ஜீவாத்மாவின் தனித்தன்மை , முக்தர்களின் நிலைமை, முக்தனுக்கு ஸ்வாதந்த்ரியன்மை, எம்பெருமானை அறிய இச்சையும் தகுதியும் என்ற தன்மைகள் கண்டு நிறுவப்பட்டுள்ளன.

**(அ) ஜீவாத்மாவின் தனித்தன்மை:**

தைத்திரீய உபநிடத ஆனந்தவல்லி காட்டியபடியே ஜீவாத்மாவின் தனித்தன்மை வெளியிடப்பட்டுள்ளது.

**(ஆ) முக்தர்களின் நிலை:**

கடோபநிடத வாக்யம் மூலம் பிறவித்துயர் நீங்கி முக்தரானவர்கள் பற்றி தேசப்பட்டுள்ளது.

**(இ) முக்தனுக்கு ஸ்வாதந்த்ரியன்மை:**

சாந்தோக்ய உபநிடதத் தொடர் மூலம் முக்தனுக்கு ஸ்வாதந்த்ரியன்மை அறிவிக்கப்பட்டது.

**(ஈ) எம்பெருமானை அறிய இச்சையும் தகுதியும்:**

பிருகதாரண்யக உபநிடதத் தொடர் வாயிலாக எம்பெருமானை அறிய ஜீவாத்மாவுக்குரிய இச்சையும் தகுதியும் விளக்கப்பட்டுள்ளது.

**தக்கநெறி:**

தக்கநெறியின் கீழ் எம்பெருமானை அடையும் உபாயம், எம்பெருமானை வணங்குவதால் வரும் பேறு ஆகியவை சொல்லப் பட்டுள்ளன.

**(அ) எம்பெருமானை அடையும் உபாயம்:**

கட, முண்டக உபநிடதங்கள் வாயிலாக எம்பெருமானை அடைய எம்பெருமானே உபாயம் என நிறுவப்பட்டுள்ளது.

**(ஆ) எம்பெருமானை வணங்குவதால் வரும் பேறு:**

சாந்தோக்ய உபநிடதக் கருத்துப்படியே எம்பெருமானை வணங்குவதால் வரும் பேறு குறிப்பிடப்பட்டது.

**தடை அல்லது ஊழ்வினை:**

ஜீவாத்மா பாபங்களைப் போக்க வழி, எம்பெருமானைப் பற்றுவதால் வினைகள் அறுதல் என்று ஊழ்வினையின் தன்மைகள் ஆயப்பட்டுள்ளன.

**(அ) ஜீவாத்மா பாபங்களைப் போக்க வழி:**

தைத்திரீய உபநிடத நாராயணவல்லி கூறியபடியே ஜீவாத்மா பாபங்களைப் போக்க வழி அறியப்படலாயிற்று.

**(ஆ) எம்பெருமானைப் பற்றுவதால் வினைகள் அறுதல்:**

யஜுர் வேதம், ப்ரம்மசூத்ரம், சாந்தோக்ய உபநிடதங்கள் வாயிலாக எம்பெருமானைப் பற்றுவதால் வினைகள் அகலும் என்பது நிறுவப்பட்டது.

**வாழ்வு:**

வாழ்வு என்பதின் கீழ் ஜீவாத்மாவின் தேச விசேஷ அநுபவம், எம்பெருமானைப் பாடுவதாகிய பேறு, எம்பெருமானோடு மேல் எல்லையான ஒற்றுமையை அடைதல் என்ற தன்மைகள் வெளிக்கொணரப்பட்டன.

**(அ) ஜீவாத்மாவின் தேச விசேஷ (பரமபத) அநுபவம்:**

தைத்திரீய, சாந்தோக்ய, கௌஷீதகி உபநிடதங்கள் **வாயிலாக** ஜீவாத்மா பரமபதம் அடைந்து பெறும் அநுபவம் குறிக்கப்பட்டது.

**(ஆ) எம்பெருமானைப் பாடுவதாகிய பேறு:**

தைத்திரீய உபநிடத ப்ருகுவல்லி வாக்யம் மூலமாக எம்பெருமானைப் பாடுவதாகிய பேறு விளக்கப்பட்டது.

**(இ) எம்பெருமானோடு மேல் எல்லையான ஒற்றுமையை அடைதல்:**

முண்டக, சாந்தோக்ய உபநிடதங்கள் கூறியபடியே ஜீவாத்மா முக்தனாகி எம்பெருமானோடு மேல் எல்லையான ஒற்றுமையை (பரம காம்யத்தை) அடைகிறான் என்பது நிறுவப்பட்டது.

இவ்வாறு எடுத்துக் கொண்ட தலைப்புக்கேற்ப நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில் உபநிடதக் கருத்துக்கள் அர்த்தபஞ்சக பாடமாக அமைந்துள்ளமை அறிறற்பாலதாகும்.

எனவே, உபநிடதங்களின் உண்மைப் பொருள்கள் ஆழ்வார் பாசுரங்கள் மூலம் தெளிவு பெறலாயிற்று.

மேலும் இவ்வாய்வு இருமொழி ஒருமைப்பாட்டை தொடர்புபடுத்தி உபநிடதங்களின் உண்மைக் கருத்துக்களை உணர்த்த வழி வகுப்பதாகும்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

திருவாய்மொழித் தொடரும் உபநிடதத் தொடரும்

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் தொடர் / சொல் | உபநிடதப் பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| | | **இறைநிலை** | | |
| | | **1. எம்பெருமான் எல்லாப் பொருள்களுக்கும் காரணமானவன்** | | |
| 1. | 1. 10. 2 | மண்ணும்.... எம்பிரானையே | தை. ஆ(2. 6) | ஸ:அகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி \| |
| 2. | 2. 7. 12 | தனி முதல்வனை | சா .உ (6. 2. 1) | ஸதேவ.......ப்ரஜாயேயேதி \| |
| | 10. 7. 9 | ஊழி முதல்வன் ஒருவனே | சா .உ (6. 2. 1) | ஸதேவ.......ப்ரஜாயேயேதி \| |
| 3. | 3. 3. 5 | சோதியாகி.... ஆதி மூர்த்தி | தை. ஆ (1. 2)<br>அத. உ (2. 17) | யதோவா.... தத்ப்ரஹ்மேதி\|<br>காரணந்துத்யேய: ....மத்யே\| |
| 4. | 9. 10. 9 | ஆதியானை | தை. ஆ. அத. உ | இரண்டு தொடரும் |
| 5. | 4. 10. 2 | ஆதிப்பிரான் | தை. ஆ.(1. 2) | யதோவா.... தத்ப்ரஹ்மேதி\| |
| 6. | 4. 10. 7 | ஆதி மூர்த்திக்கு | ” | ” |
| 7. | 5. 3. 1 | ஆதி மூர்த்தியை | ” | ” |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல் பெயரும் | உபநிடதத் தொடர் எண்ணும் | |
|---|---|---|---|---|
| | 2. எம்பெருமான் பிரமன் சிவன் முதலானோர்க்குக் காரணபூதன் | | | |
| 8. | 1. 5. 4 | தானோருருவே தனி வித்தாய் தன்னில் மூவர் முதலாய | தை. உ (1. 11) | ஸ:ப்ரஹ்மா ஸசிவ ஸ்ஸேந்த்ரஸ் ஸோ5க்ஷர: |
| 9. | 2. 8. 1 | இருவரவர் முதலுந் தானே | தை. உ (1. 11) | ,, |
| 10. | 4. 10. 4 | பேசநின்ற ..... நாயகனவனே | ,, | ,, |
| 11. | 7. 4. 5 | விண்ணுள் ஏனுடைத் தேவர் | ,, | ,, |
| 12. | 7. 6. 7 | என் மலைமகள் .... நின்ற சசீபதியை | | |
| 13. | 9. 3. 2 | அவனும் அவனும் ... அவனே | ,, | ,, |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் தொடர் / சொல் | உபநிடதப் பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| 3. எம்பெருமான் வேதங்களை உபதேசித்தவன் | | | | |
| 14. | 7. 5. 4 | தன்மையறிபவர்... தன்னுள்ளே | சுவே.உ (6. 18) | யோ ப்ரஹ்மாணம் ...ப்ரபத்யே \| |
| 15. | 1. 1. 8 | அமரர்க்கும் அறிவியந்து | ” | ” |
| 16. | 4. 10. 2 | முன் படைத்தான் | ” | ” |
| 17. | 6. 6. 4 | பீடுடை நான்முகனை படைத்தானுக்கு | ” | ” |
| 18. | 6. 6. 5 | பண்புடை வேதம் பயந்த பரன் | ” | ” |
| 19. | 7. 9. 2 | மூவுருவாம் முதல்வனை | ” | ” |

| என் | பாசுர என் | திருவாய்மொழித் தொடர் / சொல் | உபநிடதப் பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| | | சிதசித்வஸ்துக்கள் எம்பெருமானதீனம் | | |
| 20. | 1. 1. 4 | நாமவன் .... அவரே | சா. உ (3. 14. 1)<br>சா. உ (6. 12. 3) | (1) ஸர்வம் கல்விதம்... உபாஸீத\|<br>(2)ஸய ஏஷோ5ணிமா .... தத்வமஸி ச்வேதகேதோ இதி\| முதலது |
| 21. | 8. 1. 9 | அருநரகவையும் நீ | சா. உ | |
| 22. | 10. 5. 3 | தானே உலகெல் „ லாம் ஆள்வானே | „ | „ |
| 23. | 7. 8. 10 | தொல்லை நன்னூலில் சொன்ன | சா. உ (6. 2. 1)<br>சு. உ | ஸதேவ .. ஏகமேவ அத்வதீயம்\|<br>தம: பரே தேவே ஏகீபவதி\| |
| 24. | 6. 2. 8 | யாவையும் யாவரும் பிணக்கி | சுப. உ (2) | தம: பரே தேவே ஏகீபவதி\| |
| 25. | 10. 2. 7 | உலகுயிர் தேவும் மற்றும் | „ | |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல் | பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| | | **எம்பெருமானுடைய ஸ்வரூபத்தின் இயல்பு** | | |
| 26. | 1. 2. 4 | இல்லதுமுள்ளதும் அல்லதவனுரு | தை. ஆ (2. 1) | ஸத்யஞ்ச அந்ருதஞ்ச ஸத்யமபவத்\| |
| | | **எம்பெருமான் அளவிடற்கரியவன்** | | |
| 27. | 1. 1. 2 | எதிர் நிகழ் கழிவினும் இனனிலன் என்னுயிர் மிகுநரையிலனே | சு. உ (6. 8) | ந தத்ஸ மச்சாபயதிகச்ச த்ருச்யதே \| |
| 28. | 2. 3. 2 | ஒத்தார் மிக்காரை ... மாமாயா | " | " |
| 29. | 4. 5. 7 | என்றும் ஒன்றாகி.. நின்றானை | " | " |
| 30. | 5. 4. 4 | என் பெரிய சிந்தை நோய் | கே.உ (2. 3) | யஸ்யாமதம் அவிஜாநதாம் |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல்பெயரும் | உபநிடதத் தொடர் எண்ணும் | |
|---|---|---|---|---|
| 31. | 7. 9. 1 | என்னால் தன்னை | " | " |
| 32. | 9. 3. 3 | அறிந்தன கொள்க அரும்பொருளாதல் | " | " |
| 33. | 10. 8. 8 | கருத்தின் கண் பெரியவன் | " | " |
| எம்பெருமான் எல்லா இனிமையோரு கூடியிருக்கும் தன்மையன் | | | | |
| 34. | 2. 3. 1 | தேனும் பாலும் நெய்யும்... கன்னலும் அமுதுமொத்தே | சா.உ.(3. 14. 2)<br>சா.உ.(8. 1. 1) | ஸர்வகந்த: ஸர்வரஸ:<br>ஆகாச: தஸ்மிந் யதந்தஸ் ததநவேஷ்டவ்யம் |
| 35. | 3. 5. 6 | கனியை ...யமுதை | சா.உ (3. 14. 2) | ஸர்வகந்த: ஸர்வரஸ: |
| 36. | 3. 6. 7 | கன்னல் கனியினை | " | " |
| 37. | 3. 10. 3 | கட்டியை ... தன்னை | " | " |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் தொடர் / சொல் | உபநிடதப் பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| 38. | 8. 4. 11<br>9. 6. 1 | தேனை ...யமுதை„<br>தெருவெல்லாம் „ | „ | ஸர்வகந்த: |
| | **எம்பெருமான் எல்லா உறவாயிருக்கும் தன்மை** | | | |
| 39 | 1. 2. 6 | பற்றில ஈசனும்<br>முற்றிலடங்கே | சு.உ (16) | மாதா பிதா ப்ராதா....<br>நாராயண: |
| 40. | 2. 3. 2 | அத்தாயாய்த்<br>தந்தையாய்<br>அறியாதன<br>அறிவித்த அத்தா | „ | „ |
| 41. | 4. 9. 7 | ஆயேயிவ்வுலகத்து<br>திரிவனவும் | „ | „ |
| 42. | 3. 6. 9 | தஞ்சமாகிய<br>தந்தை தாயொடு<br>தானுமாய் | „ | ... |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் தொடர் / சொல் | உபநிடதப் பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| 43. | 5. 1. 8 | சேலேய். தாய் தந்தையும் அவரே இனியாவாரே | சுஉ (16) | மாதா பிதா ப்ராதா.... நாராயண: |
| 44. | 3. 10. 10 | எம்பெருமான் மிக்க ஒளியுடையவன் வளரொளி ஈசன் | முஉ (3. 1. 1) | த்வா ஸுபர்ணா.. அபிசாகசீதி |
| 45. | 1. 1. 3 | புலனொடு புலனலன் | சாஉ | பரஞ்ஜ்யோதி ரூபஸம்பத்ய |
| 46. | 2. 2. 5 | மிகுஞ் சோதி | தை. நா(1. 11) | நாராயண பரஞ்ஜோதி ...பர: |
| 47. | 3. 1. 2 | பரஞ்சோதி | " | " |
| 48. | 2. 5. 1 | ஆழி நூலாரமுள | மகோஉ | ஸ ஏகாகீ நரமேத... |
| 49. | 3. 2. 1 | முந்நீர் அந்நாள்நீ | " | " |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல் பெயரும் | உபநிடதத் தொடர் எண்ணும் | |
|---|---|---|---|---|
| 50. | 10. 10. 1 | முனியே | மகோ உ | ஸ ஏகாகீ ந ரமேத... |
| | எம்பெருமான் உயர்ந்தோரைக் காட்டிலும் உயர்ந்தவன் | | | |
| 51. | 3. 3. 2 | எந்தை.. முந்தை | சு. உ(6. 7) | தமீச்வராணாம் ..தைவதம் |
| 52. | 1. 1. 8 | சுராறி வருநிலை விண் | பி.ரு. உ(5. 8. 6) | ஆகாச ஏவ.. ப்ரோதஞ்சேதி |
| 53. | 1. 1. 8 | வான் முதலாயவை ... பாமரன் | கடோ உ (1. 2. 25) | யஸ்ய ப்ரஹ்ம ... யத்ரஸ: |
| 54. | 3. 8. 8 | சென்று செல்லாதன. ..காலம் | ,, | ,, |
| 55. | 10.10.1 | முக்கண்ணப்பா | ,, | ,, |
| | எம்பெருமானின் பரத்துவமும் சௌலப்யமும் | | | |
| 56. | 1. 3. 7 | ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற நன்றெழில் நாரணன் | சு. உ.. (7) | ஏஷஸர்வபூதாந்தராத்மா ... ஏகோ நாராயண: |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல்பெயரும் | உபநிடதத் தொடர் எண்ணும் | |
|---|---|---|---|---|
| 57. | 1. 2. 10 | எண்பெருக்கந்நலத்து கழல் சேரே | தை. நா (11. 5) | நாராயண பரோஜ்யோதி: ஸ்தித: |
| எம்பெருமான் லீலா விபூதிக்கும் (மண்ணாட்டுக்கும் தலைவன்) | | | | |
| 58. | 1. 1. 3 | நிலனிடை ...யுருவின னருவினன் | தை. நா(11) | பதிம் விச்வஸ்ய....அச்யுதம் |
| 59. | 1. 1. 5 | அவரவர் இறையவர் குறைவிலர் | " | " |
| 60. | 3. 6. 2 | மூவராகிய மூர்த்தியை தன்னை | " | " |
| எம்பெருமான் அந்தர்யாமியாய் இருப்பவன் | | | | |
| 61. | 1. 9. 7 | தோளினை... நாவிலுளானே | பிரு. உ (5. 7. 21) | யோவாசி திஷ்டந் ... அம்ருத: |
| 62. | 8. 1. 5 | ஆருயிரேயோ | கே. உ (1. 2) | ப்ராணஸ்ய ப்ராண: |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல் | பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| | **எம்பெருமான் எண்ணற்ற வடிவு திருநாமங்களையுடையவன்** | | | |
| 63. | 1. 3. 4 | பேருமோராயிரம் பிறபலவுடைய எம்பெருமான் | சா. உ (6. 3. 2) | அநேந ஜீவநாத்மநா அநுப்ரவிச்ய நாமரூபே வியாகரவாணிஇதி |
| 64. | 10. 7. 3 | எம்மாயவாக்கை இதனுள் புக்கு | ” | ” |
| 65. | 4. 3. 3 | அருவாகி | ” | ” |
| | **எம்பெருமானின் திவ்ய மங்கள திருமேனி அழகு** | | | |
| 66. | 3. 1. 3 | பரஞ்சோதி நீ பரமாய் | க. உ (2. 2. 15) ... | ந தத்ர சூர்யோபாதி... இதம் விபாதி |
| 67. | 3. 3. 5 | சோதியாகி எல்லா உலகும் தொழும் | தை. உ. பி (11) | நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகவபாஸ்வரா |
| 68. | 10. 1. 5 | சுடரொளி | ” | ” |
| 69. | 5. 1. 6 | நிறமுடை நால் தோள் .. ஒழிந்தேன் | ” | ” |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் தொடர் / சொல் | உபநிடதப் பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| 70. | 3. 1. 4 | நின்மாட்டாய மலர் புரையும் திருவுருவம் | ய. வே (2. 4) | விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ: |
| 71. | 3. 6. 1 | செய்யதாமரைக் கண்ணனாய் | சா.உ (1. 6. 6) | கப்யாஸம் புண்டரீகம் ஏவமக்ஷிணீ |
| 72. | 5. 4. 9 | செஞ்சுடர் தாமரைக் கண் செல்வன் | " | " |
| 73. | 4. 3. 5 | ஏலுமாடையுமஃதே | பிரு. உ | மஹாரஜநம் வாஸ: |
| | | எம்பெருமானின் கல்யாண குணம் | | |
| 74. | 1. 1. 1 | உயர்வறவுயர் நலமுடையவன் | தை.. ஆ (2. 8.) | யுவாஸ்யாத் ஆனந்த: யதோவாசோ.... கதாசநேதி |
| 75. | 2. 5. 8 | நாற்றடந்தோள் தன் மாலையானை | " | யதோவாசோ.... கதாசநேதி |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் தொடர் / சொல் | உபநிடதப் பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| 76. | 2. 6. 3 | நன்கேத்தி | தை. ஆ(2. 8) | ″ |
| 77. | 3. 1. 2 | ஒட்டுரைத்திவ் வுலகுன்னை | ″ | ″ |
| 78. | 3. 8. 10 | வாசகமாலை கொண்டு உன்னையே | ″ | ″ |
| 79. | 3. 9. 9 | வாய் கொண்டு... நின்று நின்றே | ″ | ″ |
| 80. | 7. 8. 1 | ஆம் வண்ண மின்ன ...வரியை | ″ | ″ |
| 81. | 7. 9. 1 | என்னைக்கும்... என்னால் தன்னை | தைஆ | ″ |
| 82. | 7. 9. 9 | என்னால் தன்னை உற | ″ | ″ |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல்பெரும் | உபநிடதத் தொடர் எண்ணும் | |
|---|---|---|---|---|
| 83. | 8. 1. 11 | உரிய சொல் மாலை | ,, | ,, |
| | | **எம்பெருமான் அருளின் பெருமை** | | |
| 84. | 1. 1. 1 | மயர்வற மதி நலமருளினன் | க. உ(2. 20)<br>சு. உ(3)<br>தை. நா(10) | அணோரணீயாந் ....<br>ஈசம் |
| | | **சரீராத்மபாவம்** | | |
| 85. | 1. 1. 7 | திடவிசும்பு... சுரனே | பிரு.உ(5. 7. 7)<br>(3. 7. 30)<br>சா.உ (6. 3) | யஸ்யப்ருதிவீ சரீரம்<br>யஸ்ய ஆத்மா சரீரம்<br>அநேந ஜீவேந...<br>கரவாணி |
| 86. | 1. 2. 1 | உம்முயிர் வீடுடை யானிடை _ | ,, | ,, |
| 87. | 1. 2. 1 | பரஞ்சுடர் ...கரந்து | சா. உ (63) | அநேந ஜீவேந.....கரவாணி |
| 88. | 6. 3. 7 | பரஞ்சுடர் ...கரந்து | சா. உ (63) | அநேந ஜீவேந.....கரவாணி |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் தொடர் / சொல் | உபநிடதப் பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| 89. | 6. 9..1 | நீராய்...சுடர்களி ரண்டாய் | ” | அநேந ஜீவேந....கரவாணி |
| ” | | | | |
| 90. | 7. 5. 4 | நன்மைப்புனல் .. தன்னுள்ளே | ” | ” |
| | | **உயிர் நிலை** | | |
| | | **ஜீவாத்மாவின் தனித் தன்மை** | | |
| 1. | 2. 6. 8 | மாறி மாறிப் பல பிறப்பும்... யான் மூழ்கினன் | தை. ஆ (6. 1) | அஸந்நேவஸபவதி.. ததோவிதூரிதி |
| 2. | 1. 7. 5 | என்னாவியை ... கொள்கின்ற நாதனை | ” | ” |
| 3. | 3. 1. 11 | உயக்கொண்டு பிறப்பறக்கும் | ” | ” |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் தொடர் / சொல் | உபநிடதப் பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| 4. | 5. 7. 3 | பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி | " | " |
| 5. | 7. 9. 4 | ஒப்பில்லாத் தீவினையேனை உய்யக் கொண்டு | " | " |
| 6. | 8. 1. 11 | இவற்றால் உய்யலாந் தொண்டீர் நங்கட்கே | " | " |
| 7. | 9. 8. 8 | அடியேனைப் பொருளாக்கி | " | " |
| | | முக்தர்களின் நிலை | | |
| 8. | 8. 3. 10 | கரை கண்டோர் | க.உ (1. 3. 1) | விக்ஞானஸாரதிர்பஸ்து ... பரமம் பதம் |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் தொடர் / சொல் | உபநிடதப் பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| | | முக்தர்களுக்கு ஸ்வாதந்த்ரமின்மை | | |
| 9. | 7. 9. 10 | உதவிக் கைம்மாறு ... இங்குமங்கே | சா. உ (8. 12. 2) | ஸ்வேந ரூபேணா பிநிஷ்பத்யதே |
| | | எம்பெருமானை அறிய இச்சையும் தகுதியும் | | |
| 10. | 7. 9. 8 | ஏர்விலாவென்னைத் தன்னாக்கி | பிரு. உ (6. 4. 22) | தமேதம் ... அநாசகேந |
| | | தக்கநெறி | | |
| | | எம்பெருமானை அடையும் உபாயம் | | |
| 1. | 6. 9. 11 | தெரிதல் நினைதல் எண்ணலாகத் திருமால் | மு. உ. (1. 2. 3) க. உ (3. 2. 3) | நாயமாத்யப்ரவசனேன ... தநூம்ஸ்வாம் |
| 2. | 2. 4. 2 | உம்மைக் காணும் நைகின்றாள் | ,, | ,, |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல் | பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| 3. | 3. 2. 5 | யானுன்னை எங்கு வந்து அணுகிற்பன் | „மு. உ. (1. 2. 3)<br>க. உ.. (3. 2. 3) | நாயமாத்யப்ரவசனேன ...தநூஸ்வாம் |
| 4. | 7. 2. 3 | கட்கிலீ உன்னைக் காணுமாறு அருளாய் | „ | „ |
| 5. | 8. 5. 1 | ஒரு நாள் காண வாராயே | „ | „ |
| 6. | 7. 3. 1 | வெள்ளைச் சுரிசங்கு காணீர் | „ | „ |
| 7. | 8. 7. 4 | தூயசுடர்ச் சோதி தனது என்னுள்.. திருவருள் செய்தே | „ | „ |
| 8. | 8. 7. 8 | என்னை ஆளும் பிரானார் வெறிதே செய்வர்... செய்வார்க்கு உகந்து | „ | „ |

„

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல்பெயரும் | உபநிடத எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| | எம்பெருமானை வணங்குவதால் வரும் பேறு | | | |
| 9. | 1. 6. 8 | கழிமின் தொண்டீர் அழிவின்றி ஆக்கம் தருமே | சா. உ (8. 15. 1) | ஸகல்வேவம் வர்த்தயந் ... வர்ததே |
| 10. | 3. 9. 3 | ஒழிவொன்றில்லாத பல்லூழி தோறூழி நிலாவப் போம். வழியைத் தரும் | " | " |
| 11. | 4. 1. 8 | பணங்கொள் அரவிணையான் திருநாமம் படிமினோ | " | " |
| 12. | 7. 5. 10 | போர்த்த பிறப்பொடு சேர்த்து | " | " |
| 13. | 10. 2. 3 | தீரும் நோய் பேசுமினே | " | " |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல் | பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| | | **ஊழ்வினை அல்லது தடை** | | |
| | | **ஜீவாத்மா பாபங்களைப் போக்க வழி** | | |
| 1. | 3. 2. 8 | மேவு துன்ப வினைகளை விடுத்துமிலேன் | தை. நா (11. 5) | தர்மே விச்வஸ்ய ஜகத.... வதந்தி |
| | | **எம்பெருமானைப் பற்றுவதால் வினைகள் அறுதல்** | | |
| 2. | 3. 3. 6 | வேங்கடங்கள் .. சுமந்தார்கட்கே | ய.வே.(63)<br>ப்ரு.சூ<br>(4. 1. 13)<br>சா.உ<br>(5. 14. 3)<br>சா.உ<br>(4. 14. 3) | ஜாயமாநோ...வா அந்ருண:<br>தததிகமே<br>உத்தர பூர்வாக<br>யோரச்லேஷ விநாசௌ<br>தத்வ்யபதேசாத்<br>தத்யதா இஷீகதூலம் .....<br>ப்ரதூயந்தே \|<br>தத்யதா புஷ்கர .....<br>ந ச்லிஷ்யதே \| |
| 3. | 1. 3. 8 | நாளும் நின்றடு நம்பழமை யங்கொடு வினையுடனே மாளும் | ,, | ,, |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் தொடர் / சொல் | உபநிடதப் பெயரும் எண்ணும் | உபநிடதத் தொடர் |
|---|---|---|---|---|
| 4. | 4. 5. 5 | மாற்ற மாலை புனைந்தேத்தி நாளும்.... கடுகி வினை நோய்கள் கரியவே | ” | ” |
| 5. | 7. 10. 6 | ஒன்று நில்லா கெடும் முற்றவும் தீவினை உள்ளித் தொழுமின் | ” | ” |
| 6. | 8. 10. 1 | தடுமாற்றற்ற தீக்கதிகள் முற்றும் தவிர்ந்த | ” | ” |
| 7. | 9. 8. 1 | அறுக்கும் வினையாயின | ” | ” |
| 8. | 10. 1. 7 | நம் துயர் கெடும் கடிதே | தை. ஆ. 6 | அதஸோபயங்கத: |

| என் | பாசுர என் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல்பெயரும் | உபநிடதத் தொடர் எண்ணும் | |
|---|---|---|---|---|
| | | வாழ்வு ஜீவாத்மாவின் தேச விசேஷ (பரமபத) அநுபவம் | | |
| 1. | 2. 3. 9 | கடிவார்.... களித்தேனே | தை.. ஆ(1. 2. 1) | ப்ரஹ்ம விதாப்நோதி பரம்\| ... ப்ரஹ்மணா விபஸ்சிதேதி |
| 2. | 3. 10. 1 | நன்மையுடையவன் சீர் பரவப் பெற்ற... குறைவிலனே | ” | ” |
| 3. | 4. 1. 7 | கோமின் துழாய்... குணங்களே | ” | ” |
| 4. | 2. 8. 11 | கண்டலங்கள் ... எம்மா வீடே | சா.உ(3. 13) தை. உ(1) | விச்வத:.. லோகேஷு அம்பஸ்யபாரே |
| 5. | 2. 8. 11 | வீற்றிருந்து | சா.உ(3. 25) | ஸஸ்வராட் பவதி |
| 6. | 2. 7. 8 | வாமனன் என் மரகத வண்ணன் | சா. உ | ஏஷஹி ஸர்வாணி வாமாநி நயதி |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல் | பெயரும் உபநிடதத் தொடர் எண்ணும் | |
|---|---|---|---|---|
| 7. | 10. 2. 11 | அந்தமில் புகழ்... மருதோளிணையே | கௌ.உ.(1. 3. 4) | தம் பஞ்சசதாந்யப்ஸர ஸாம்... ஹஸ்தா: |
| | | எம்பெருமானைப் பாடுவதாகிய பேறு | | |
| 8. | 1. 6. 1 | பரிவதிலீசனைப் பாடி.... மேவலுறுவீர் | தை. ப்(1. 3. 15) | இமாந் லோகாந் ... இத்யாதி |
| 9. | 9. 10. 3 | வண்டு பாடும் ...சூழ் | " | " |
| 10. | 10. 5. 5 | நாடீர் நாடோறும்.... பெறலாமே | " | " |
| 11. | 10. 3. 1 | விரும்பினான் சுரும்பலற்றும் | " | " |
| | | எம்பெருமானோடு மேல் எல்லையான ஒற்றுமையை அடைதல் | | |
| 12. | 3. 3. 7 | சுமந்து... குன்றமே | மு.உ.(3. 1. 3)<br>மு. உ.(3. 2. 9) | யதாகச்ய:... ஸயோ...ப்ரஹ்மைவபவதி |
| ஸாம்பமுபைதி | | | | |
| 13. | 3. 3. 7 | சமன் கொள் வீடு தரும் | சா.உ (8. 12. 2) | ஏஷ ஸம்ப்ரஸாதோ ... நிஷ்பத்யதே |

| எண் | பாசுர எண் | திருவாய்மொழித் உபநிடதப் தொடர் / சொல்பெயரும் | உபநிடதத் தொடர் எண்ணும் | |
|---|---|---|---|---|
| 14. | 3. 7. 7 | சன்ம சன்மந்தாம் .. அப்பன் | " | " |
| 15. | 3. 6. 8 | துயரமேதருதுன்ப வின்ப வினைகளாய் | மு.உ (3. 1. 3) | புண்ய பாபே விதூய |
| 16. | 3. 9. 4 | தன்னாகவே கொண்டு | " | " |
| 17. | 7. 5. 3 | திருவடிதாட் பாலடைந்த | " | " |
| 18. | 9. 7. 4 | தன் திருமேனி ஒளி அகற்றித் தெளிவிசும்பு கடியுமே | " | " |

## *References and notes for Introduction*


1. *Sri Bhashya Srutaprakasika on the verse 'Paraṣaryavacassudhamupaniṣat'.*

2. *Sri Rangarajastavam Uttara Satakam Sloka 36, P.B. Annangaracharya comı tary p.67.*

3. *Haritasmriti: Prāpyasya brahmaṇo rūpam, prāptuścha pratyag-ātmanah prāptyupāyam, phalam prāptah, tathā prāpti-virodhi cha*

4. *P.B. Annangaracharya's Divya Prabandha Vaibhava Viveksha, T.A.Krishnamacharya, p.21*

5. *ibid. p.23*

6. *Bhagavat Vishayam Vol.I. p.204*

7. *Acarya Hrdayam Churnikas 40,42, 43, 50, 52 and 65.*

8. *Upadesaratnamaḷai hymn 39.*

9. *Bhagavat Vishayam Vol. I. p. 190-191.*

10. *Acarya Hrdayam Churnika commentary 220.*

11. *Taittriyopanisad Anandavalli 2.6: 'sokamayata bhahusyam prajayeyeti'.*

12. *ibid. Bhashya p.35.*

13. *Tiruvoymozhi 1.10.3*

14. *1. 10. 2 - 36 Padi*

15. *1. 10. 2 -24 Padi.*

16. *1. 10. 2 - 12 Padi.*

17. *Chandokya Upanisad :6. 2. 1 - 'sadeva somyedamagra asidekamevadivitiy*

18. *Tiruvoymozhi 2. 7. 12*

19. *2. 7. 12 -36 Padi*

20. *2. 7. 12 - 12 Padi.*

21. *Tiruvoymozhi 10. 10. 9;*

*22. 10. 10. 9 Arumpadam*

*23. Tatvatrayam Chur.4 with commentary*

*24. Taittiriyopànisad Anadavalli 5.1*

*'asnneva sa bhavati | asath brahmeti veda cheth |*

*asthi brahmeti cheth vedā | santhamenam tato vidhuhu |'*

*25. ibid Bhashya p.33:*

*aanandamayasadasttvajnanath moksasamśarow bhavati*

*26. Tiruvoymozhi 2. 6. 8*

*27. Tiruvoymozhi 1. 7. 5*

*28. 1. 7. 5 - 36 padi*

*29. Mundakpopanisad 3. 2. 3 :*

*nāyam ātmā pravacanena labhyo na ṃedhayā na bahunā śrutena |*

*yam evaiṣa | tena labhyas tasyaaiṣa ātmā vruṇute tanuṃ svāṃ | |.*

*30. nayam atma pravacanena labhyo na medhaya na bhahuna srutena M. U. 3. 2. 3*

*31. Tiruvoymozhi 6. 9. 11*

*32. 6. 9. 11 - 36 Padi*

*33. Tiruvoymozhi 2. 4. 2*

*34. 2. 4. 2 36 Padi*

*35. Tiruvoymozhi 3. 2. 5*

*36. Tiruvoymozhi 7. 2. 3*

*37. 7. 2. 3 - 36 Padi*

*38. Tiruvoymozhi 7. 3. 1*

*39. 7. 3. 1 - 36 Padi*

*40. Vedanta Sutras - Sri Bhashyam Vol. I Prakaranam 1. 1. 1 p. 15-16, Sacred books of the East Vol. 48 C. Thibaut*

*41. Bhagavat Gita 10. 10.*

## SELECT BIBLIOGRAPHY

### 1. Sanskrit Classics and Tamil Sources

1. Dasopanishad with Tamil commentaries for Madhatraya Bhashyas, ed. K Anantacharya,Rippon Press, Madras, 1900.

2. Sri Rangaramanuja's Kenopanishad, Kathopanishad Bhashyas with Introduction, translation and notes, ed. Uttamur T. Veeraraghavacharya, T. T. Devasthanams, Tirupati, 1949.

3. Sri Rangaramanuja's Prasna, Mundaka, Mandukya, Atharvasikopanishad Bhashyas with Upanishad Saram, Introduction notes, ed. Uttamur T. Veeraraghavacharya Ubhaya Vedanta Grandha Mala, Tirupati, 1949.

4. Sri Rangaramanuja's Taittereyopanishad, Itareyopanishad Bhashyas with Introduction and notes etc., ed. Uttamur T. Veeraraghavacharya, Ubhaya Vedanta Grandha Mala,Tirupati, 1951.

5. Sri Rangaramanuja's Chandokya Upanishad Bhashya with Introduction, translation and notes, ed. Uttamur T.Veeraraghavacharya, T. T. Devasthanams, Tirupat 1951.

6. Sri Rangaramanuja's Brahdaranyaka Upanishad Bhashya with Introduction, translation, and notes ed. Uttamur T.Veeraraghavacharya, T. T. Devasthanams, Tirupat 1954.

7. Sri Rangaramanuja's Swethasvathara Upanishad, Purushasukta Bhashya with Introduction, translation, and notes, ed. Uttamur T.Veeraraghavacharya, T.T.Devasthanams, Tirupati, 1955.

8. Kenopanishad (Sanskrit version ) ed. Academy of Sanskrit Research, Melkot 1986.

. Sri Ramanuja Vedartha Samgraha, ed. Academy of Sanskrit Res., Melkote, 1991.

0. Sri Ramanuja's Sri Bhashya with Sariraka Mimamsa Bhashyam, ed. Academy of anskrit Research, Melkote, Vol.I (1985), Vol. II (1987), Vol. III (1990), and Vol. IV 1991).

1. Bhaghavat Vishayam, ed. S. Krishnamacharya, with five commentaries, Vol.I to ,Noble Press, Triplicane, 1925-30.

2. Bhaghavat Vishayam, ed. S. Krishnaswamy Iyengar, with five commentaries ind two Arupadams, Vol.I in two parts (1975 and 1977), Vol.II (1979) and Vol. III 1987) Sri Vaishnava Sudarasanam, Tiruchi.

13. Tiruvoymozhi Arayireppadi, Panneyrayirappadi, Edu Avatharikaiyam, ed. Pudupattu Tiruvenkatacharya, 7 parts in two Volumes, Sriniketha Press, Madras, 1925-26.

### 2. Other Work s Consulted

1. Annangaracharya Swami, P. B., Tiruvoymozhi Divyartha Deepikai Urai, Vol. I with translation of Dravidopanishad Tatparya Ratnavali, Granthamala Press, Kancheepuram, 1933.

2. Annangaracharya Swami, P. B., Divya Prabandha Vaibhava Vivekaha with translation in Tamil by T. A. Krishnamacharya, Tirupati, Geethacharyan, Madras, 1992.

3. Annangaracharya Swami, P. B., Srimath Varavara Muni Granthamala, Kancheepuram, 1966.

4. Annangaracharya Swami, P. B., ed. Bhaghavat Vishayam with three commentaries,Kancheepuram, 1976.

5. Annangaracharya Swami, P. B., Srirangaraja Sthavam Uttara Satakam commentary,Kancheepuram.

6. Anantharangacharya, N. S., Five Upanishads (Isavasya, Kena, Katha, Prasna and Mundaka), Vijayanagar, Bangalore, 1984.

7. Anantharangacharya, N. S., Two Upanishads (Svetasvatara and Taittireya), Bangalore, 1985.

8. Duessen, The Philosophy of Upanishads, Edinburgh, 1908. Gadhi.P. B., Anantarya Swami Centenary Souvenir, ed. Sri Ramanuja Mission,Kancheepuram, 1974.

9. Gadhi. P.B., Anantarya Swami Centenary Souvenir, ed. Sri Ramanuja Mission, Kancheepuram, 1974.

10. Isavasyopanishad with six commentaries, ed. Academy of Sanskrit Research, Melkote, 1991.

11. Krishnaswamy Iyengar, S., ed. Guruparamparaprabhavam Arayirappadi, Srinivasa Press, Tiruchi, 1968.

12. Krishnaswamy Iyengar, S., ed. Mumukshupadi, Srinivasa Press, Tiruchi, 1970.

13. Krishnaswamy Iyengar, S., ed. Nalayira Divya Prabandham in 3 parts first edition, Tiruchi, 1981.

14. Krishnaswamy Iyengar, S., ed. Stotraratna commentaries etc., 2nd edition, Tiruchi, 1976.

15. Krishnaswamy Iyengar, S., ed. Kanninunchiruttambu commentaries, Tiruchi, 1993.

16. Krishnaswamy Iyengar, S., ed. Tiruviruttam with four commentaries, Tiruchi 1996.

17. Krishnaswamy Iyengar, S., ed. Sri Sukta Vyakyanam, 3rd edition, Tiruchi 1991.

18. Krishnaswamy Iyengar, S., ed. Purusha Sukta Vyakyanam, 3rd edition, Tiruchi 1991.

19. Krishnaswamy Iyengar, S., ed. Isavasyopanishad Vyakyanam in Tamil, Tiruchi 1990.

20. Krishnaswamy Iyengar, S., ed. Geetha Vyakyanam 9 to 12 chapters, Tiruchi, 1985.

21. Krishnaswamy Iyengar, S., ed. Yathindramada Deepikai and Karikavali Vivaranam, 2nd edition, Tiruchi, 1980.

22. Krishnaswamy Iyengar, S., ed. Sariraka Karikavali, Vol. I to IV, Tiruchi, 1965-1995.

23. Krishnaswamy Iyengar, S., ed. Vishnu Chitta Vijayam, Vol.I and II Tiruchi, 1963 & 1966.

24. Krishnamacharya Pandit V., Vedantasara of Sri Ramanuja with English Translation by M. B. Narasimha Iyengar, Adyar Library Series 83, 2nd edition, 1983.

25. Krishnamacharya T. A., Divya Prabandha Vaibhava Viveka translation, Geethacharyan, 1992.

26. Narasimhan, P., Gleanings from the Sri Bhashya, Sri Visistadvaita Res. Centre, Madras, 1996.

27. Narayanacharya, K. S., Basic concepts of Visistadvaita, Veda Vidya Prakashana, Dharwad,, 1990.

28. Max Muller, F., ed.The Vedanta Sutras with Ramanuja s Sri Bhashya, Sacred Books of the East, Vol. 48, reprint 1990.

29. Max Muller F., A History of Ancient Sanskrit Literature, Allahabad, 1926.

30. Purushothama Naidu, B. R., Tiruvoymozhi Idu translation 10 Volumes, University of Madras, 1971.

31. Purushothama Naidu, B. R., Acharya Irudayam (translation), 2 Volumes, University of Madras, 1964-65.

32. Pillai Lokham Jeer, Upadesarathnamalai commentary, United Press, Kanchi, 1916.

33. Pillai Lokham Jeer, Tiruvoymozhi Noorthanthadhi commentary, Kanchi, 1916.

34. Pillailokacharya, Tatvatrayam with Mamuni commentary, ed. Sri Vanamamalai Mutt, 1950.

35. Ramaswamy Ramanuja Dasar, ed. Tiruvoymozhi Idu Pramana Tirattu First three centums, Sri Kamalamba Press, Kumbakonam, 1924.

36. Raghavachar, S. S., Sri Ramanuja on the Upanishads, Prof. M. Rangacharya Memorial Trust, Madras, 1982.

37. Singaperumal Swami, Karpangadu, Sri Ramanuja Siddantha Prakasika, Goda Nilayam, Madras, 1984.

38. Srinivasachary, P. N., The Philosophy of Visistadvaita, The Adyar Library and Res. Centre, Madras, 1978.

39. Srinivasa Raghavan, A., Sri Rangaramanuja's Brahadaranyopanishad with English Translation, ed. Academy of Sanskrit Res. Melkote, 1995.

40. Van Butteneu, J. A. B., Ramanuja 's Vedartha Samgraha, Introduction, critical edition and annotated translation, Poona, 1956.

41. Varadacharya, K., Sri Bhashya Saram, Madras, 1965.

42. Varadacharya, K., Suda Rasa Manjari Vol. I, Sri Bashyam and Vol. II. Bhagavat Vishayam, 1981.

ஸ்ரீ:

# ஆசிரியர் நூல்களுக்குச் சில அறிஞர்கள் இதழ்கள் வழங்கிய மதிப்புரைகள்

## (1) பன்னீராயிரப்படி - ஓர் ஆய்வு (1989)

இவ்வாராய்ச்சி நூல் முழுதும் படிக்கத்தக்கதேயாயினும், உரை உத்திகள், சமய நோக்கு, உரை நயம், இலக்கணப் புலமை, தம் பெரிய போதமும், உரையின் தனித்தன்மையும் என்னும் இவ்வைந்து தலைப்புகளில் உள்ள விஷயங்கள் யாவும் அவசியமாகப் படித்து இன்புறத்தக்கன என்பது அடியேனுடைய துணிபு.

ஸ்ரீ உ. வே. தி. அ. க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி
திருப்பதி.

இந்த ஆய்வுக் கட்டுரை பலகூறுகளாகப் பிரிக்கப்பட்டும், ஒவ்வொரு கூற்றிலும் பலகூறுகள் அமைக்கப்பட்டும் உள்ளது. படிப்பவர்க்கு சித்தரஞ்ஜநகமாயுள்ளது.

ஸ்ரீ உ. வே. வேளுக்குடி K. வரதாசார்ய ஸ்வாமி,
சென்னை.

இந்த நூலாசிரியர் டாக்டர் எம். வரதராஜன், திருப்பதி திருவேங்கடவன் ஓரியண்டல் கலாசாலையில் முப்பது வருடகாலம் நியாய சாத்திரப் பேராசிரியராகப் பணிபுரிந்துவரும் ஆசார்ய ஸ்வாமியுமான ஸ்ரீமான் நியாய சிரோமணி தமிழ் வித்வான் உ. வே. தி. அ. க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி திருவடி நிழலில் பல்லாண்டு இருந்து கற்று உணர்ந்து அறிந்து தெளிந்து அமைத்த ஆய்வு அடங்கலே இந்த நூலாக இன்று உருவாகி உள்ளது.

தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் பொன். சௌரிராஜன்,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்

அறிய வேண்டிய அர்த்தங்கள் ஐந்தே என்பர். இவற்றையும், எம்பெருமானார் தரிசனத்தில் சிறந்த அர்த்தமான ஸாமாநாதிகரண்யம், அருளிச் செயல்களில் அதிகமாக வரும் 'ப்ரேமத்தில் பெண் பேச்சு' என்றதை இலக்கண முறைப்படி ஆய்ந்து நோக்கும் 'அகப்பொருள் விளக்கம்' இவற்றை ஆசிரியர் தெளிவாக இந்த உரையில் உள்ளபடி விளக்கியுள்ளார்.

பேராசிரியர்.V.V.ராமாநுஜன்
ஆசிரியர், யதிராஜ பாதுகா.

பன்னீராயிரப்படி - ஓர் ஆய்வு கண்டு மிகவும் பூரித்துப் போனேன் ஒரே மூச்சில் பெரும்பகுதியைப் படித்துப் பார்த்துக் களிப்பெய்தினேன். தங்களுடைய உழைப்பு அதில் பளிச்சிடுகிறது. ஸ்ரீ உ. வே. க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி பேருபகாரம் புலனாகிறது. பின்னிணைப்புகள் அனைத்துமே ஆய்வாளர்களுக்குப் பயன்படுமாறு அமைகின்றன.

டாக்டர்.R.ரங்கராஜன்,
மதுரை.

*DR. Varadarajan gives in this book examples of the versatile genius of the commentator, his great devotion to Nammalvar'and Acharyas. The appendices he gives will enable the readers to understand the commentary with ease.*

*Sri. U. Ve. T. S. Rajagopalacharya*
*Retd. Headmaster, H. H. School,*
*Triplicane.*

This is a painstaking effort and the researcher has presented in this work the sults of years of study in the traditional manner under a great scholar and of the plication of modern methodology and devices of research under an academician.

A. V.Subramanian

The Hindu Review.

You have studied 'Bhagavat Vishayam' assiduously for a number of years in e traditional way.and modern way, and this work is the fruit of that. I admire your cholarly achievement and congratulate you.

Professor K. Satchidandamurty,

UGC Vice Chairman.

Heavy material in eight chapters with twelve appendices on the commentary y Vadikesari Alagiya Manavala Jeeyar, is a fruitful study with a thoroughness quite seful to a student of Srivaishnavism.

K.C. Kamalaiah,

Triveni, Hyd.

The composition of a book from dictation has a fluency and grace. For real Bhakti, meditation the explanations of different Lord 's names such as Govinda, Rama, Kannan, etc., will be valued by Srivaishnavas. On the whole this is a good kainkarya for Vaishnavism.

M. K. T. Chari,

Selaiyur.

*2. வைணவ வழித் தோன்றல் வரலாறு (1993)*

*வைணவத்தின் சீர்மை வழி வந்த வாற்றினை*
*நைவளப் பண்ணேபோ லாய்ந்து - கைவண்ணத்தின்*
*திறமெலாம் காட்டிச் சுருங்க வுரையிட்ட*
*சிறப்பினை நெஞ்சேநீ உள்ளு.*
*பிள்ளைலோ கம்சீயர் யாத்த வியாக்கியையில்*
*உள்ளபடி தேர்ந்து உரைகொழித்து - மெள்ளத்*
*தரங்கநீர் சேதுகட்ட வுற்ற அணிலேபோல்*
*அரங்கேற வைத்தாரிவர்.*

*தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீ உ. வே.C.ஜகந்நாதாசார்ய ஸ்வாமி,*
*சென்னை.*

*உபதேசரத்தினமாலைக்கு பிள்ளைலோகம் சீயர் தம் பேருரையை நன்கு கற்று அதன் அருமை பெருமைகளைப் பிறரும் அறிந்து உபதேசரத்தினங்களைக் கொள்ளும் முறையில் பேராசிரியர் மா.வரதராஜன் ஸ்வாமி தெள்ளிய நடையில் இந்நூலை உருவாக்கியிருக்கிறார்.*

*ஸ்ரீ உ. வே. டாக்டர்.R.அரங்கராஜன் ஸ்வாமி,*
*மதுரை.*

*உபதேசரத்தினமாலை தங்களால் புதுப்பிறவி எடுத்திருக்கிறது. இதற்குப் பிள்ளைலோகார்ய ஜீயர் வரைந்த நல்லுரை எல்லாச் சிறப்புக்களும் அமைந்து முப்புரியூட்டினதாயிருக்கும். அவ்வுரையைத் தழுவித் தாங்கள் எழுதிய விளக்கம் பெண்ணுக்கும் பேதைக்கும் எளிமையாகப் புரியும்வண்ணம் அமைந்துள்ளது.*

*ஸ்ரீமான். S. K. இராமராஜன்*
*(கம்பராமன்) வேலூர்.*

3. *வைணவ விளக்கு (1994)*

*சிதறியிருக்கிற முத்துக்களை ஒன்று சேர்த்து நல்ல ஆரமாக அமைத்திருக்கிறீர்கள். ஆசார்யர்கள் கண்ட ஆழ்வார்கள் தனித்துக் கிடந்த தனியனுக்குக் கோஷ்டி அநுபவம் வழங்கியிருக்கிறீர்கள்.*

*ஸ்ரீமான்.S.K.இராமராஜன்*
*(கம்பராமன்) வேலூர்.*

*One can see that a very rich and diverse fare is presented in the 184 pages of the collection. It is a fund of valuable information and the presentation of each theme is expertly handled.*

*ஸ்ரீ.உ.வே.பேராசிரியர்.V.V.ராமாநுசன் ஸ்வாமி,*
*ஆசிரியர், எதிராஜ பாதுகா,*
*திருவல்லிக்கேணி.*

*A beautiful compendium of essays, naturally I first turned to திருப்பாவை தீங்கரும்பு and other essays of Goda Devi. Whether it is a micro view (all the pasurams) or macro view (ஓங்கி உலகளந்த), You convey your message in simple, unaffected terms, drawing us into the audience of Sri Darsana in an effortless way.*

*Dr. Prema Nandakumar,Literature,*
*Srirangam.*

*4 The Voice of Alwars and Acharyas (1997)*

*These papers of the author are the outcome of sustained research he has conducted in his special field. Sri Vaishnavism for the past two and half decades. We can find a variety of thoughts covering the range of important Alwars and Acharyas.*

*Prof. S. B. Raghunathacharya,*
*Vice Chancellar, R.S. Vidyapeeta.*

*The book, written in simple, and clear style; can be read with advantage for gaining a basic idea of Vaishnavism and its apostles.*

*Sri U. Ve. V. N. Gopala Desikan,*
*The Hindu Review.*

*There is useful information contained about Sri Vaishnava Sampradaya and on Tirumalai Ananthalwan. The young generation, particularly would benefit much from the exposition on Archavatara glory.*

*Sri. M. S. S. Varadan,*
*Columnist, Indian Express, Bangalore.*

*It is properly documented and written in an easy language and attractive style.*

*Prof. O. P. Pandey,*

*Professor of Sanskrit, Lucknow.*

*The very best topic is Sarira Sariri bhava in the works of Pillai Lokacharya. A worthy book.*

*Sri U. Ve. Kapisthalam A. Srinivasacharya,*

*Chennai.*

*Your foresight in working hard for months and selecting to make them in a book is quite laudable.*

*Sri M. K. T. Chari,*

*Selaiyur.*

*It is well written and its articles provide a lot of information, valuable to Srivaishnava devotees and lovers of Tamil Prabandams.*

*Dr. J Parthasarathy, Editor,*

*Sri Ramanuja Vani, Chennai.*

தலை சிறந்த சம்பிரதாயக் கருத்துக்களை எளிய இனிய நடையில் எழுதப்பட்டிருக்கும் கட்டுரைகளைக் கொண்ட இந்நூல் தமிழ் கூறும் நல்லுலகில் உள்ள அனைவராலும் வரவேற்கப்படும் என்று நம்புகிறோம்.

ஸ்ரீ உ. வே. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,

ஆசிரியர், ஸ்ரீவைஷ்ணவ சுதர்சனம்,

திருச்சி.

அனந்தாழ்வான், மைவண்ண நறுங்குஞ்சி தோற்றுவித்த நாடகம், திருமலை பற்றி ஏகமாக செய்திகள், தவிர தத்துவத்தையும் எளிதாக எடுத்துக் கூறமுடியும் என்பதை *Sarira Sariri bhava in the works of Pillai Lokacharya* போன்ற கட்டுரைகளை ஆழ்வார்களின் ஈரச்சொற் கோவைகளை ஆதாரமாகக் கொண்டு ஆராத அமுது படைத்திருக்கிறீர்கள்.

*Dr. Prema Nandakumar, Literature,*

*Srirangam.*

திருமலையில் இருப்பதால் நெடுமாலின் தெய்வத்தூண்டுதல் தங்களுக்குப் பொங்குமாக் கடல் போல் துள்ளி வருகிறது. ஆங்கில நடையும் தமிழ் போலக் கைவந்துள்ளது.

புலவர் கோவேந்தன்

ஆழ்வார்கள் ஆய்வு மையம்

சென்னை.

புத்தூர் ஸ்வாமிகளின் அணிந்துரையில் கூறுவது போல தெளிவும் எளிமையும் இனிமையும் ஒருங்கே அமையப் பெற்றுள்ள இந்த நூல் வைணவ தரிசனத்துக்குப் பயன்படும் மற்றொரு வைணவ விளக்கு எனில் மிகையாகாது.



தமிழ்ப் பேராசிரியர் அ. அ. மணவாளன்.

சென்னை.